௳ . வே. [illegible]

உடையார், [illegible]-20.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்கவாசகரென்னும்

# திருவாதவூரர்புராணம்.

இஃது,

கடவுண்மாமுனிவர்செய்தமூலமும்

காஞ்சீபுரம்

குமாரஸ்வாமிதேசிகராற்செய்த

பொழிப்புரையும்

திருவருணை

**சபாபதிஸ்வாமிகளால்**

பலஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

பிழையறப்பரிசோதித்து

**ஆ-இரத்தினவேலுமுதலியாரால்**

வாணீவிலாஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பித்து

சித்திரபடங்களுடன் ரிஜிஸ்டர் செய்யப்பட்டன.



1896.

[illegible]

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரர்புராணம்

## மூலமும் - உரையும்.

### சிறப்புப்பாயிரம்.

விநாயக துதி.

எழுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

பவளமால்வரையினிலவெறிப்பதுபோல்
பரந்தநீற்றழகுபச்சுடம்பிற்
றிவளமாதுடனின்றருளியபரமன்
சிறுவனைப்பாரதப்பெரும்போர்
தவளமாமருப்பொன்றொடித்தொருகரத்திற்
றரித்துயர்கிரிப்புறத்தெழுதுங்
கவளமாகளிற்றின்றிருமுகம்படைத்த
கடவுளைத்தினந்தொழுவாமே.

* இதன்பொழிப்புரை.

பெரியபவளமலையினிடத்திலே சந்திரிகை வீசுவதுபோல்சிவந்த தனதுதிருமேனியிற்பரவப்பூசியதிருநீற்றினழகானது உமாதேவியினது பசியதிருமேனியிலே பிரதிபலிக்கும்படி அத்தேவியுடனின்று திருநடஞ்செய்தருளிய பரமசி

* "பொழிப்பெனப்படுவது பொருந்தியபொருளை
பிண்டமாகக்கொண்டுரைப்பதுவே"

வனுடையபுத்திரனைப பெரியபாரதயுத்தத்தைத் தனதுவெண்மைபொருந்திய பெரியகொம்பொன்றை யொடித்து ஒருகையி லெழுத்தாணியாக வைத்துக்கொண்டு உயர்ந்தமஹாமேருகிரியை ஏடாகக்கொண்டு அதனிடத்தெழுதியருளுங் கவளத்தைத்தக் கொள்ளுகின்ற பெரியயானையினது திருமுகமபடைத்த விநாயகக்கடவுளை மதிலே தியானித்து இரண்டுகைகளையுங் குவித்து வணங்குவாமென்றவாறு.

## சபாபதி துதி.

### கலிவிருத்தம்.

இதந்தருமடந்தையொடிசைந்துயிருடம்புபோல்
விதம்படுலகங்களின்விரிந்தொளிவிளங்குவார்
மதங்கமொடுதுந்துமிவளங்கெழுமுழங்கவே
சிதம்பரநடம்பயில்செழுங்கழலிறைஞ்சுவாம்.

(இ-ள்.) இதத்தைத் தருகின்றசிவகாமியம்மை யுடனே பொருந்தி உயிருமுடம்பும்போலப் பலவகைப்பட்ட எல்லாவுலகங்களிலேயும்நிறைந்து சோதிசொரூபராய் விளங்குஞ் சபாநாயகரது மிருதங்கவாத்தியத்துடனே பேரிகையும்வளமபொருந்தமுழங்கச் சிதம்பரத்திலே நடனஞ்செய்யாநின்ற செழுமைபொருந்திய திருவடிகளைவணங்குவாமென்றவாறு.

## சிவகாமி துதி.

ஆடகசிதம்பரவணங்குமையணங்கிலா
நாடகனனந்தசுதகன்குபுளைபாங்கினு

ளேடகமணம்பொருவவெங்கணுமிசைந்துளாள
பாடகமிலங்குசிறுபங்கயமிறைஞ்சுவாம்

(இ-ள்.) பொன்னம்பலத்தினிடத்தேதங்கிய அழகிய உமாதேவி வருத்தமில்லாதநிருத்தஞ்செய்தருளுகின்ற சபாபதியினது அளவற்ற சுகத்தைநன்மையாகப் பெற்றுக்கொண்டு அவருடைய பாகத்தில்வாழ்பவள் இதழ்களையுடைய பூவிடத்திருக்கு மணம்போலச்சராசரங்களனைத்தினுநிறைந்திருக்கின்றவள் இப்படிப்பட்ட சிவகாமியம்மையினது பாடகங்கள்விளங்குகின்ற சிறியதாமரைமலர்போன்ற பாதங்களைவணங்குவாம்-எ-று. (௨)

## சுப்பிரமணியர் துதி.

துங்கமதகும்பவுயர்தும்பிமுகனெம்பிசீர்
தங்குஞெகிழஞ்சிறுசதங்கைகள்புலம்பவே
மங்கையுமைநண்குளிரவந்துலவுகின்றநா
ளங்கைமலர்கொண்டுமிகுமன்புடனிறைஞ்சுவாம்.

(இ-ள்.) பரிசுத்தமாகியமதசலத்தைப்பொழிகின்றமத்தகத்தையுடையஉயர்வாகியயானைமுகவிநாயகருக்கிளையமுருகக்கடவுளினது சிறப்புத்தங்கிய பொற்சிலம்புகளுஞ் சிறிய சதங்கைகளுஞ் சத்திக்கமங்கையாகிய உமாதேவியினது கண்கள் குளிரும்படிவந்து உலாவாநின்றபாதங்களை அழகிய கையினிடத்திலே மலர்களைக்கொண்டு அருச்சித்து மிகுந்த அன்புடனேவணங்குவாம்-எ-று. (௩)

நூல்வரலாறு.

தென்பொதியமாமுநிசிறக்கவருளெண்ணெண்
ணின்பவிளையாடலதெனுங்கடலுண்டுயேன்
மின்பயிலுமாமதுரைமேவுதமிழ்மாறன்
றன்பமறநல்குகதைசொல்லலுறுகின்றேன்.

(இ-ள்.) தென்றிசையில்விளங்கியபொதியமலையிடத்திருக்கும் அகத்தியமுநிவர் யாவருஞ்சிறக்கும்படி முற்காலத்திலே நைமிசாரணியவாசிகளாகிய முநிவருக்குஅருளிச்செய்தபேரின்பத்தைத்தருகின்ற அறுபத்துநான்கு திருவிளையாடலென்னுஞ் சமுத்திரத்திலே ஒளிவிளங்கியகுதிரைகளைமதுரைமாநகரத்திலிருந்த பாண்டியராஜனது துன்பநீங்கக்கொடுத்த கதையை அடியேன் சொல்லத்தொடங்கினேன் எ-று (சு)

அற்புதனிருந்தருள்பெருந்துறையடைந்தே
சிற்பரமுணர்ந்துதிருவாசகமுரைப்பார்
முற்பகலருந்தவமுயன்றுபெருமன்பா
லுற்பவமொழிந்தமைமொழிந்திடவொழிப்பாம்

(இ-ள்.) பரமசிவ னெழுந்தருளியிருந்த திருப்பெருந்துறையென்னுந்தலத்திற்சேர்ந்து அறிவுருவாகிய சிவத்தையறிந்து திருவாசகமுரைத்தருளியமாணிக்கவாசக ரானவர் முன்னாள்களிலே அரியதவங்களை முயன்றுபெற்ற அன்பினாலே சநநமொழிந்து மோட்சமடைந்த கதையைச்சொல்லிப் பிறவித்துன்பத்தை நீக்குவாமென்றவாறு. (௫)

(அவையடக்கம்.)

கொண்டலனகண்டனருள்கொண்டுதமிழ்பாடித்
தொண்டுபடுமன்பர்செயல்சொன்னநெறிதன்னால்
வண்டமிழ்தெரிந்தவர்கண்மற்றெனதுகுற்ற
முண்டெனினுநன்கிதெனவுள்ளுவர்களெள்ளார்.

(இ-ள்.) மேகம்போன்ற நீலகண்டத்தையுடைய பரமசிவனது கிருபையைக்கொண்டு திருவாசகமென்னுந் தமிழ் வேதம்பாடி அடிமைத்திறஞ்செய்த அன்பராகிய மாணிக்கவாசகர் சரித்திரத்தைச் சொல்லியபடியால் வண்மைபொருந்திய தமிழையறிந்த புலவர்கள் அடியேனசொல்லும் பாடலிற் குற்றமுண்டாயிருந்தாலும் அக்குற்றத்தைக்கொண்டு இகழாமல் இதுநல்லதென்று கொள்ளுவார்கள்-எ-று. (சு)

(நூற்பயன்.)

இந்தவளநற்கதையியம்பினநயந்தே
சிந்தையினினைப்பவர்செவிப்புலனிறைப்போர்
புந்திமகிழப்புவிபுரப்பருடல்விட்டா
லந்தவுலகத்தினிலரன்சபையில்வாழ்வார்.

(இ-ள்.) இந்தத்தெய்வீகமுள்ள நல்லகதையைச் சொன்னவர்களும் நயப்புடனேமநதிலே சிந்திப்பவர்களும் செவியினிடத்தே கேட்டவர்களும் மனமகிழ்ச்சியையடையப் பூலோகமுழுவதும் அரசாட்சிசெய்வார்கள் தேகநீங்கிஞ

ல்அந்தச் சிவலோகத்திலே சிவசமுகத்தில் வாழ்ந்திருப்பார்கள்-எ-று. (எ)

சிறப்புப்பாயிர-முற்றும்.

# மந்திரிச்சருக்கம்.

கலிவிருத்தம்.

முக்கணொருநான்குபுயமைந்துமுகமூன்றோன்
சொக்கனருணன்மைபெறுதொன்மைதிகழ்கின்று
டக்கடுவிடத்தையரனுக்கருள்வதென்றே
மைக்கடலிலைவகலொழிவையைவளநாடு.

(இ-ள்) மூன்றுகண்களையும் நான்குபுயங்களையும் ஐந்துதிருமுகங்களையுமுடைய மூலகாரணராகிய சொக்கநாதர் அருளுகின்ற நன்மையைப்பெறறதாயும பழையதாயுமவிளங்குகின்ற நலலநாடாவது அந்தகடியவிஷத்தைப்பரமசிவனுக்குக்கொடுப்பதென்று கடலினிடத்தேபொருந்துதலொழித்த வையையாறுசூழ்ந்த வளப்பத்தையுடைய பாண்டியநாடு-எ-று. (க)

நீண்டகயிலைக்கிறைநிகழ்ந்தவருளாலே
பூண்டமுநிமெய்த்தமிழ்புகன்றதிருநாடு
மூண்டபகைசெற்றுலகமுற்றுமரசாளும்
பாண்டியனலங்குலவுபாண்டிவளநாடு.

№ 1.




1870 (பாண்டியன்) மந்திரி.

(இ-ள்.) நெடியகயிலாயகிரிக்குத் தலைவனாகிய பரமசிவன் கிருபையினாலே அருள்செய்ய அவ்வருளைத்தரிக்கப்பெற்ற அகத்தியமுனிவர் தங்கியிருக்கு மெய்ம்மைபொருந்திய இயலிசைநாடகமென்னு முத்தமிழையுஞ்சொல்லிய சிறப்புப்பொருந்தியநாடாவது மூண்டுவந்த பகைகளைக்களைந்து உலகமுழுவதும் அரசாட்சிசெய்யும் பாண்டியனுடைய நன்மைமிகுந்த வளப்பத்தையுடைய பாண்டியநாடு-எ-று. (உ)

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

மேவுமூர்வளம்பலவுமிருந்துளநாடதனினலம்
பாவுமூர்பழைமறைதேரந்தணர்கள்பயின்றுளவூர்
தாவுமூர்விடையேறித்தங்கியவூரங்குறையுந்
தேவரூரினுமேன்மைசிறந்ததிருவாதவூர்.

(இ-ள்.) பலவளங்களுமிருந்துள்ளவூர்களையுடைய அந்தப்பாண்டியநாட்டிலே நன்மைமிகுந்தவூராயும் ஆதிநூலாகிய சதுர்வேதங்களுங் கிரமமாகத்தெரிந்த அந்தணர்கள் நிறைந்திருக்கின்றவூராயும் தாவிநடக்கின்ற இடபவாகனமேறிய பரமசிவன் எழுந்தருளியிருக்கு மூராயுமிருப்பது அவ்வானுலகத்திருக்கின்ற தேவர்களது பொன்னகரத்தினும் அதிகமேன்மைசிறந்த திருவாதவூராம்-எ-று. (௩)

இதுவுமது.

அந்நகரின்மறையோரிலருள்புனைமாத்தியர்குலத்திற்
றன்னிகரில்சைவநெறிதலைவனவன்றனித்தேவி

மின்னனையாடிருவயிற்றின் மென்கொடிபங்கினனருளாற்
றென்னவன் செங்கோன்முதல்வர் திருவவதாரஞ்செய்தார்

(இ-ள்.) அந்தவாதவூரில்வாழ்கின்ற பிராமணவருணத்திலே கிருபையையுடைய ஆமாத்தியர்குலத்திலே தனக்கு நிகரில்லாத சைவசமயத் தலைமையையுடையவர் ஒருபிராமணர் அவருடைய ஒப்பற்றதேவியானவள் மின்னலையொத்த வடிவினையுடையவள் அந்த அம்மாளுடைய திருவயிற்றிலே உமாதேவியையொருபாகததிலே யுடையபரமசிவனருளினாலே பாண்டியன் செங்கோன் முறைக்குமுதன்மந்திரியாராகிய மாணிக்கவாசகர் திருவவதாரஞ்செய்தாரென்றவாறு. ()

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

பொய்ம்மையாமுலகின்மாயப்பொங்கிருளகலவன்னோர்
தம்மையாழ்நரகிற்றள்ளுஞ்சமயதாரகைமழுங்க
வெம்மையாளுடையானன்பரிதயதாமரைகளெல்லாஞ்
செம்மையாய்மலருஞானத்தினகரருதயஞ்செய்தார்.

(இ-ள்.) பொய்ம்மையாகின்ற உலகத்திலே மாயையென்னுமிக்கவிருள்நீங்கவும் அவ்விருளி லிருக்கின்றவரை ஆழ்ந்தநரகத்திலேதள்ளுகின்ற உலகாயமுதலிய சமயங்களென்னும் நட்சத்திரங்கள் மழுங்கவும் எம்மையடிமையாகக்கொண்ட சிவனடியார்களுடைய இதயகமலங்களெல்லாஞ் செம்மையாகிமலரவும் மாணிக்கவாசகராகிய ஞானசூரியரானவருதயஞ்செய்தாரென்றவாறு. (ரு)

## நாமகரணம்

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

மருவாதநெறிபூண்டமதத்தனென்னும்புத்தனுடன்
பெருவாதுவென்றுசிவன்பெருநாமமிகவளர
வொருவாதபிறவியிற்சென்றொருநாமமுறாதவர்க்குத்
திருவாதவூரரொனுந்திருநாமந்தரித்தார்கள்.

(இ-ள்) நல்லோர்களங்கீகரியாதமார்க்கத்தைக்கைக்கொண்ட உன்மத்தனாகிய புத்தனுடனேபெரியவாதுவென்று சிவனுடைய மகிமைபொருந்திய திருப்பெயர்மிகவும் ஓங்கத்தக்கதாக நீங்காத பிறவியிலேபுகுந்து ஒருபெயர்தரியாத மாணிக்கவாசகர்க்குத்திரு வாதவூரரொன்னுந் திருப்பெயர்தரித்தார்கள்-எ-று. (சு)

இதுவுமது.

தவமெனும்பெரியவித்துட்டங்கியேயங்குதித்துப்
பவமெனும்பங்கநீங்கிப்பயிலருட்குருந்துண்டாகி
யவமெனுங்களைகணீங்கியாக்குவோனருளாலுண்மை
சிவமெனும்விளைவுண்டாகவளர்ந்ததுதெய்வச்சாலி.

(இ-ள்.) தவமென்னும்பெரியவித்தினிடத்திலேதங்கியிருந்து முளைத்துச்சநநமென்னுஞ் சேற்றினின்று நீங்கிப் பொருந்துகின்ற அருளென்னுங் குருத்துவிட்டு அவமென்னுங்களைநீங்கி யாவையும் உண்டாக்கும் பரமசிவனுடைய அருளினாலே சிவமென்னும்விளை வுண்டாகவளர்ந்தது மாணிக்கவாசகரொன்னுந் தெய்வீகமுள்ள செந்நெல்-எ-று. (எ)

## அன்னப்பிராசனம்.

தேனினொடுகரும்பினெழுஞ்செழும்பாகுமுக்கனியு
மானினறும்பாலுமுடனளவியுள்ளங்களிகூர
வினைமிகும்பலயோனிப்பிறவியெனும்பசிதீர
ஞானவமுதண்பார்க்குநயந்தமுதநுகர்வித்தார்.

(இ-ள்.) இழிவுமிகுந்த அனேகயோனிகளிற் சென்றுபிறக்கும் பிறவியென்னும் பசிநீங்க ஞானாமிர்தம் உண்ணும் மாணிக்கவாசகர்க்குத் தேனுடனே கரும்பினிடத்துண்டாகின்ற செழுமை பொருந்திய பாகும்பலாப்பழம் வாழைப்பழம் மாம்பழமென்னும் முக்கனிகளும் பசுவினதுநல்லபாலும் ஒன்றாகக்கலந்து மாமகிழ்ச்சியடைய நயப்புடனேஉண்பித்தார்கள்-எ-று. (அ)

## சௌளம்.

காயமுடனுயிர்முயலுங்கருமமெலாம்பரனருளாற்
றூயமனத்துணர்ந்துவினைத்தொகையெழுதிநாடோறு
மாயதுயர்சுகமளிக்குமயமன்கணக்கிலரும்பாவத்
தீயசிகையில்லார்க்குச்சிறந்தசிகைகவருவித்தார்.

(இ-ள்.) உடலுமுயிருஞ் சேர்ந்துநின்று முயன்றுசெய்யுந் தொழிலெல்லாம் பரமசிவனுடைய அருளினாலே பரிசுத்தமான மநதிலே அறிந்து நல்வினை தீவினைத்தொகைகளையெழுதி அவைகட்கீடாகநாள்தோறும் அனுபவிப்பதற்கான சுகதுக்கங்களைவரையறுத்து நியதிசெய்யுங்கூற்றுவனுடைய கணக்கில்அடங்கிய பாவத்தீமையாகிய குடுமியில்லாத மாணிக்கவாசகர்க்குச் சிறப்புப்பொருந்திய குடுமியைவைத்தார்-எ-று. (கூ)

## வித்தியாரம்பம்.

குவலயமங்கையைநீடுகோலஞ்செய் கரும்பொன்னு
நவமணியுங்குவைசெய்துநன்குடன் மங்கலநாளிற்
றவமணமுந்திருநீற்றின் றன்மணமுந்தவறாத
சிவமணமும்பெறக்கல்விச்செல்விமணம்புணர்வித்தார்.

(இ-ள்.) நாடுநகரங்களைமிகவுஞ் சிறப்பாக அலங்காரஞ்செய்து அரியபொன்னும்நவரத்நமுங் குவிகதுவைத்து நன்மையுடனே ஒருசுபதினத்திலே தவமணமுந் திருநீற்றுமணமுந் தவறில்லாத சிவமணமும் பெறும்படிக்கு ஒருஉபாத்தியாயர் முன்னிலையிலே கல்வியென்னுமங்கையை மாணிக்கவாசகருக்கு மணஞ்செய்வித்தார்கள்-எ-று. (௰)

## உபநயனம்.

இதுநூன்மற்றல்லதுநூலில்லையெனுமறுசமய
விதநூலுந்தலநூலும்விரிந்தபுராதனநூலும்
பொதுநூலென்றுலகனைத்தும்புகழ்மறைநூலுஞ்சைவ
முதுநூலுந்தரிப்பார்க்குமுந்நூலுந்தரித்தார்கள்.

(இ-ள்.) மெய்ம்மையுள்ள நூலிதுவேயல்லாமல் இப்படிப்பட்ட நூல்வேறேயில்லையென்று வாதிக்கும் சட்சமயிகள்நூல்களும் ஸ்தலபுராணநூல்களும் விரிந்துவிளங்குகின்ற பதினெண்புராணநூல்களும் உலகமெல்லாம் பொதுநூலென்றுபுகழ்கின்ற நாலுவேதநூல்களும் பழைமையாகிய சிவாகமநூல்களுந் தரிப்பவராகிய மாணிக்கவாசகருக்கு முப்புரிநூலுந் தரித்தார்கள்-எ-று. (௰க)

மிக்கலையுஞ்செழுநீருமதிக்கலையுமிலைக்குமவ
ரக்கலையுந்தோளர்புலியதட்கலையர்நல்லருளா

லொக்கலையும்பிறக்கலையுமொழிந்திடுமாநமகலையு
மெக்கலையுங்கற்றுணர்ந்தாரீரொட்டாண்டெல்லையினில்.

(இ-ள்.) மிகுந்து அலைகின்ற செழுமைபொருந்திய கங்காநதியும் மூன்றாம்பிறையுந்தரித்தவராயும் எலும்பணியலைகின்ற தோளையுடையவராயும் புலித்தோலாகியவுடையையணிந்தவராயு மிருக்கின்ற பரமசிவனுடைய நல்லகிருபையினாலே தேகபந்துக்களையும் பிறவித்துன்பதசையும் நீக்குகின்ற சிவாகமங்களும்மற்றெந்த நூல்களும் பதினாறுவயதளவிலேகற்றறிந்தார் மாணிக்கவாசகர் எ-று. (௫௨)

உமைபங்கரனுக்கன்பாகியுண்மையறிந்துலகமெலாம்
பிழைக்கவருட்கவிபாடும்பெரியவர்தஞ்செயலெல்லாந்
தழைத்தகலத்தமிழ்மாறன்றக்கோர்களுரைப்பவறிந்
தழைத்துரிமைத்திறநல்கியகலாநண்பாயினான்.

(இ-ள்.) மானேந்தியகையினையுடைய பரமசிவனுக்கு அன்பராகி மெய்ப்பொருளறிந்து உலகமெல்லாம் பிழைக்கும்படித் திருவாசகம்பாடிய மாணிக்கவாசகருடைய செய்கையெல்லாந்தழைத்திருக்கின்ற தமிழைவளர்க்கும் பாண்டியராஜனவன் பெரியோர்கள் சொல்லக்கேள்விப்பட்டு அவரையழைப்பித்துத் தனக்குரியராக்கி அவருக்குநீங்காதசினேகனானான். எ-று. (௫௩)

சங்கோலமிடும்பழனத்தடம்புடைசூழ்வாசவூ
ரெங்கோவின்செய்கையறிந்தியல்புடையோரெனநாடிப்
பொங்கோதவேலைநிலம்புரந்துபெரும்பகைதுரந்து [கி.
செங்கோன்மைமுறைநடத்துஞ்செழுந்தலைமைத்திறநல்

(இ-ள்.) சங்குகள் சஞ்சரிக்கின்ற விசாலமாகிய வயல்களின்புடை சூழ்ந்த திருவாதவூரிலவதரித்த மாணிக்கவாசகருடைய கல்விமுதலியவைகளின் வல்லமைதெரிந்து தகுதியையுடையதொன்றறிந்து மிகுந்தசதுரங்கத்தையுடைய கடல்சூழ்ந்தபூவுலகத்தை இரக்ஷித்து சத்துருக்களைக் களைந்துமனுநீதிமுறையை நடத்தும் முதன்மையாகிய மந்திரித்தனங் கொடுத்தான் பாண்டியராஜன்-எ-று.()

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்)

தென்னவன்பிரமராயனென்றருள்சிறந்தநாம
மன்னவர்மதிக்கநல்கிவையகமுய்யவாக
மின்னவமணிப்பூணுடைவெண்மதிக்கவிகைதண்டு
பொன்னவிர்கவரிவேழமளித்தனன்பொருனைநாடன்.

(இ-ள்.) பின்னுமரசர்களெல்லாமதிக்கும்படி தென்னவன்பிரமராயனென்று சிறக்கப்பெற்ற ஒருதிருப்பெயர் கொடுத்து உலகம்பிழைக்கும்படி மினுங்கின்ற நவரத்நஆபரணமும் பீதாம்பரமும் வெள்ளியசந்திரவட்டக்குடையுஞ்சிவிகையும் பொற்பிரகாசமுடைய வெண்சாமரங்களும் யானைகளுங்கொடுத்தான் பாண்டியராசன்-எ-று. (௰௫)

இந்திரச்செல்வம்போலவிசைந்துளவின்பமெய்தி
மந்திரத்தலைமைபூண்டவண்புகழ்வாதவூரர்
தந்திரத்தொகுதிசூழத்தாரகைகணங்களோடும்
அந்தரத்திழிந்துமண்மேலமர்ந்தவெண்மதியமொத்தார்.

(இ-ள்.) இந்திரசம்பத்துபோல இசைந்திருக்கின்ற பாக்கியத்தினால் இன்பத்தைப்பொருந்தி முதன்மந்திரியாகப்பெற்ற வளம்

பொருந்திய புகழையுடைய வாதவூராரானவர்மற்றமந்திரிகள் பிரதானிகள் கூட்டங்கள்சூழ இருத்தலால் நக்ஷத்திரக்கூட்டங்கள் சூழ்ந்திருக்க ஆகாசத்தினின்றிழிந்து பூலோகத்திலமர்ந்த வெள்ளியசந்திரனையொத்தார்-எ-று. (மசு)

பெருங்கடனாகநீதிபெருக்கியேதருக்குகல்கி
யிருங்கடகத்தோண்மேல்வைத் தீண்டருள்பூண்ட சேரவு
கருங்கடாகமெட்டுங்காளமாநாகமெட்டும் [ங்
டரங்கெடவுலகபாரம்பரித்ததனர்திருத்தமிக்கார்.

(இ-ள்.) பெரியகடமையாக நீதியைவிருத்திபண்ணி யாவர்க்குங்களிப்பை யுண்டாக்கிப் பெரியசங்கணமணிந்த தன்னுடையதோளின்மீதுவைத்துக் காக்குங்கிருபையையுடைய பாண்டியராஜனும் கரியமதம்பொழிகின்ற அஷ்டகயங்களும் விஷத்தையுடைய அஷ்டமாநாகங்களுஞ் சுமக்கின்ற பூமிபாரம் நீங்கத்தாமே சுமந்தார்மாணிக்கவாசகர்-எ-று. (மஎ)

காதலித்தறஞ்செய்வோர்க்குக்கவசமுங்கண்ணுமாகி
யேதிலாக்கிடும்பையாகியிறைஞ்சினர்க்கின்பமாகி
யாதுலர்க்கன்னையாகியரனடிக்கன்புமிக்கார்
பூதலத்திறைவனாணைபொதுவறநடத்துநாளில்.

(இ-ள்.) விருப்பங்கொண்டு தருமஞ்செய்பவர்க்குத் துன்பம் வராமற்காக்கின்ற ஒருகவசமாகியும் சிறந்தகண்களாகியும் மற்றவர்களுக்குத் துன்பத்தைத் தருகின்றவராயும் வணங்கினவர்களுக்கு இன்பத்தைத்தருகின்றவராயும் ஏழைகளுக்குத் தாயாகியும் சிவனது திருவடியிலே அன்புமிகுந்தவருமாகிய மாணிக்கவாசகர் பூவுலகத்திற் கரசனாகிய பாண்டியராசனுக்கிணையைப் பொதுமைதங்க நடத்துகின்றநாளில்-எ-று. (மஅ)

பற்பலபொருளாயுள்ளபாசமுமதனைமேவி
யுற்பவபேதமானவுடம்புயிரொடுங்குமாறும்
அற்புதபுத்திமுத்தியளித்தருளாலேமேலாந்
தற்பரநடத்துமாறுமுணர்ந்தனர்சைவநூலின்.

(இ-ள்.) பலபலசத்திகளாயிருக்கின்ற மலங்களும் அம்மலங்களைப்பொருந்தி எழுவகைப்பிறவிதோறும் பேதப்படுகின்ற உடம்பும் உயிரும் ஒடுங்குகிறவிதமும் ஆச்சரியமாகப் பந்தமோக்ஷங்களைக்கொடுத்துக் கிருபையினாலே மேலாகியபரமசிவன் நடத்தும் விதமும் சிவாகமங்களாலறிந்தார்மாணிக்கவாசகர்-எ-று. (௰௬)

அவ்வியமநத்தினாலேயனைததுருவங்கள்கூடி
யிவ்வுயிர்பிறந்துமீளவிறந்திடுமென்றிரங்கி
வெவ்வெயில்வருத்தமுற்றார்மென்னிழல்விரும்புமாபோ
னவ்வியுமழுவுமேந்துநம்பனுக்கன்புமிககார்.

(இ-ள்.) அழுக்காற்றையுடைய மநத்தினாலே எல்லாவுருவங்களோடுங் கூடியிந்தவுயிர்பிறந்து மறுபடியிறந்திடுமென்று இரக்கமுற்றுக்கொடியவெய்யிலிலே வருத்தப்பட்டவர்கள்மெல்லிய நிழலையிச்சிக்கு மாறுபோலமானுமழுவுமேந்திய பரமசிவனிடத்திலே அன்புமிகுந்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௰௭)

தீத்திரவினையினாலேசிறைப்படுமுயிரையெல்லாம்
பார்த்தனருலகவாழ்விற்பயனிலையென்றுதேர்ந்து
கூத்தினர்தன்மைவேறுகோலம்வேறுருகுமாப்போ
னீத்தனர்மநத்தின்முன்போனிகழ்த்தினர்வழுதிநீதி.

(இ-ள்.) பொல்லாதிவினையினாலே கட்டுப்பட்டுப்பிறப்பிறப்பில் வருந்துகின்றசீவகோடிகளைப்பார்த்து உலகவாழ்வில் ஒரு

பிரயோசனமு மில்லையென்றுதெளிந்து கூத்தாடிகளுடைய கருத்துவேறும்வேஷம்வேறுமாவதுபோல உலகவாழ்க்கையைப் பொய்யென்று மநதிலேநினைத்தவராய் முன்போலபாண்டியராசனுடையநீதிமுறை நடத்திக்கொண்டு வந்தார்திருவாதவூரர்-எ-று. ()

வரமுடன்புவியிறமேருன்றுமறையவர்க்கிறைவருண்மை
தருமுணர்வென்னுநாலாஞ்சத்தினிபாதமெய்தி
பரமவஞ்செழுத்துமொன்றும்பராபரமுணர்ந்துஞாந
குருபரன்றிருத்தாள்சென்றுகூடுதலவேண்டுமென்று.

(இ-ள்) அனுக்கிரகத்தினாலே பூலோகத்திலே திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகர் உண்மையறிவைத் தருவதெனப்பட்ட அதிதீவர பக்குவத்தைப்பெற்றுஉயர்ந்த அஞ்செழுத்தின் பொருளாயுள்ள சிவத்தையறிவிக்கும்ஞானசாரியன் திருவடியைக் கூடல்வேண்டுமென்று நினைத்தார்-எ-று. (உஉ)

மற்கடவிலங்குதன்றால்வளங்கெழுவிளவின்மேவு
நற்கனிகொள்ளவேண்டிநயநதுகலலெறிவார்போலச்
சற்குருவுளரோவென்றுநாடுவார்தர்க்கமெல்லாஞ்
சொற்கலைஞானசைவர்தம்முடன்சொல்லலுற்றார்.

(இ-ள்.) குரங்காகியமிருகத்தினாலே வளம்பொருந்தியவிளவினுடைய நல்லபழம்பெறவிரும்பி நயப்புடனே கல்லைவிட்டெறிவார்கள்போல் நல்லகுருவுண்டோவென்று தேடுவாராகிய மாணிக்கவாசகர் வாதங்களெல்லாஞ் சொல்லுகின்ற கல்வியிலேவல்ல சைவாசாரியர்களுடனேபேசிப் பிரசங்கமபண்ணினார்-எ-று. ()

வளங்கெழுபுவியினுள்ளவாவியுங்காவுமோடி
விளங்கிசைவண்டுதண்டேன்மிகுமலர்த்தேடுமாப்போ

ளுளங்கொளநிமலனன்றூலோதினருண்மையெல்லா
மளந்தறிவுணர்ந்ததீரர்யாவரொன்றுயுநாளில்.

(இ-ள்.) வளம்பொருந்திய பூலோகத்திலேயுள்ள தடாகங்களிலுஞ் சோலைகளிலுஞ்சென்று விளங்குகின்றஇசையையுடைய வண்டுகள்குளிர்ந்த தேனிறைந்தமலர்களைத் தேடுவதுபோல மனங்கொள்ளச்சிவாகமங்களைக்கற்றறிந்த மாணிக்கவாசகர் மெய்ப்பொருளெல்லாம் அளவைசெய்து அறிவிலேயறிந்ததன்மையையுடையஞானசாரியர்யாவரொன்றுயுநாளில்-எ-று. (உ௪)

சந்தவிருத்தம்.

மேதகுவனிதையரொங்கணும்வீசியக்கவரியசைந்தெழு
மாதவமுநிவர்களந்தணர் மாசறுகவிஞர்செறிந்திட
வேதமின்மதிகுலபுக்கவனேர்செழுமணமுடியின்றிர
ளாதவன்மிசையெழவந்தரியாசனமதனிலிருந்தனன்.

(இ-ள்.) மேன்மையையுடைய மங்கையர்கள் வீசுகின்றசாமரைகளெங்கு மசையவும் மகத்தாகிய தவஞ்செய்கிற முநிவர்களும் பிராமணர்களும் குற்றமற்றவித்துவசனங்களும் நெருங்கவும் பழுதில்லாத சந்திரகுலத்திலேவந்த அரிமருத்தன பாண்டியராஜனவன் அழகுபொருந்தியதிரட்சியையுடையமணிகள்பதித்தகிரீடமாகிய சூரியன் சிரசிலேஉதயமாகும்படிவந்து சிங்காதனத்திலெழுந்தருளியிருந்தான்-எ-று. (உ௫)

தாதகிமார்பனெடும்புவிசார்தருமால்கடலின்கரை
தீதிலமாதுரகங்கொடுசீர்கெழுமாரியர்வந்தன
ரோதமிலாறதுகண்டனமியாமெனவேதொழுதன்பொடு
மேதினிகாவலன்முன்சிலமேதகுதூதர்விளம்பினர்.

(இ-ள்.) அப்போது ஆத்திமாலையணிந்தமார்பையுடையசோழராஜனது செடியதேசத்திலேசேர்ந்த கடற்கரையிடத்தே குற்றமற்றமேன்மைபொருந்திய குதிரைகள்கொண்டு சிறப்புப்பொருந்திய ஆரியதேசத்தார் வந்திருக்கின்றார்கள் பழுதற்ற பாண்டியராஜனே யாங்களது பார்த்தோமென்று வணங்கி அன்பினுடனே புவிகாவலனாகிய அரசன்முன்னேமேன்மைபொருந்திய சிலதூதர்கள் சொன்னார்கள்-எ-று. (உசு)

ஏவல்செய்வார்களிலிங்கிவரேபரிவானவரொன்றிகன்
மேவியதூதரைவன்றிறன்மீனவர்கோனுமகிழ்ந்துபின்
வாவுநமாதுரகங்கொடுவாருமெனாவுடலுந்தன
தாவியுமாயரனன்புடையார்முககாடிமொழிந்தனன்.

(இ-ள்) நம்முடை யவேவல்செய்பவர்க்குள்ளே இவர்களே அன்புடையவர்களென்று அந்தவலிமைபொருந்தியதூதர்களைச்செளரியத்தையுடைய பாண்டியராஜன்மகிழ்ந்து பின்புதாவுகின்ற நல்லகுதிரையைக்கொண்டு வாருமென்று தனதுடலுமுயிரும் போன்றவராயுஞ் சிவனிடத்திலே அன்புள்ளவராயுமிருக்கின்ற வாதவூரர்முகத்தைப்பார்த்துச்சொன்னான்-எ-று. (உஎ)

மீனவர்கோன்மொழியின்படிவேணியனேசரிசைந்தபின்
ஞானசோதியுடன்புவியாள்பவன்வாசிகொளும்படி
வானவிமானமெனுந்திருவாழ்வுளகோயில்புகுந்துதன்
னீனமிலாநெறிவந்தபொன்னேமெழுகோடிவழங்கினன்.

(இ-ள்.) அப்படிச்சொன்ன பாண்டியராஜனுத்தாரப்படிசிவனுக்கு நேசராகியவாதவூரர் உடன்பட்டபின்பு மலர்ந்தமுகத்தையுடையவனாய்ப் பூவுலகையாளுகின்ற பாண்டியராஜன் குதிரைகொள்ளும்படிக்குத் தெய்வவிமானமென்று சொல்லத்தக்க செ

ல்வம்பொருந்திய அரண்மனைக்குள்ளேபோய் நல்வழியிற்சம்பாதித்ததன்னுடைய திரவியத்திலே நாற்பத்தொம்பதுகோடி பொன் கொடுத்தான்-எ-று. (உஅ)

விற்படைவெற்றிமடந்தையுமிக்கமலர்த்திருவும்பயின்
மற்புயவெற்பினனங்கயல்வைத்தவலத்தன்வழங்கிய
பொற்புமிகுத்ததனங்கொடுபொற்கவனப்பரிகொண்டிட
நற்பயணத்தைதமுயன்றனர்நக்கனைநெக்குணர்கின்றவர்.

(இ-ள்.) விற்படையுடனேவிஜயமங்கையும் மேலாகிய தாமரைமலரிலிருக்கின்ற ஸ்ரீதேவியுந் தங்குகின்றபுயத்தை யுடையவனுகியும் மீனக்கொடியை வலதுபக்கத்திலுயர்த்தவனுயு மிருக்கின்ற பாண்டியராஜன்கொடுத்த அழகுமிகுந்த திரவியத்தைக்கொண்டு வேகத்தையுடைய சிறந்தகுதிரையைக்கொள்ளுதற்கு நல்லவேளையில் பிரயாணங்கொள்ள முயற்சிசெய்தார் பரமசிவனையே உருகி நினைக்கின்றமாணிக்கவாசகர்-எ-று. (உக)

மெய்த்தவருற்றபெருந்துறைவித்தகளைக்குறுகும்படி
யித்தகுநற்பொருள்கொண்டினிப்படியிற்செலுமென்றடி
னத்தகுயுக்தியொழிந்துயிரற்புதமுத்திபெறும்படி
யுய்த்துளசத்தியுடன்பொருவொத்தனனுத்தமபஞ்சவன்

(இ-ள்.) உண்மையாகியதவத்தினையுடையோர்களிருக்கின்ற திருப்பெருந்துறையிலே ஞானதேசிகனையடையும்படி இந்தத்தகுதியுள்ளநல்லபொருளை யெடுத்துக்கொண்டு இந்தப்பூமியிலேபோமென்று சொன்னபடியால் பழையவினைவெல்லாம் ஒழிந்துஉயிரானது மேலாகியமோக்ஷத்தைப் பெறும்படிச் செலுத்துகின்ற அருட்சத்திக்குச்சமானமானன் உத்தமனுகியபாண்டியராஜன்-எ-று.()

பற்றிலர்பெற்றசிவன்கழல்பற்றினரைக்கலைவண்டமி
ழுற்றமலைக்கிறைவன்றனையொக்கமதித்தருள்கொண்டலை
விற்றுவசத்தனெடும்படைமிக்கபுலிக்கொடியன்படை
மற்றுளகொற்றவர்தப்படைவர்க்கமுமுற்கொடெழுந்தன

(இ-ள்.) ஒருபொருளிலும்பற்றிலாத்தவராயும் பரமசிவனுடைய திருவடியிற் பற்றுள்ளவராயும் இருக்கின்றவரை வணமைபொருந்தியதமிழ்விளங்கியிருந்த அந்தப்பொதியமலைக்கு அரசனாகிய பாண்டியனுக்குச்சமானமாகமதிக்கத்தக்ககிருபாமேகமாகியமாணிக்கவாசகரைவிற்கொடிபடைத்தசேரமானுடையநெடியசேனைகளும் மிகுந்தபுலிக்கொடி படைத்த சோழனுடைய சேனைகளும் மற்றுமுள்ள அரசர்களுடையசேனைகளுஞ்சூழ்ந்துபுறப்பட்டன-எ-று.()

(இதுமுதலொன்பதுபாடலுங்குளகம்.)

உக்கிரநச்சுரகங்களினுச்சிபணிப்பவசைந்தடி
வைக்குமரத்தனவைங்கயமைக்கிரியொக்கமலிந்தன
பக்கமுமுற்பிறகுந்துடிப்பற்பலகோட்டமியங்குவ
தக்கமநத்தில்விரைந்துளதத்துபரித்திரள்வந்தன.

(இ-ள்.) உக்கிரமானவிஷமுள்ள ஆதிசேடனுடைய தலைகளும் அஷ்டமாநாகங்களினுடைய தலைகளும்நடுங்க அசைந்துஅடிபெயர்க்கின்ற வலிமையையுடையவனவாகிய வெவ்வியயானைகள் நீலகிரிகளுக்குச்சமானமாய் நெருங்கினஇரண்டுபக்கமும் முன்னும்பின்னும் அனேகந்துடிகளடிக்கமனோவேகத்தினுஞ் சீக்கிரமாகச்செலலுகின்றன வாகியதகுதியுள்ள குதிரைக்கூட்டங்கள் வந்துசூழ்ந்தனவென்றவாறு. (கூஉ)

கலிவிருத்தம்.

கொங்கணர்கலிங்கரொடுகொங்கர்துளுநாடர்
சிங்களர்களொட்டியர்தெலுங்கரொடுசீனர்
தங்குதிறன்மாளவர்மலாடர்தமிழொன்று
யெங்கணுமிடைந்தவர்களெண்ணமுடிவில்லார்.

(இ-ள்.) கொங்கணதேசந்தார் கலிங்கதேசத்தார்கொங்குதேசத்தார் துளுவதேசத்தார் சிங்களதேசத்தார் ஒட்டியதேசத்தார் தெலுங்கதேசத்தார் சீனதேசத்தார் வலிமைதங்கிய மாளவதேசத்தார் மலையாளதேசத்தார் இவர்களெல்லாந்தங்களுக்குள்ளே ஒன்றாகக்கூடி எண்ணுதற்கு அளவுபடாதவர்களாய்எவ்விடத்தும் நிறைந்தார்கள்-எ-று. (கூக)

இத்திறமெழுந்தபடையெங்கணுநெருங்கத்
தத்துபரிமீதுளதமிழ்க்கவிஞர்சூழச்
சித்திரமடந்தையர்திரண்டிருமருங்கு
மொய்த்துவரவீணைகுழன்முன்னரிசைகொள்ள.

(இ-ள்.) இந்தப்பிரகாரமெழுந்த சேனைகள்எவ்விடத்தும்நெருங்கத்தத்திநடக்கின்ற குதிரையின்மேலே தமிழ்க்கல்வியின் மிக்கபுலவர்கள்சூழ்ந்துவர அழகியமங்கையர்கள் கூட்டங்கொண்டு இரண்டுபக்கத்திலும் நெருங்கிவரவீணையும் புள்ளங்குழலும் முன்பாக இசைகள்செய்துக்கொண்டுவர-எ-று. (கூச)

கட்டுமளகத்தினர்கனத்துளதனத்தார்
பட்டுடைமருங்கினர்பணிக்கவரிவீச
வட்டமதிவெண்குடையங்குமுரசெங்குங்
கொட்டவுயர்காளமொடுகோடுகள்கறங்க.

(இ-ள்.) கட்டுகின்றகூந்தலையுடையவரும் கனத்த தனபாரமுள்ளவரும் பட்டுவஸ்திரமணிந்த இடையை யுடையவருமாகிய மங்கையர்கள்குளிர்ந்த காற்றைத்தருகின்ற வெண்சாமரைகள்வீசவுமவெள்ளியசந்திரவட்டக்குடைகள் பிடிக்கவும் பேரிகைகள்எங்கும்அடிக்கவும் உயர்ந்தசின்னங்களோடு சங்கங்கள்தொனிக்கவும்-(எ-று.

மிண்டியுளபாடகர்வியந்துசுரவாரங்
கொண்டுபுடைசூழவெழிலசேர்குழலர்பாடத்
தண்டரளமல்கியதனிச்சிவிகைமேலகொண்
டெண்டிசைமிகப்புகழ்கயற்கொடியிலங்க.

(இ-ள்.) நெருங்கியுள்ளபாடகர்கள் அதிசயித்துவாழ்த்திக்கொண்டு பக்கத்திலேசூழ்ந்துவரவும் அழகுசேர்ந்த கூந்தலையுடையமங்கையர்கள்பாடவும் குளிர்ச்சிபொருந்திய முத்திஞற்செய்த நெருங்கியஒப்பற்ற சிவிகையின்மேலேறிக்கொண்டு எட்டுதிக்கும் மிகவும்புகழ்கின்ற மீனக்கொடிபிரகாசிக்கவும்-எ-று. (௲௬)

மங்கலதினத்திநெடுமாளிகையகன்றே
துங்கமணியக்கையணிசொக்கரைவணங்கி
யங்குவிடைபெற்றுமறையர்கணரின்மிக்கார்
திங்கண்மரபிற்குரிசில்கோயிலுழைசென்றார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் இவைகளெல்லாந் தம்மைச்சூழும்படி சுபமானதினத்திலே நெடியதிருமாளிகைவிட்டு நீங்கிஉயர்ச்சிபொருந்தியசங்குமணியணிந்த சொக்கநாதரைத்தொழுது அநுப்பிவித்துக்கொண்டு வேதப்பிராமணரின்மிகுந்த மாணிக்கவாசகர் சந்திரவமிசத்திற் றோன்றியபாண்டியராஜனிருக்கும் அரண்மனைக்குப்போனார்-எ-று. (௲௭)

சென்றுதமிழ்மாறனருள்பெற்றெழில்சிறக்கும்
வென்றியுளவன்புலியின்மேன்மையொடுசெல்வார்
குன்றனையமாடமொடுகோபுரநெருங்கு
நன்றிமதுரைப்பதியைநன்கொடுகடந்தார்.

(இ-ள்.) பாண்டியராஜனுடைய அரண்மனைக்குப் போய் அவனுடைய கிருபையும்பெற்றுக்கொண்டு அழகுசிறந்த வெற்றியையுடைய சோழராஜருக்குஞ் சோழதேசத்திற்கு மேன்மையுடனே செல்லுகின்ற மாணிக்கவாசகர் மலைக்குச் சமானமாகிய உப்பரிகைகளும் கோபுரங்களுநெருங்குகின்ற நன்றியையுடைய மதுராபுரியைநன்மையோடு நீங்கினார்-எ-று. (௬௮)

நெடுங்குடதிசைக்கடனிறைந்தொலிசிறந்தே
யுடைந்துதயநற்றிசையிலுற்றவருமாபோன்
மிடைந்தபதியுங்கடமும்வெற்புமிவையெல்லாங்
கடந்துபதிசென்றுபலகாவதமகன்றார்.

(இ-ள்.) நெடியமேற்றிசைக்கடலானது நிறைவுடனே சத்தமிகுந்து உடைந்துபோய்க் கீழ்த்திசையிற் புரண்டுவருகிறதுபோல நெருங்கிய நகரங்களுங்காடுகளுமலைகளுங்கடந்து வழிக்கொண்டு அனேககாதவழிநீங்கினார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௯)

என்றுமுளபொன்றுமுடலென்னுநகர்தோறுஞ்
சென்றுவழிமாறியொருதெய்வவழிசெல்வார்
நன்றியுளமுத்திபெறநம்பர்தமதன்பா
லன்றுயர்பெருந்துறையடைந்தபடிசொல்வாம்.

(இ-ள்.) என்றுந்தோன்றித்தோன்றிக் காணப்பட்டுக்கொண்டுவருகிற தேசமென்னும் ஊர்கள்தோறுஞ்சென்று வழிதப்பி ஒரு

தெய்வத்தன்மையாகிய வழியிலேசெல்வாராகிய வாதவூரர்நன்மை பொருந்திய மோட்சத்தையடையப் பரமசிவனுடைய அனபினு லே அன்றுஉயர்ந்த திருப்பெருந்துறையில் சேர்ந்ததன்மையைச் சொல்லுவாம்-எ-று. (சாUD)

மந்திரிச்சருக்க-முற்றும்.

ஆ திருவிருத்தம்-சாUD.

# திருப்பெருந்துறைச்சருக்கம்.

சந்தவிருத்தம்.

பழைமறைமுழுதுணர்ந்தனர்பலர்தொழநடமுயல்கின்றவர்
மழுவுழைகரமிசைகொண்டிடமருவியகவுரிமகிழ்ந்திட
விழைதருமிரசிதபொங்கொளிவிடுமுயாகயிலைவிலங்கலி
லழகுறுதமனியமண்டபமதனிடையருள்கொடிருந்தனர்.

(இ-ள்.) பழைமையாயுள்ள நான்குவேதங்களையும் ஓதியுண ர்ந்த தில்லைமூவாயிரவர்வணங்கப்பொன்னமபலத்திலே நிருத்தஞ் செய்கின்றசடவுளானவர்மழுவுமானுந்திருக்கரங்களிற்கொண்டுவா மபாகத்திலிருக்கும் உமாதேவிமகிழ்ச்சியடையயாவரும் விரும்பும் படி உயர்ந்தவெள்ளிமயமாகிய கைலாயகிரியில அழகிய ஒருபொ ன்மண்டபத்திற் கிருபையுடனே எழுந்தருளியிருநதார்-எ-று. ()

மதுமலர்கரமிசைகொண்டுநின்வழிவழியடியவரொன்றுதம்
முதுமறைதெரியமொழிநதெதிர்முறைமுறைமுநிவர்வ
[ணங்கின



திருப்பெருந்துறை.



மாணிக்கவாசகருக்கு உபதேசம்.

ரிதுபரனருளைவழுத்துவதெனவரிபிரமமொழுந்துதம்
பதநிலைபெறவருளென்றிருபரிபுரகழல்கள்பணிந்தனர்.

(இ-ள்.) சேணையுடைய மலர்களைக்கைகளிலே கொண்டு உமக்குவழிவழியாகிய அடிமையுடையேமென்று பழையவேதங்களை யோதித் திருமுன்னேநின்று வரிசைவரிசையாக முனிவர்கள் வணங்கினார்கள் இதுகடவுளநுக்கிரகம்பண்ணுகிறகாலமென்று பிரமாவிஷ்ணுக்களெழுந்திருந்துதங்கள்பதங்களை நிலைபெற அனுக்கிரகம் பண்ணுமென்று சிலபணித்து இரண்டு திருவடித்தாமரைகளையும் பணிந்தார்கள்-எ-று. (உ)

பரவருமணிகள்விளங்கியபணவரவணியரனங்கமு
மருவியதரளவடந்திரம்புமதிநுதன்மலைமகளங்கமு
மிரவியுமதியுமிருந்தெனவெதிரெதிரிலகுதல்கண்டன
ரரகரசிவசிவவென்றுளமயர்வுறவழுதனரன்பினர்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய இரத்நங்கள்விளங்கிய படத்தையுடையசருப்பங்களைத்தரித்த பரமசிவனுடையவடிவமும் குளிர்ச்சிபொருந்திய முத்துமாலைகள் பிரகாசிக்கின்ற மூன்றாம்பிறைபோலுநெற்றியையுடைய உமாதேவியினது வடிவமுஞ்சூரியனும் சந்திரனும்இசைந்துஇருந்தலபோல ஒன்றுக்கொன்றுஇசைந்து பிரகாசிப்பதைப் பார்த்தவர்களாய் அரகரசிவசிவவென்று மநங்கரைந்து அன்பினால்ஆநந்தக்கண்ணீர்விட்டுருகிறார்களென்பார்கள்-எ-று.

அடியொழிமரமெனநொந்துபின்னவனியில்விழுவதொழிந்துபின்
னுடனுறைபெருமைவழுவுருவதுளதுகொலெனநினைநெஞ்சொடு
மடலவிழ்க்கடிகமழுந்தருமலர்பலமுறைமுறைசிந்திமுன்
னிடமிஃதெனமகிழ்ந்திரனிமையவரெவருமிறைஞ்சினர்.

(இ-ள்.) சம்பாதித்த புண்ணியங்களெல்லாந் தெய்வலோகத்திலனுபவித்து அதுமுடிந்தபின்பு அடியற்றமரம்போல நொந்து பூலோகத்திலேவந்து பிறக்கிறதொழிந்து உன்னுடைய சமீபத்திலிருக்கும் பெருமையை வழங்குவதுமுண்டோவென்று நினைக்கின்றநெஞ்சுடனே யிதழ்விரிந்தவாசனையுள்ளபஞ்சதருவினுடையமலரை அனேகந்தரந்தூவி நினைக்கத்தக்கவிடம் இதுவென்றுமகிழ்கின்ற தேவேந்திரனுந்தேவர்களும் வணங்கினார்கள்-எ-று. (சு)

கலிவிருத்தம்.

திண்டிறன்மிகுஞ்சுரிகையுந்திகழ்பிரம்புங்
கொண்டருகுநின்றுகுருநந்தியருள்கூரப்
புண்டரிகமாதுபுவிமங்கையெழில்சிங்கா
வண்டர்மடவார்களுலகன்னைபுறமன்ன.

(இ-ள்.) மிகுந்தவலிமையுடையஉடைவாளும் பிரகாசிக்கும் பிரம்புங்கொண்டு அருகேநின்று குருவாகிய நந்திகேஸ்வரர்கிருபைமிகுந்திருக்கச்சீதேவியும் பூதேவியுங்குறைவில்லாதஅழகையுடைய தெய்வமங்கையரும் உலகத்திற்குத்தாயாகிய உமாதேவியின்பக்கத்திலிருக்க-எ-று. (எ)

துன்னுபலபூதகணநாதர்புடைசூழக்
கின்னரர்கள்கந்தருவர்கீதவிசைபாட
மின்னுமுடிமன்னுநதிவீசுதிரைநன்னீ
ரொன்னவொளிசாமரைபொருந்தழகுசெய்ய.

(இ-ள்.) அநேகபூதகணநாதர்கள் நெருங்கிப்பக்கங்களிலே சூழ்ந்துநிற்கக்கின்னரர்களுங் காந்தருவர்களுங் கீதவிசைகள்பாடப்பரமசிவனுடையமின்னுகின்றமுடியிலிருக்குங்கங்கையினுடையவீசுகின்றஅலையைப்போலவிளங்கிவெண்சாமரைகள் அழகுசெய்ய-எ-று

இந்தவளமல்குசபையினனல்கெடமன்னுந்
தந்தைமணிமன்றிலுறைதாண்டவபதத்தோன்
செந்தமிழின்வந்தசிவஞானவமுதுண்டா
மந்தமிலருட்கடலையாண்டருளவேண்டி

(இ-ள்.) இப்படிப்பட்ட வளங்கள்மிகுந்தசபையினிடத்திலே துன்பங்களெல்லாநீங்கநிலைபெற்றிருக்கிற எல்லாவுலகங்களுக்குந் தந்தையாயிருப்பவரும் அழகியகநகசபையில் எழுந்தருளியிருந்து நிருத்தஞ்செய்கின்றவருமாகிய கடவுளானவர் செவ்வியதமிழிலே வந்த சிவஞானவமிர்தந்தோன்றுகின்ற அளவில்லாத கிருபைக்கடலாகிய மாணிக்கவாசகரை அடிமையாக்கிக்கொள்ளவிரும்பி-எ-று.

மைத்தகடன்மண்ணவர்கடம்முருவில்வம்மென்
றத்தகையபத்தர்கணநாதரையழைத்தே
சித்திதருதேசிகசிறந்தவடிவங்கொண்
டுத்தமநெடுங்கயிலையோங்கலதுநீங்கி.

(இ-ள்.) சருங்கடல்சூழ்ந்தபூமியிலே யிருக்கின்றமனிதரைப் போலவடிவங்கொண்டு நம்முடனேவாருங்களென்று அப்படிப்பட்ட அடியார்களையுங்கணநாதர்களையும் அழைத்துக்கொண்டு மோட்சத்தைத் தருகின்ற சிறப்புப்பெற்ற ஆசாரியமூர்த்தங்கொண்டு உத்தமமாகியநெடியகைலாயமலையைநீங்கி-எ-று. (அ)

கொன்னெறுழிதன்னுருவுகொண்டொருவர்தேடும்
பொன்னடியெனுஞ்சலசமண்மிசைபொருந்தப்
பன்னுமறைவல்லவர்பரிந்தழல்வளர்ப்பார்
மன்னுமொருதெய்விகவளம்பதியில்வந்தார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய ஒருபன்றிவடிவங் கொண்டு மகாவிஷ்ணுதேடிய பொன்மயமாகிய திருவடித்தாமரைகளைப் பூமியிலே பொருந்தவைத்துப் பண்ணுகின்றவேதத்திலே வல்லவராயும் அன்புகொண்டியாகஞ்செய்பவராயுமிருக்கின்ற பிராமணர்கள் நிலைபெற்றிருக்கும் ஒப்பற்றதெய்வத்தன்மையையுள்ள வளப்பத்தையுடைய திருப்பெருந்துறையில்வந்து சேர்ந்தார்-எ-று. (௯)

வெம்பிறவிவேலைதனில்வீழ்பவர்களெல்லாம்
நம்புசிவநாமமெனுநற்புணைபிடித்தா
லெம்பரனருட்கரையிலேறுதுறையாமா
லம்புவிமொழிந்ததுபெருந்துறையதன்பேர்.

(இ-ள்.) வெப்பதையுடைய பிறவிச்சாகரத்தில்விழுந்து கிடப்பவர்களெல்லாம் பெரியோர்கள் நம்புகின்றசிவநாமமென்னும் நல்லதெப்பத்தைப் பிடித்தாலெமதுகடவுளுடைய கிருபையாகிய மோக்ஷக்கரையில ஏறுவதற்குத்துறையாதலாலே உலகமெல்லாந் திருப்பெருந்துறையென்று அந்தப்பதிக்குத் திருப்பெயர் சொலலும்-எ-று. (௰)

ஈனமில்பெருந்துறையெனும்பதியின்ஞாங்கர்
கானமிகுபுன்னைவளர்கந்தமுளசந்தம்
வானமுயர்சண்பகமரந்திகழ்நரந்த
தேனினமுரன்றெழுசெருந்திகள்பொருந்தி.

(இ-ள்.) குற்றமற்றதிருப்பெருந்துறையென்னுந் தலத்திற்கு அருகெல்லாம் வாசமிகுந்த புன்னைமரங்களும் வளர்கின்றமணமுள்ள சந்தனமரங்களும் ஆகாயத்தைஅளாவியுயர்ந்த சண்பகமரங்களும் பிரகாசிக்கின்றநாரத்தைகளும் வண்டினங்கள் சத்தித்தெழும்புகின்றசெருந்திமரங்களும் பொருந்தி-எ-று, (௰௧)

(இதுமுதனான்குபாடல் பொழிற்சிறப்பு.)

கோடுகவினும்பெரியகோங்குமிகவோங்கும்
பாடலநெடும்பலவுபைங்கமுகுதெங்கு
நீடளியினாதசெழுநிரைக்குரவுசூத
மேடவிழ்செழுங்கவிரிலஞ்சிநண்மலிந்து.

(இ-ள்.) அழகியகொம்புகளையுடைய பெரியகோங்குமரங்களும், மிகவுமுயர்ந்தபாதிரிமரங்களும், நெடியபலாமரங்களும், பசியகமுகமரங்களும், தென்னமரங்களும், நீங்கினறவண்டுகளினாதத்தெழப்பெற்ற வரிசையாயிருக்கின்ற குராமரங்களும், மாமரங்களும், இதழ்விரிந்தமுருக்கமரங்களும், மகிழமரங்களுமநெருங்கி-எ-

மாக்கவின்மிகுங்கலபமஞ்ஞைசிறையன்னங்
கூக்குரல்செயுங்கரியகோகிலநெருங்க
மீக்குலவுமந்தியினமுந்துதொறுமேன்மே
லார்க்குஞ்சிமிறெங்கணுமடர்ந்திசைதொடங்க.

(இ-ள்.) மகத்தாகிய அழகுமிகுந்த தோகையுடைய மயிலும், இறகையுடைய அன்னங்களும், கூவுதல்செய்கின்ற கரியகுயில்களும், நெருங்கமரக்குலைகளின் மேலேயிருக்கின்ற குரங்குக்கூட்டங்கள் எழும்பிக்குதிக்குந்தோறும் மேலுமேலுஞ்சதிக்கின்றவண்டுகள் எவ்விடத்தும்நெருங்கி இசைகள்பாட-எ-று. (௰௬)

வீழ்ந்தநறவத்துளிவிழிப்புனலதாகச்
சூழ்ந்துமுரல்வண்டினிசைதோத்திரமதாகத்
தாழ்ந்துமலரேந்தியிறைதன்றிருமுன்னின்றே
வாழ்ந்துருகுமன்பரெனமன்னுமொருபூங்கா.

(இ-ள்.) தம்மிடத்திருந்து வீழப்பெற்றதேன்றுளிகள் கண்ணீராகவண்டுகள் சூழ்ந்துபாடுகின்றஓசை தோத்திரமாக வணக்கத்துடனே மலரையேந்திக்கொண்டு பரமசிவனுக்குஎதிரேயிருந்து மநமுருகுகின்ற அன்பர்கள்போல நிலைபெற்றிருக்கும் ஒப்பற்ற பூஞ்சோலைகள்-எ-று. (௰௪)

வாய்த்தவளமிவ்வகைவயங்கும தனைப்ப
ணைத்தருதவச்சினைகளெங்கணுநெருங்க
மீத்திகழறக்குழைதழைத்துமிளிர்மெய்ம்மலர்
பூத்தறிஞர்போன்றெழிலபொருந்துமோர்குருந்தம்.

(இ-ள்.) இப்படிப்பட்ட வளம்பொருந்திய அந்தச்சோலையினடுவே யாவராலுந்துதித்தற்கரிய தவங்களென்னுங் கிளைகளானவை யெவ்விடத்துநெருங்க மேலாகிப்பிரகாசிக்கின்ற தருமமென்னுந்தளிர்கள் தழைத்துவிளங்கிய உண்மையென்னு மலர்களைப்பூத்து அறிவுடையவர்களைப்போலஅழகுபொருந்தி நிற்குமொருகுருந்தவிருக்ஷம்-எ-று. (௰௫)

ஆர்வமுடன்வந்தினமகப்படவளைக்கும்
பார்வையெனமாந்தர்பருவங்கொடுநடந்தா
ரோர்வருகுருந்தமொடிலங்குமுயர்காவிற்
சேர்குவமெனத்திருவுளத்தருள்சிறந்து.

(இ-ள்.) ஆசையுடனேவந்து தன்னினங்களை யகப்படும்படியாய் வளைக்கின்றஒருபார்வைமிருகம்போல மானிடவடிவங்கொண்டுவந்த கடவுளானவர் அழகிய குருந்தவிருக்ஷத்தோடும் பிரகாசிக்கின்ற உயர்ந்தசோலையினிடத்துச் சேர்வோமென்று திருவுளத்திற்கொண்டருளினர்-எ-று. (௰௬)

வந்துதிகழ்தொண்டர்படைசூழமகிழ்வெய்திக
கொந்தலர்மலர்ப்பொலிகுருந்தடிபொருந்தி
யந்தமுதலில்லவரருட்டமிழ்முறைப்பார்
பந்தமறுமெல்லையதுபார்த்தினிதிருந்தார்.

(இ-ள்.) அப்படியாக வந்து பிரகாசிக்கின்ற அடியார்கள் புடைசூழ மகிழ்ச்சியடைந்து கொத்துக்கொத்தாய் மலர்கள்நிறைந்த குருந்தவிருக்ஷத்தின்கீழே எழுந்தருளியிருந்து அந்தமுமாதியுமில்லாதபரமசிவனானவர் தமிழ்வேதமுறைப்பாராகிய திருவாதவூரருடையபாசநீங்குகின்றகாலம்பார்த்து இனிதாகவிருந்தார்-எ-று.

பொங்குபுனல்யாறுபலபோய்விழுகடற்போ
லெங்குமுளநல்லுயிர்களெய்துமொளியாருந்
திங்களணிவேணியரிருப்பவடிசேருந்
துங்கமறையாளர்பலர்துன்றுநெறிசென்றார்,

(இ-ள்.) மிகுந்தசலத்தையுடைய அநேகநதிகள்போய் வீழ்கின்ற ஒருகடல்போல் உலகமெங்குமுள்ள சுத்தான்மாக்களடைகின்ற சோதியாகிய மூன்றாம்பிறையைத் தரித்தசடாபாரத்தையுடைய பரமசிவன் அவ்வாறிருக்க அவருடையபாதத்தை யடைகின்ற உயர்ந்தவேதியராகியதிருவாதவூரர் பலபேரும்நெருங்கிச்செல்லுகின்ற அந்தமார்க்கமாகவே வந்தார்-எ-று. (௰௮)

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

செம்மநத்துவாதவூர்ச்செல்வர்தமைப்புல்லாத
பொய்ம்மயக்கந்தரும்பாசம்போலமலர்ந்தனபூவை
யெம்மயக்குமொழிப்பாருக்கினிப்பிறவியில்லையெனக்
கைம்மறிக்குமவர்போலமலர்ந்தனவங்குளகாந்தள்.

(இ-ள்.) அந்தமார்க்கத்திலே நல்லமநதையுடைய திருவாதவூரிற்பிறந்த மாணிக்கவாசகரை அடையாதபொய்யாகிய மயக்கத்தைவிளைக்கின்ற பாசம்போல்காயாமரங்களிலகரியமலர்கள் மலர்ந்தன எந்தமயக்கமும்நீங்குமிவருக்கு இனிமேற்பிறப்பில்லையென்றுகையைமறித்துக்காட்டுமேவர்போல அங்கிருக்குங்காந்தளெல்லாமலர்ந்தன-எ-று. (௰௯)

(இதுமுதன்மூன்றுபாடல் காண்சிறப்பு)

விற்காட்டுங்கரத்துமதனம்பாகிவெம்பிறவி
யிற்காட்டியாவரையுமாகுலஞ்செய்யேமபாவ
நிற்காட்டிலொழிப்பவராரீயநுள்கவெமக்கென்று
பற்காட்டிநிற்பவர்போன்மலாநதனமென்பணிமுல்லை.

(இ-ள்) கருப்புவில்லைக்காட்டியகையையுடைய மன்மதனுக்கு ஒரம்பாகி யாவரையும்வெய்யபிறப்பிலேவிட்டு வருத்தஞ்செய்கின்ற எங்கள்பாவத்தைஉன்னைக்காட்டிலும நீக்குபவாகள் யாவர் நீயெங்களுக் கனுக்கிரகஞ்செய்யென்று பல்லைத்திறந்துகொண்டு நிற்பவர்போலத் திருவாதவூரரொதிராகமலர்ந்துநின்றன மிருதுவாகிய குளிர்ந்தமுல்லைகள்-எ-று. (௨௰)

பொற்புடையதமிழ்பாடிப்புண்ணியரெப்பொருளினுமாஞ்
சிற்பரனுண்மையில்விழிக்குந்திருநயனஞ்சேர்தலினு
னிற்பதாம்பிறவியிதுவென்றிரங்கிநீண்மரங்கள்
கற்பனையையுணர்ந்துமலர்கண்ணீர்கள்பொழிந்தனவால்.

(இ-ள்) அழகியதமிழ்வேதம்பாடுகின்ற புண்ணியராகிய திருவாதவூரர் எந்தப்பொருள்களிலும் கலந்துநிற்கும் அறிவுருவனாகிய பரமசிவன்உண்மையாக நோக்கிச்செய்யும் சட்சுதீட்சையைப்பெ

றுகிறபடியால் இந்தப்பிறப்புஉலகங் கொண்டாடத் தக்கதாய் சிறபதென்று இரக்கமுற்று நெடியமரங்கள் அந்தமகிமையை யறிந்து மலர்ந்து தேனாகியகண்ணீர்களை பொழிந்தன-எ-று. (௨௧)

முன்னைவினைப்பெருங்காடுமூடுறுமைம்புலவேடர்
துன்னியலைத்திடச்செய்யுந்துன்பவழிசெல்லாம
லுன்னருந்தசிவஞானவுபதேசந்தமிழ்செய்வா
ரின்னவகைத்துளகானமெய்தியவனைநீங்கி.

(இ-ள்.) பழையவினையாகியபெரியகாடு மூடத்தக்கதாக ஐம்புலன்களாகிய வேடர்கள்நெருங்கி அலைத்து வருத்தஞ்செய்கின்ற துன்பவழியிலே போகாமல யாவராலு நினைத்தற்கரிய சிவஞானவுபதேசத்தைத் தமிழ்ப்பாடல்செய்யுந் திருவாதவூரர் இப்படிப்பட்ட தாயுள்ள காட்டுவழியைக் கடந்து-எ-று. (௨௨)

கலிவிருத்தம்.

விரிந்தகடலுங்கிடைவிழுந்திடருழந்தே
திரிந்தவர்கள்கரைசென்றுறுதலாய்ப்போல்
வருந்தவுழல்வித்தவினையொத்துநல்வசத்தா
லருந்தவர்பெருந்துறைமருங்கினிலணைந்தார்.

(இ-ள்.) விசாலமாயுள்ள சமுத்திரத்திற்கு நடுவேவிழுந்து துன்பப்பட்டலைகின்றவர்கள் சந்தோஷத்துடனே கரையையடைவது போல் தம்மைவருந்தும்படி இதுவரைக்கும்வருத்திய இருவினைகளும் ஒத்துத்திருவருளினாலே மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்குச் சமீபத்திற்சேர்ந்தார்-எ-று. (௨௩)

இந்தவுலகஞ்சிவனிருக்குமுலகாகச்
சிந்தையருள்கொண்டுதிருவாசகமுரைப்பார்

பந்தமறவந்தமிலபராகுறுகவென்றே
வந்துறைபெருந்துறையின்வண்மையுரைசெய்வாம்.

(இ-ள்.) இந்தவுலகஞ் சிவலோகமாகும்படியே கிருபைகொண்டு தமிழ்வேதமாகிய திருவாசகமுரைக்கும் திருவாதவூரரானவர் பாசநீங்க முடிவில்லாத பரதத்தையடையும்படி வந்துசேர்ந்த திருப்பெருந்துறையின் வளத்தைச் சொல்லுவாம்-எ-று. (௨௪)

மாத்தியர்குலத்தலைவர்பிறவியெவ்வந்
தீர்க்கநாயகவையரருள்செய்யுமிடமென்றே
தோத்திரமுரைத்துமிசைவந்தசுரர்சிந்தும
பூத்திரளுதிர்ந்ததனைப்போன்றலர்பொங்கர்.

(இ-ள்.) ஆமாத்தியர்குலத் தலைவராகிய மாணிக்கவாசகருடைய வலிமைபொருந்திய பிறவித்துன்பத்தைத்தீர்த்து லோகநாயகராகியபரமசிவன் அனுக்கிரகஞ்செய்யவந்த விடமென்று தோத்திரஞ்செய்து மேலேயிருந்து தேவதைகள் தூவுகின்ற புஷ்பத்திரள்கள் உதிர்ந்ததுபோலிருந்தது மலர்ந்திருக்கின்ற பூஞ்சோலை-எ-று.

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

பேறறிந்துதவமுயல்வோமென்றுபெருந்துறைநாடி
யாறியங்கினோர்க்குமவர்க்களிக்கவெதிர்நிற்பவர்போற்
கூறுமின்பநிழல்செய்துகுறையாதபத்தியுட
னீறணிந்துமேசாரேந்திநின்றனதுன்றியகைதை.

(இ-ள்.) பெறவேண்டிய தின்னதென்று தெரிந்து அதைப் பெறத் தவஞ்செய்வோமென்று திருப்பெருந்துறையைக் குறித்து வழிநடக்கின்றவர்க்கும் மாணிக்கவாசகர்க்குக் கொண்டாடப்படுகின்ற இன்பமாகிய நிழலைச்செய்து குறைவில்லாத அன்புடனே திருநீற

ணிந்து திருவமுதேந்திக்கொண்டு நிற்கின்ற சிவனடியார்கள்போல் மகரந்தப்பொடிகளைப்பூசிக்கொண்டு வெள்ளியமலர்க்குலைகளையேந்திநின்றன நெருங்கியதாழைகள்-எ-று. (உசு)

(இதுவும்பொழிற்சிறப்பு)

நிலந்தனில்வந்தொருகுருந்தநீழலிலேயெவ்வுலகுங்
கலந்தபொருளிருந்தபடிகண்டுமகிழ்களிப்பெய்தித்
துலங்கியதங்கண்ணீருஞ்சொரிந்துகரங்குவிந்துமுக
மலர்ந்தபெருந்தவர்போலமலர்ந்தனபுண்டரிகங்கள்.

(இ-ள்.) பூலோகத்திலேவந்து ஒருகுருந்தநீழலிலே எந்தவுலகத்திலுங் கலந்தவஸ்துவாகிய பரமசிவமெழுந்தருளி யிருந்தபடி கண்டு மனமகிழ்ச்சியடைந்து விளங்கப்பெற்ற தங்களுடைய கண்ணீரைச்சொரிந்து கைகுவித்து முகமலர்ச்சியடைந்த பெரிய தபோதனர்களைப்போல் உள்ளெநெகிழ்ந்து தேனாகியநீரைச்சொரிந்து அரும்பாகிய கைகளைக்குவித்துமலர்ந்தன தாமரைகள்-எ-று.

(இதுவாவிச்சிறப்பு.)

ஆன்றபயன்பிறர்நுகரவகத்தினிமையுளதாகத்
தோன்றியநல்லறிவினர்போற்றுவன்றியெழுந்தனகன்னல்
மேன்றகுலமாதர்தமதிறைவர்முகநாடிலவர்
வான்றகையதேபோலவளைந்துவிளைந்தனசெந்நெல்.

(இ-ள்.) தமக்குள்ளே நிறைந்த பிரயோசனத்தை அந்நியர் புசிக்க உள்ளே இனிப்புள்ளதாகத் தோன்றியநல்ல அறிவாளர்கள் போல் இனிப்புள்ளரசம்நிறைந்து நெருங்கியெழுந்தன கரும்புகள் நல்லகுலத்திலே பிறந்தகற்புடைய ஸ்திரீகள் தங்கள்புருஷரைக் கண்டால் மேலாகிய அவர்கள் தன்மைபோல் செந்நெல்களெல்லாந் தலைவணங்கி விளைந்திருந்தன-எ-று. (உஅ)

முலைநகிரியுங்கருங்கூந்தன்மொய்வனமுமரணாகக்
கொலைப்புருவவெஞ்சாபங்குனிந்து விழிக்கணையேவி
நிலைப்படுநர்பொருட்டேடிநினைந்துகலநீணெறியிற்
றலைப்படுவார் தமைவருத்துந் தன்மையினர்வயன்மாதர்.

(இ-ள்.) பள்ளத்தியர்கள் தங்களுடைய ஸ்தனமாகிய மலைகளையுங்கரிய கூந்தலாகிய நெருங்கியகாடுகளையும் கோட்டைகளாகக்கொண்டு கொலைபுரிகின்ற புருவங்களாகிய வெவ்வியவில்லுகளை வளைத்துக் கண்களாகிய பாணங்களைத்தொடுத்து அழிவற்ற நல்ல பொருளைத் தேடி நினைந்து நெடியதபோமார்க்கத்திலே செல்வாராகிய மாணிக்கவாசகரை வருத்துகின்ற குணத்தை யுடையவரானார்-எ-று. (௨௯)

இவ்விருகவியுமயற்சிறப்பு.

கலிவிருத்தம்.

இன்னவகைநனிவளர்காவுமெழின் மேவுங்
கன்னல்வயலூர்திகழ்தல்கண்டுவகைகொண்டே
மன்னனுடைமைபெறுமினிப்புவியில்வாரா
விண்ணவர்பெருந்துறைவளம்பதியில்வந்தார்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் நிலைபெற்று வளர்கின்ற சோலையும் அழகுபொருந்திய கருப்பங்கழனியும் பிரகாசித்திருத்தலைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து ஞானபத்துக்கிடமாகிய தேகத்தைப் பெறுதற்கு இனிப்பூமியிலே வாராதமாணிக்கவாசகர் வளங்களையுடைய திருப்பெருந்துறையில் வந்துசேர்ந்தார்-எ-று. (௩௰)

மாதவர்மிகும்பதிபுகுந்துழிமருங்கே
நாதனுறைதண்டலையினன்குபுனைகொண்ட

ரோதுறுசிவாகமவொலிபபொலிவுகேளா
யாதிலீதறிகுதுரைமினைவலர்களெனறுர்.

(இ-ள்.) மகத்தாகியதபோதனர் நிறைந்துள்ளதிருப்பெருந்துறையிலே புகுந்தவிடததிலே அருசேகுருமூர்த்தமாய்ப் பரமசிவனெழுந்தருளியிருக்குஞ் சோலையினிடததிலே நன்மைமிகுந்த அடியாரகள் படிககின்ற சிவாகமங்களினுடைய சத்தத்தைக்கேட்டு இதுஎன்னசத்தம் தெரிந்துவந்து சொலலுஙகள் தூதர்களேயென்றுர் மாணிக்கவாசகர்-எ-று. (௬௧)

சென்றவர்களவந்துசிவபத்தர்பலர்சூழக்
கொன்றைமுடிவைததகுணவெற்பையநிகரொப்பார்
நின்றவொருகுருநதமரநீழலிலிருந்தா
ரொனறனுமகிழ்ந்தனரினிபபிறவியிலலார்.

(இ-ள்.) அபபடிசொல்லக்கேட்டுப்போய்ப்பார்தத தூதர்கள் வந்து அநேகமஅடியார்கள் தம்மைசசூழ்ந்திருக்கச்சடாமுடியிலே கொன்றைமாலைதரித்த குணமலையாகிய பரமசிவத்துக்கு ஒபபான ஒருபெரியவர் அங்கேயிருக்கின்ற ஒருகுருந்தமரநிழலிடத்தே இருக்கின்றுரென்றலும் மகிழ்ச்சியடைந்தார் இனிப்பிறவியிலலாராகிய மாணிக்கவாசகர்-எ-று. (௬௨)

ஏவலருரைத்தமொழிகேட்டரனையெய்தூ
மாவலொடுகாவினையணைநதகமகிழ்ந்து
மேவியமணிச்சிவிகைவிட்டிணிதிழிநதே
தேவர்பரவும்பரமர்தெய்வசபைகண்டார்.

(இ-ள்.) தூதர்சொன்ன சொல்லைக்கேட்டுக் குருமூர்த்தமா எழுந்தருளியிருக்கின்ற பரமசிவனைச்சேரவேண்டுமென்கிற ஆவலு

டனே அந்தச்சோலையிற்சேர்ந்து மநமலர்ச்சியுடனே தாமேறிவந்த இரத்திநச்சிவிகையினின்றும் இனிமையுடனே யிழிந்து தேவர்களால் வணங்கப்பட்டமேலாகிய தெய்வசபையைக்கண்டார் திருவாதவூரார்-எ-று. (௬௬)

எண்சீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

அண்டமெலாங்கடந்தபொருள்பகருநூலி னளவுரைப்பார் தெளிந்தமர்வாராய்வாராகித், தொண்டுபடுமடியார்கணூற் றொன்பானேற் றொண்ணூற்றொன்பா னென்னுந்தொகுதிசூழ, வொண்டொடிபங்கனிருப்ப விருப்பாலெய்தியுடனுறைத்துச் சிவஞாநமுணர்வாரன்பு, மண்டியநெஞ்சினில்வணங்கி வணங்கார்போல மந்திரியார்மேன்மையுடன் வந்துநின்றார்.

(இ-ள்.) அண்டங்களெல்லாங்கடந்த பொருளாகிய கடவுளாற்சொல்லப்பட்ட வேதாகமங்களுடைய அளவைகளைச் சொல்லுவாரும் அவைகளைத்தெளிந்து ஆராமைப்படுவாரும் ஆராய்வாருமாகி அடிமைப்படுமடியார்கள் தொளாயிரந் தொண்ணூற்றொன்பதுபேர்கள்சூழும்படி உமாதேவியை யொருபாகத்திலேயுடைய பரமசிவனெழுந்தருளியிருக்க விருப்பத்துடனே அவ்விடத்திலடைந்து அன்புபெருகிய மநத்தால் வணங்கிக்காயத்தால் வணங்காதவர்போல மேன்மையுடனேவந்துநின்றார் உடனே சிவஞாநத்தைப்பெறுவாராகிய மாணிக்கவாசகர்-எ-று. (௬௭)

உருத்திரநற்றிருமணியை யிலங்குகாதி லொண்சிரத்திற் கந்தரத்திலொளிகொண்மார்பிற், கரத்திலணிந்திலகுதிருமுண்டமங்கிகண்கரந்த நன்னுதன்மேற்கவினசாத்தித்திருத்தி

கழும. வேதியகுரவன் பொன்மேனி திகழ்வது கண்டகமகிழ்
வாரஞ்செங்கைமீது, பொருந்தமுறும்புத்தக மேதையாவென்
னப்பெரியமெய்மையிலாச்சிவஞானபோதமென்றார்.

(இ-ள்.) அழகியவுருத்திராட்சத்தை விளங்குகின்ற செவியி
னும் ஒளியையுடைய சிரசிலும, கண்டத்திலும், விளங்குகின்றமா
ர்பிலும, கையிலுமணிந்து ஒளியையுடைய விபூதியை திரிபுண்ட
ரமாக அக்கினிக்கண்ணையொளித்த நல்லநெற்றியிலே அழகுபெற
த்தரித்துச் சிறப்புப்பொருந்திய வேதியருடைய அழகியபொன்
னையொத்த திருமேனிபிரகாசிப்பதைக்கண்டு மனமகிழ்ச்சி யுறவா
ராகிய மாணிக்கவாசகரானவர் அவரைநோக்கி ஐயா, இவர்த்திருக்
கரத்திலே பொருந்தியிருக்கின்ற புத்தகம என்னவென்றுகேட்க,
அப்பெரியவர் மெய்ம்மையான சிவஞானபோதமென் றருளிச்செ
ய்தார்-எ-று. (௩௫)

என்றலுமேசிவமேது ஞானமேதிங்கிலங்கியிடும் போத
மேதியம்புவீரோ, என்றவடநிழலில்வந்திருந்தார்நீரோ யடி
யேனுமுமக்கடிமையானேனென்ன, சென்றசிவமொன்றதனை
நேர்கண்ஞான நிகழ்போதம்போதாதனைத் தெளிதலாமெ
ன, ஒன்றியநற்பொருள் வினவிநிற்பாரிருந்தையுருகும்வ
கையுரைசெய்தாருவமையிலலார.

(இ-ள்.) சிவஞானபோதமென்று அவர் அருளிச்செய்தவுடனே
சிவமாவதென்ன-ஞானமாவதென்ன-விளங்குகின்ற போதமாவதெ
ன்ன இவைசொலவீரோயானால் அந்நாளில கல்லாலவிருட்சத்தின்
கீழே யெழுந்தருளியிருந்தவர்நீரோ அடியேனும் உமக்கடிமையா
வேனென்றுசொல்லச் சிவமென்றது ஒப்பற்றமெய்ப்பொருள் ஞா
னமென்கிறது அதனைத்தெரிதல் போதமென்றது தெரிந்ததைத்தெ

ளிதலாமென்று பொருந்திய இந்தமேலானபொருளை விருவிதின்ற திருவாதவூராருடைய மநமுருகும்படி அருளிச்செய்தார் தமக்கு நிகரில்லாத குருமூர்த்தமாய்வந்த பரமசிவன-எ-று. (௧௬)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்

உத்தமரின்னவாறிங் குரைத்தலு மவர்தாமுஞ்
சத்திநிபாதமெய்து தன்மையராதலாலே
யத்திருமன்றுளாடு மையரிங்கென்னையாள
வித்திருமேனிகொண்டா ரென்பதுமனத்திலெண்ணி.

(இ-ள்.) உத்தமராகிய பரமசிவகுருவானவர் இந்தப்பிரகாரஞ் சொன்னமாத்திரத்திலேயகிழ்ச்சியடைந்து இருவினையொப்புமலபரிபாகமடைந்து அதிதீவிரபக்குவமடையுந்தன்மை பொருந்தியவராகையினாலே அந்தப்பொன்னம்பலத்திலே திருக்கூத்தாடுகின்ற ஐயரே இங்கேயென்னையாளும்பொருட்டுக் குருவடிவமாகிய இந்தத் திருமேனியைத்தாங்கிக்கொண்டுவந்தாரென்றுமனத்திலேநினைத்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௧௭)

மின்னிலைநிலைமையில்லா விழுப்பொருளியாவும் வேண்
டேன் றுன்னடியணைந்தாயே னுறுபவமொழிதல்வேண்
டுமென்னையின்றடிமைகொள்வாயெம்முயிர்க் கிறைவாவென்
னாமுன்னுறவணங்கிநின்றார் முகமெலாங்கண்ணீர்வார.

(இ-ள்.) மின்னலைப்போலநிலையில்லாத துக்கத்தைத்தருகின்ற பொருள்களையாவையும் விரும்பமாட்டேன் உன்னுடைய திருவடியைச்சேர்ந்து அடியேன்பொருந்திய சநநதுக்கத்தைநீக்கவேண்டும் என்னைஇன்றைக்கு அடிமையாககொள்வாய் எங்களுடைய உயிருக்கு இறைவனேயென்று முன்னேபொருந்த வணங்கி நின்றார் முகமெலாங் கண்ணீரொழுக-எ.று. (௧௮)

இவ்வகைபுகன்றுமுன்னோன் முன்னுழவிரங்கிநிற்பத்
திவ்வியாசாரமேயானசெய்தியனொன்றுநாடி
யவ்வடியவரின்மிக்காரொருவரிவ்வடிமைதன்னை
வெவ்வினையகற்றியாளவேண்டுமென்றிறைஞ்சிநின்றார்.

(இ-ள்.) மாணிக்கவாசகரானவர் இந்தப்பிரகாரஞ் சொல்லிக் குருவடிவங்கொண்டுவந்த முன்னோனாகிய பரமசிவனுடைய திருமுன்னேஇரங்கி நிற்பவர் இவர்மேற்கூவிருப்பங்கொண்டு அதிதீவிர பக்குவத்தை யுடையவரென்று அறிந்து அந்தஅடியார்களின மிக்க ஒருவரொழுந்து இவ்வடியாருடைய பொல்லாத வினைகளை நீக்கி யிரக்ஷிக்கவேணடுமென்று வணங்கினார்-எ-று. (௯௧).

கருப்புகநினையார்தம்மேற்கண்ணருள்செய்துநெஞ்சிற்
பாப்பறமிதித்தல்வேண்டியெடுத்தபொற்பாதங்கொண்டு
திருப்புனைமறையோர்போற்றத்தில்லையம்பலத்தேநின்ற
வருட்பரானந்தவாரியாதலினதற்கிசைந்தார்.

(இ-ள்.) இனியொரு கருப்பத்திலேசென்று பிறத்தலை நினையாதவராகிய திருவாதவூரரிடத்திலே கிருபைவைத்து அவர் ம[illegible]த்தின் விரிவுநீங்க மிதித்தலவேண்டித் தூக்கியபொன்மயமான திருவடியைக் கொண்டு செல்வமிகுந்ததில்லை மூவாயிரவர்போற்றச் சிதம்பரத்திலே கனகசபையிலே நடனஞ்செய்கின்ற ஆனந்தமாகிய கிருபைக்கடலாகையினாலே அவர்வேண்டுகோளுக் கிசைந்தார்-எ

அத்தகுபகலோன்முன்னரலர்செயும்புயாத
மொத்தவர்தம்மைநாடியுன்னையின்றடிமைகொள்ள
வித்தலத்தணைந்தோநீமுன்னியற்றியதவத்தினாலே.
சித்தமதிரங்கல்வேண்டாமெனத்திருவாய்மலர்ந்தார்.

(இ-ள்.) ஆயிரங்கிரணங்களைப் பரப்பிக்கொண்டு வருகின்ற சூரியன்முன்னே விகசிக்கின்ற தாமரைமலர்போன்ற திருவாதவூரனை நாடிப்பார்த்து உன்னை யின்றைக்கு அடிமைகொள்ளும் பொருட்டு நீமுன்ஜநநத்திலே செய்த தபோபலத்தினாலே இந்தத் திருப்பெருந்துறைக்கு வந்தோம் மனஞ்சஞ்சலப்பட்டு இரங்குதல் வேண்டாமென்று திருவாய்மலர்ந்தருளினார் குருசுவாமி-எ-று. ()

வந்து நான்வறுமையுற்றேன் மாற்றெனதிலமையாமென்று,
சிந்தையாகுலமுற்றான் கைச்செழும்பொருளீதல்செய்வார்க,
கிந்தநாளளிக்கவேண்டுமெனவிதியின்மையாலே, யந்தநாளி
ன்னாளாகவடிமைகொண்டருளவெண்ணி.

(இ-ள்.) நான்மிகவும் வறுமையடைந்தேன் அதனைந்தீர்க்க வேண்டுமென்று மனோதுக்கமடைந்து வந்தவொருவன் கையிலே நல்லதிரவியங் கொடுப்பவர்க்கு இந்தநாள்கொடுத்தற்குரிய நாளென்று பார்க்கும் விதியில்லாமையாலே அந்தநன்னாளே இந்நாளாக அடிமைகொண்டருள வெண்ணி-எ-று. (சஉ)

அத்தகுதொண்டர்க்கெல்லாமதிபராமவனைநோக்கி
யித்தவமுடையோனெய்துமிடரொழித்தாள்வதிந்நாள்
வித்தகவிதற்குவேண்டுங்கருமநீவிரைவிற்செய்கென்
றுத்தமவடிவங்கொண்டுண்மையாருரைத்தல்செய்தார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட அடியவர்க்கெல்லாம் பெரியவராகிய ஒருவனைப்பார்த்து இந்தத்தவமுடையவனடைந்த துன்பத்தை நீக்கி இவனை அடிமைகொள்ளும் நாள் இந்நாளாகும் ஆகையினாலே சதுரப்பாட்டையுடையவனே இதற்குவேண்டிய காரியங்களை சீக்கிரத்திற் செய்வாயாகவென்று உத்தமவடிவங் கொண்ட உண்மையான குருவானவரருளிச்செய்தார்-எ-று. (சங)

முன்னவன்புகன்றவாறுமுயல்குவமென்றேயந்த
மன்னுறுதவத்தின்மிக்கார்வகைமலர்த்தெரியலாலும்
பொன்னிடையழுத்திமுத்தம்புனைந்தபல்பட்டினாலு
மந்நெடுங்காவினூடங்கானபூங்கோயில்செய்தே.

(இ-ள்.) பரமசிவன் அருளிச்செய்தபிரகார முயன்று முடிப்போமென்று நிலைபெற்றதவத்திலே மிகுந்த அந்தக்கணநாதர் விதம்விதமாகிய பூமாலைகளாலும்பொன்னையிடையிலேயழுத்திமுத்துமணிகளால் விளிம்புசெய்த பலவகைப்பட்டினாலும் அந்த நெடிய சோலையினிடத்து அழகியகோயில்செய்து-எ-று. (சச)

செய்தநற்கோயிலூடுசிறந்தவாசனமுஞ்சேர்த்து
மெய்தருதொண்டர்க்கெல்லாமிக்கவரிறைவர்ச்சார்ந்து
கைதவமுடையார்நெஞ்சிற்கனவிலுங்காணகில்லா
மைதருகளத்தாய்கோட்டஞ்சமைந்ததுவாய்ப்பவென்றார்

(இ-ள்.) அப்படிச்செய்த நல்லகோயிலினிடத்திலே சிறந்த ஒரு ஆசனமிட்டு உண்மையாகிய அடியார்களுக்கெல்லாம் மிகுந்த அந்தக் கணநாதர் குருசுவாமியினிடத்திற்சென்று வஞ்சனையுடையவர்கள் நெஞ்சிலேகனவிலுங்காணப்பெறாத நீலகண்டனே கோயில்வாய்ப்பாகச் சமைந்ததென்றார்-எ-று. (சரு)

ஆயிடைக்குடபால்வெற்பிலாதவன்சரந்துஞாலம்
பாயிருள்பரந்தபின்புகடிகையோர்பதினைந்தாகி
மேயநல்லுயிர்களெல்லாம்விழிதுயில்பயிலுங்காலைத்
தூயதொண்டர்க்குமாயை தொலையநல்லமையுந்தோன்ற.

(இ-ள்.) அப்போது மேற்குத்திசையிலுள்ள அஸ்தகிரியிலே சூரியன்மறைந்து உலகத்திலே யிருள்பரவியபின்பு பதினைந்துநா

ழிகை வேளையிலே உயிர்களெல்லாம நித்திரைசெய்யும்போது பரிசுத்தராகிய திருவாதவூரர்க்கு மாயாமலநீங்குஞ்சமயம்வந்து தோன்றற்-எ-று. (சஎ)

இங்கிவர் தம்மையாளுங் காலமீ தென்றுதெய்வ
சங்கம தென்றுமுன்னோன் மஞ்சனச்சாலைசார்ந்து
குங்குமம் புழுகுசாந்தங் குழைத்துமெய்ம்முழுதும் பூசிக்
கங்கையி னனைனீர் வாசங் கலந்தமென் பனிநீராடி.

(இ-ள்.) இவ்விடத்திலே இவரை அடிமைகொள்கின்ற காலமிதுதானென்று தெய்வசபையைநீங்கிக் குருசுவாமியானவர் திருமஞ்சனச்சாலைக் கெழுந்தருளிக் குங்குமமும் புழுகுஞ்சந்தனமுங் குழைத்துத் திருமேனிமுழுவதும பூசிக்கங்காதீர்த்தத்தாலும் வாசனைகலந்த குளிர்ந்தநல்லபனிநீராலும் ஸ்நானஞ்செய்தார்-எ-று.

மெய்ப்புனைதுகிலொன் மாற்றி விலைமதிப்பில்லா நல்ல
வொப்பருஞ்செம்பட் டாடை யுடுத்துயர்கோட்ட மெய்திச்
செப்பிளமுலையாள் பாகன் றென்றிசையதனை நோக்கி
யப்பெருந் தவிசின் மேலங் கழகுறவிருந்தபின்னர்.

(இ-ள்.) திருமேனியிலே பொருந்தியநீரைத் திருவொற்றுடையாலொற்றி ஒருவராலும் விலைமதிக்கப்படாத நல்லஒப்பற்ற சிவந்தபட்டுபரிவட்டத்தை யுடுத்தி உயர்ந்த கோயிலிற்சென்று செப்பையொத்த இளமைபொருந்திய முலையையுடைய உமாதேவிபாகனாகிய கடவுள் தட்சணஅபிமுகமாக அந்தப்பெரிய ஆசனத்தின்மேல் அழகுபொருந்த விருந்தபின்னர்-எ-று. (சஅ)

அண்டருமலர் தூயேத்து மன்பருந் தூநீராடி
வெண்டுகில்புனைந்து நீறுவிளங்கியமெய்யராகி

முண்டகமலர்த்தாளவைத்துமுத்திதந்தருளமேனி
கொண்டவர்திருமுன்சென்றுகுறுகியங்குவகைகூர்ந்து.

(இ-ள்.) தேவர்களும் மலர்களைத்தூவியேத்துகின்ற திருவாதவூரரும் பரிசுத்தமாகிய ஸ்நானம்பண்ணி வெள்ளைவஸ்திர முடித்திக்கொண்டு விபூதிதரித்த தேகத்தையுடையவராய்த் தமது சிரசிலே தாமரைமலர்போன்ற திருவடிகளைவைத்து மோட்சங் கொடுக்குந் திருமேனிகொண்டுவந்த ஆசிரியருடையதிருமுன்னே மிகுந்த மகிழ்ச்சியடைந்து சேர்ந்து-எ-று. (௫௯)

விண்ணவர்திபன்பொற்றாள்விளங்கியர்ச்சனைமுன்செய்து
தண்ணமர்பனிநீர்தோய்ந்தசாந்தமெய்முழுதுஞ்சாத்தி
வண்ணமென்கழுநீர்மாலைவளம்பெறவணிந்தபின்னர்க்
கண்ணுறுபரிவுதீரக்கண்டுளமகிழ்ச்சிகொண்டு.

(இ-ள்.) தேவர்களுக்கிறைவனாகிய பரமசிவனுடையஅழகிய திருவடிக்கு முன்னே அபிஷேகஞ்செய்து அருச்சித்துக்குளிர்ச்சி பொருந்திய பனிநீராகிய சந்தனத்தை அழகியதிருமேனி முழுவதும் பூசிச்செங்கழுநீர் மாலையைவளம்பொருந்தத் தரித்தபின்பு கண்களைப்பெற்ற ஆசைதீரக்கண்டு மனமகிழ்ச்சியடைந்து-எ-று. ()

பருப்புடனுரிகேளம்பழச்செழுந்தருவல்சேர்த்துச்
சருக்கரைகலந்துபாலிற்சமைத்தநல்லமுதந்தன்னை
யிருத்தியகநகக்கான்மேவியங்குபொற்கலத்தின்மீது
விருப்பொடுபடைத்துநெய்யுமிகமுக்கனியும்பெய்து.

(இ-ள்.) பருப்புடனேசெழுமைபொருந்திய தேங்காய்த்துருவலுஞ் சேர்த்துச்சருக்கரைக்கலந்த பாலிலேசமைத்த திவ்வியமாகிய திருவமுதினைப்பொன்னாற்செய்த நாற்காலின்மேற் பிரகாசிக்

கின்ற பொற்கலத்திலே அன்புடனே படைத்துநெய்யும் வாழைப்பழமும மாம்பழமும் பலாப்பழமும்பெய்து-எ-று. (௫௪)

மாலயன்வலாரிமற்றவானவர்பிழைக்கமுன்னா
ளாலமுண்டவனைநல்லவமுதமுண்டருள்வாயென்று
சீலமாமகிழ்ச்சிபொங்குஞ்சிந்தையினூடைப்பக்கால
காலனுமுன்னீராற்கரமலர்சழீஇயபின்னர்.

(இ-ள்). மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இந்திரனும் மற்ற தேவர்களும பிழைக்கும்படி முன்னாளிலே விஷத்தையுண்ட கடவுளேநல்ல அமுதையுண்டருள்வாயென்று நல்லகுணமு மகிழ்ச்சியும்பொருந்திய மநதோடுவேண்டிக்கொள்ள அவ்வேண்டு கோளின்படியேபரமசிவன் அமுதுசெய்து ஜலத்தினாலேகைபூசியபின்-எ

வெள்ளிலைபழுக்காய்நல்கிவிரைதருதூபதீபங்
கொள்ளுநற்றேசுகாட்டிக்கோலநன்னீறுசாத்தித்
தெள்ளொளிவிளங்குமாடிதிருத்தமுன்றிசழ்வித்தெங்கு
முள்ளவர்முடிமேலோங்கவொண்குடைகவித்தல்செய்து,

(இ-ள்.) வெள்ளைவெற்றிலையும் பாக்குங்கொடுத்து வாசனையைத்தருகின்ற தூபதீபஞ்செய்து அழகியதிருநீறுதரித்துத் தெளிந்த ஒளிவிளங்குகின்ற கண்ணாடிகாட்டி எங்குநிறைந்தவராகிய பரமாசாரியருடைய முடியின்மேல் ஒளியையுடைய பட்டுக்குடை பிடித்தார்-எ-று. (௫௫)

கற்றைவெண்கவரிசெம்பொற்காம்பமீடாலவட்டம்
பற்றியன்புடனேவீசிப்பரிவுடனடியார்சூழப்
பொறறவிசிடையேமேவும்புண்ணியன்றிருமுன்பைம்
துற்றகையுடனேவாதவூரரங்கிருந்தபின்பு.. [போ

(இ-ள்.) கற்றையாகிய வெள்ளியசாமரையும் சிவந்தபொன்னினாற்செய்த நெடியகாம்பையுடைய ஆலவட்டமுமெடுத்து அன்புடனே வீசி அடியார்கள்சூழப் பொன்னினாற்செய்த ஆசனத்தில் எழுந்தருளியிருக்கின்ற புண்ணியசொரூபராகிய தேசிகோத்தமருடைய சந்நிதிமுன்னேமலரை இரண்டுகைகளிலு மேந்திக்கொண்டு திருவாதவூரர்நின்றனர்-எ-று. (௫௪)

மந்திரம்பதங்கள்வன்னம்புவனங்கடத்துவங்க
ளைந்துநற்கலைகளென்னுமறுவகைபற்றியந்தச்
சிந்தனைக்கரியமேலைச்சிவந்துடனறிவுசேரப்
பந்தனையொழிவார்தமமேற்பரிந்தருட்பார்வைசெய்து.

(இ-ள்.) பதினொருமந்திரங்களும், எண்பத்தொருபதங்களும் ஐம்பத்தோரக்கரங்களும், இருநூற்றிருபத்துநாலு புவனங்களும், முப்பத்தாறுதத்துவங்களும், ஐந்துகலைகளுமாகிய ஆறு அத்துவாக்களையும் நீக்கி முடிவாகியமநத்துக்கெட்டாத மேன்மைபொருந்திய சிவத்துடனே அறிவுபொருந்தப் பாசக்கட்டுகள்நீக்குவாராகிய மாணிக்கவாசகர்மேல் அன்புவைத்துக் கிருபாநோக்கஞ்செய்து-எ

எவர்க்குமெய்ஞ்ஞானமாமைந்தெழுத் தையுமுணர்த்தவேண்டி, யவத்தொழிலகற்றியாளுஞ்சிவத்தைமுன்னாகமாறித், தவப்பெருவடிவங்கொண்டார்தண்டமிழ்ப்பாடுமன்பர், செவிப்புலன்வழியேசிந்தையுறத்திருவாய்மலர்ந்தார்.

(இ-ள்.) பெரியதவவடிவங்கொண் டெழுந்தருளி வந்தஞான தேசிகர் அதிதீவிரபக்குவ ரெவர்களுக்கும் உண்மையறிவாகவிளங்கும்படி பஞ்சாக்ஷரத்தை அறிவிக்கவேண்டி அவத்தொழிலைநீக்கி யாளுகின்ற சிவத்தை முன்னாகமாறிக்குளிர்ந்த தமிழ்வேதம்பாடு

கின்ற அன்பராகிய திருவாதவூரருடைய காதினிடத்தே மந்தி
லேபொருந்தத் திருவாய்மலர்ந்தருளினார்-எ-று. (௫௬)

எழுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

விரவுமன்பொருவடிவுகொண்டணைவார் விழிக்கடபார்வை
யின்விளக்கின்முன்னிருள்போற், சுருதிசெந்தமிழாக்கிய
மொழியார்செலவிலாத வெந்துயர்பவமொழிந்து, பரவி
மென்பதம்பணிபவர் படிமேற்படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர்
பரிவான், மருவுமிங்கிவர் சென்னியிலிருதாண்மகிழவைத்தனர்
மதிநதிமுடிப்பார்.

(இ-ள்.) கலந்தஅன்பே ஒருவடிவமாகக்கொண்டு வந்தருளிய பரமசிவனுடைய பார்வையினாலே விளக்கின்முனனே யிருள்கெடுவதுபோல வேதத்தைத் தமிழாற்பாடிய மாணிக்கவாசகர் நீங்காத வெவ்வியதுன்பத்தைத்தரும் பிறவியொழிந்து துதிசெய்து மெல்லியதிருவடியை வணங்குபவராய்ப் பூமியிலேபடிய வீழ்ந்து வாழ்ந்தார் பத்தியையுடைய இவரதுசிரசிலே மகிழும்படி இரண்டுதிருவடியுஞ் சூட்டினார்சந்திரனையுங் கங்கையையுமுடித்த பரமசிவன்-எ-று. (௫௭)

மன்னுமுன்னுளவுயிர்க் கரணங்களுமாய்ந்துபோய் முந்த
றிவிழக் கருளாற், றுன்னுமின்னருட்சிவகரணங்களே டொன்றலா
ற்சுகவறிவதிற்றோன்றிச், சென்னியின்மிசைமேவியபாதந்
திருந்துகண்ணிணைச்சேர்த்தி நசரங்கா, னுன்னல்செய்திடுமி
தயமேலணிவித்தவைகூர்ந்துமெய்புணர்ச்சியிலெழுந்தார்

(இ-ள்.) நிலைபெற்ற முன்னிருந்த பசுகரணங்களெல்லாங் கெட்டுத் திருவருளினாலே பொய்முதலாகிய முன்னறிவுபோய்க்

கிருபைமிகுந்த சிவகணங்களாகத் தோன்றலால் சுகவறிவு அதி லேயுண்டாய்ச் சிரசின்மேலேவைத்த பாதசலதை இரண்டுகண்க ளிலுஞ்சேர்த்துக்கொண்டு நிரம்பிக்கையினாலு நினைக்கின்ற இதய மாகிய மார்பிலே அணைத்துக்கொண்டு மகாமகிழ்ச்சியடைந்து மெ ய்யுணர்வுடனே யெழுந்தார்திருவாதவூரர்-எ-று. (ருஅ)

மேலையுந்தலத்திந்திரனிமையோர்பொழிதலார் பொழிவினை மலர்மழையே, போலவித்தலர்புனையவந்து திரப்பூதருங்க ணநாதருமகிழ்ச், சாலநற்குணமபுனையு நல்லடியார்தங்கள் செங்கையிலொளியலுசயகரு, மாலவட்டமுங் கவரியுமிரு பாலசையமாமுநிக்கணமடிவணங்க.

(இ-ள்.) மேலுலகத்திலிருந்து தேவேந்திரனும் தேவர்களும் மேலேதூவுகின்ற வாசனைபொருந்திய புட்பமாரிபோல இந்தபூ மிமறையும்படி அச்சோலையிலிருந்து மலர்களுதிர பூதகணங்க ளும் கணநாதரும் மனமகிழ்ச்சியடைய மிகுந்தநற்குணத்தையுடை ய நல்லடியார்கள் தங்களுடைய சிவந்தகைகளிலே கொண்டமா லைகளும் பிரகாசிக்கின்ற ஆலவட்டங்களும் வெண்சாமரைகளும் இரண்டுபக்கங்களிலும் அசைய மகத்தாகிய முனிவர்கூட்டங்களெ ல்லாம் வணங்க-எ-று. (ருகூ)

இருந்தவப்பெருந்தருணையனெதிரே மெய்த்தியன்புடையி யல்பினரிறைஞ்சிச், சிரந்தனிற்றமதிகரங்குவியச் சிறந்த பேரருணிறைந்தசெய்கையராய், வருந்தியித்தல மகிழ்ந்து மேற் பறந்துமாலயன் றொழு வரியநீயடியே, னருந்துயரப் பலமகற்றவிங்குருவாவதேயெனவழுதுநெஞ்சழிந்தார்.

(இ-ள்.) இப்படியிருந்த அந்தப்பெரிய கிருபையுடையகடவு ளெதிரேசேர்ந்து அன்புடைய திருவாதவூரர் நமஸ்கரித்துச் சிரசி

னிடத்திலே தம்முடைய இரண்டுகரங்களையுங் குவித்துக்கொண்டு சிறப்புப்பெற்ற அதிகஆராமை நிறைந்தவராய் வருந்தப்பட்டு இந்தப்பூமியைத் தோண்டியும் மேலேபறந்தும் மகாவிஷ்ணுவும் பிரமனுங்கண்டு வணங்குதற்கரிய நீர் அடியேனுடைய அரியதுயரைச்செய்கின்ற பிறவியைநீக்குதற்கு இங்கே குருவடிவங்கொண்டுவந்தது என்னஅருமையென்றழுது மனமுருகினார்-எ-று. (௫௰)

ஐயனேயென்னையாண்டருள்புரியு மாதியேயுழையணிமழுவிருக்குங், கையனேகொடுங்காலனைமுனியுங் காலனேயிருகண்ணினுண்மணியே, செய்யனேயடிபோற்றியெனபெரிய செல்வமேயடிபோற்றி பொய்யினர்தம், பொய்யனேயடிபோற்றியெவ்வுயிர்க்கும போதமேயடிபோற்றியென்றழுதார்.

(இ-ள்.) ஐயனே யென்னை ஆண்டு கிருபைசெய்யும் ஆதியே அழகியமானுமழுவுமிருக்குங் கையையுடையவனே கொடியயமனைக்கோபித்துதைத்த திருவடியையுடையவனே என்னுடைய விரண்டுகண்களிலே யிருக்குமணியே சிவந்தரூபத்தை யுடையவனே உன்னுடைய பாதங்கள்போற்றி என்னுடைய பெரியசெல்வமே உன்னுடைய பாதங்கள்போற்றி பொய்யருக்குப்பொய்யனே உன்னுடைய பாதங்கள்போற்றி எந்தவுயிருக்கும அறிவுக்கறிவா யிருப்பவனே உன்னுடைய பாதங்கள்போற்றியென்றழுதருளினார்-எ

அற்றைஞான்றிருள்வைகறையெனும் போதணைதலும்பரனருட்குருவடிவங், கற்றசாரருடன்மயங்கு செங்கழுநீர்த்தொடையலின்சுமைபொருந்தெனத்துளங்கிக், கற்றமான்கரந்தேந்தியவிறைவன்கவின் கொண்மார் பணிமலர்த்தொடைகழித்தகங், குற்றவான்றுயரகன்றுநல்லடியாருடன்விளங்கினர்களங்கமொன்றில்லார்.

(இ-ள்.) அன்றையத்தினம் இருள்நீங்கி விடியற்காலம்வருதலும் அருளையுடைய குருவினது திருமேனியானது நிறைந்தசந்தனமுஞ்சேர்ந்த செங்கழுநீர்மாலையும் சுமையாதலிற் பொறுக்கமாட்டாதென்று கலங்கிமான்கன்றையேந்திய கையையுடைய அக்கடவுள் அழகுபொருந்தியமார்பிலே அணிந்த சந்தனமாலைமுதலியவைகளைக் களைந்து தம்முடைய துன்பங்களெல்லாம்நீக்கி நல்லடியார்களுடனே விளங்கியிருந்தார்களங்கமொன்றில்லாத மாணிக்கவாசகர்-எ-று. (௬௨)

வாதவூரிறைவர்தம்பெரியமாயைபோலிருண்மாய்ந்துபின்னவர்பாற், போதமாகிவந்துறுசுடர்விளக்கம் போலவேயினன்புணரியிற்றோன்ற, வேதநாதர்தமிருபதமிறைஞ்சு மெய்ம்மையாளரை வேறுகொண்டிருந்து, கோதுமாகமத்தறிவருமபொருளை யுணர்க்கவேநினைந்தா ரறமுரைத்தார்.

(இ-ள்.) திருவாதவூரிலே தங்கியதலைவரான மாணிக்கவாசகருடைய பெரிதாகிய அஞ்ஞானநீங்கினதுபோல இருள்நீங்கிய பின்பு அவரிடத்திலேவிளங்கிய சிவஞானமென்னுந் தீபம்போல் சூரியன்கடலிலே உதயமாக அப்போது தமது இரண்டுபாதங்களையும் வணங்கிய திருவாதவூரரை வேறே அழைத்துக்கொண்டு போயிருந்து அங்கேசிவாகமத்திற் சொல்லப்பட்ட அறிதற்கரியபொருளைச் சொல்ல நினைந்தனர் வேதநாயகராகியும் முன்னாலேஜனகர்முதலிய நால்வருக்குங் கல்லாலின் கீழிருந்து தருமமுறைத்தவராகியும் விளங்கிய பரமாசாரியர்-எ-று. (௬௩

களிம்புதோய்ந்தசெம்பெனவுனைமருவுங்கருமைகூர்மலங் கண்டதுகலக்கும், பளிங்குபோன்றதுன்றன்மையம்மலத்தின்பற்றினாலுடல் பலவெடுத்துழன்றாய், வளங்குலாம்புவ

நகதொறுஞ் செயுமுன் வலிவினைப்பயன் வருமுறைநெறியே, யளந்துகாநதாநுகாநதுமே நுகாவுமாக்கியே திரிந்தனைமாவ முநகால.

(இ-ள்.) இருள்வடிவாகிய மலமானது களிம்புதோய்ந்தசெம்பைப்போல அநாதியே உன்னைப்பொருந்தியிருக்கும உன்னுடைய தன்மையானது எதிரிட்டவண்ணங்களைப பற்றுகின்ற பளிங்குபோலாம் அந்தமாநதினதுசயபந்தத்தால் அநேகதேகங்களையெடுத்து உழன்றாய் வளம்பொருந்திய புவனங்கள்தோறுஞ் செய்யும் உன்னுடைய வலியவினைபபயன்கள் வருகிற கிரமத்தின்வழியே அளவைசெய்து நாயகியதிசெய்ய நீஅதனைபபுசித்து அபபடிபபுசிக்குமிடத்து ஆகாமியவினையையும் விளைத்துககொண்டு திரிந்தாய் அஞ்ஞானத்தினால்-எ-று. (௬௩)

செய்துளோர்பெறும்வினைப்பயனொருவர் சேர்ககவேண்டுவதில்லையெனினிதுமே, செய்துமேவிது நுகர்வதொன்றறிவதில்லைதீவினையெனிற்சடமறியா, வுய்தலாகியநனெறியுணராவுனையு முன்வினைப்பயனையுமுணாந்து, மைதவாமலமொழித்தருள்புரியா வாழ்வுநல்குவமயாமெனமதிப்பாய்.

(இ-ள்.) வினைகளைச்செய்த ஆன்மாக்களுக்கு வினைபபயனை ஒருவர் இடைநின்று சேர்க்கவேண்டுவ திலலையெனின் நீசிற்றறிவுடையவனானபடியால மேல்வருவதின்னதென்றாய்புசிப்பது இன்னதென்றும அறிந்துசேரமாட்டாய் வினைதானறிந்துசேருமோ வென்றால சடமாதலின் அறியாதுபிழைநதலாகியநல்லவழியையறியாதஉன்னையும உன்வினைப்பயனையும் அறிந்து இருள்வடிவமாகிய மலமொழித்துக்கிருபைநீங்காதமோட்சத்தைத்தருவோம்யாமென்றுமதிப்பாயாகவென்று அருக்கிரகஞ்செய்வார்பரமாசாரியர்-எ-று

குச் சொல்லுமிடத்தில குற்றமில்லாத எமது சொரூபமூன்று அவ
ற்றில அருவமொன்று அறிவுவடிவாகிய அருவுருவமொன்று அரு
ளையுடைய வுருவமொன்று என்றறிவாயாக வென்றருளினார்பரமா
சாரியர்-எ-று. (௬௭)

இந்தமூன்றினிலுருவுனக்கறிய விசைந்தபோரு ளியம்பு
மிவ்வுருவாம், வந்தியாவரும்பணிவதற்கெளிதாய் வரமெலாந்
தரவருமருவுருவம், பந்தமாகியமலவிருளகற்றும் பரிதியாயு
ளபலுயிர்க்குயிரா, யநந்தமாதிகளிலபரு மொளியாயமல
மாகுமவ்வருவெனுமுருவம்.

(இ-ள்.) இந்தமூன்றுபேதத்திலே உருவமாவது உனக்குஅறி
யும்படியாக உபதேசித்தருளிய இந்தக்குருவடிவமாம், அருவுருவ
மாவது எல்லாரும்வந்து வணங்குதற்கு எளிதாயிருந்துவரங்களெ
ல்லாம்கொடுக்கும இலிங்கவடிவமாம, அருவமாவது பாசமாகிய ப
லவிருளைநீக்குகின்ற கோடிசூரியப் பிரகாசமாய் எல்லாவுயிருக்கு
யிராய் முடிவுமுதலுள்கலையை அளந்தற்கரிய ஒளியாய் நின்மலமா
யிருப்பதாம்-எ-று. (௬௮)

ஆவலாலெமக்காமலர்மரங்களாக்கலம் மலர்பரிந்தலம்மல
ராற், குவிலாவகைதுதர்பலசமைத்த நுணப்பிலெம்புகழ்சா
ற்றலன்புடனு, மேவுமாலயமலகிடன் மெழுகல்விளங்க நல்
விளக்கிடுதலெபமடியாக் கேவலானவைசெய்யுமிச் சரிதை
யியற்றவல்லவாக் கெமமுலகளிபபோம்.

(இ-ள்.) ஆசையினாலே நமக்காகிய புட்பமரங்களைவைத்தலு
ம் அந்தப்புட்பங்களைக் கொய்தலும், அம்மலர்களினாலே கெடுதலி
ல்லாமல் அனேகமாலைகள்செய்தலும், நீங்குதலில்லாத நம்முடை
ய கீர்த்தியைச்சொல்லுதலும், நாமிருக்கின்றகோயிலுக்குந் திரு

லெகிடுதலும், திருமெழுகிடுதலும், பிரகாசிக்கும்படித் திருவிளக் கிடுதலும், எம்முடைய அடியார்களுடைய ஏவற்பணிகள் செய்த லுமாகிய இந்தச்சரிதைத்தொழிலைச் செய்யவல்லவர்களுக்கு எம துசிவலோகத்தில் வாழ்தலாகிய சாலோகபதவியைத்தருவோம்-எ

கந்தவாசகமுங்கிளர்மணப்புகையுங் கவின்கொடீபமும்பு னிதமஞ்சனமும், பொதவிழ்ந்தநறுமலரு மற்றுளவுங்கொ ண்டுமாயையின் குணத்திலொன்றிலரா, யைந்துசுத்திசெய் தகம்புறமிறைஞ்சியங்கி யின்கடன்கழித்தருள்வழியின், றி ந்தறப்பெருங்கிரியையன்புடனே யியற்றவல்லவ ரெம்மருங் கிருப்பார்.

(இ-ள்.) வாசனைத்திரவியங்களும் வாசனையுள்ள தூபவர்க்க ங்களும் அழகினையுடைய தீபங்களும் பரிசுத்தமாகிய திருமஞ்சன மும்கொத்து விரிந்தநல்லமலர்களும் மற்றைப்பஞ்சகவ்வியம் பஞ் சாமிர்தமுதலிய பூசாதிரவியங்களுங்கொண்டு மயக்கமான குணங் களொன்றுமில்லாதவராய்ப் பூதசுத்திதிரவியசுத்தி மந்திரசுத்தி ஆத்துமசுத்தி இலிங்கசுத்தியென்கின்ற ஐந்துசுத்திகளுஞ்செய்து உள்ளிலும்புறத்திலும் எமமைப்பூசைசெய்து அக்கினிகாரியமுஞ் செய்து முடிந்துசிவாகமப்பிரகாரம் நன்மைபொருந்திய் பெரிய இந்தக்கிரியைத்தொழிலை அன்பினுடனேசெய்ய வல்லவர்கள் எம் முடைய பக்கத்திலிருத்தலாகிய சாமீப்பியபதவியைப் பெறுவா ர்கள்-எ-று. (எ௮)

மூக்குணர்புலனைத்துட னடக்கிமூலவாயுவை யெழுப்பிரு வழியைச், சிக்கெனும்படியடைத் தொருவழியைத்திறந்து தாண்டவச் சிலம்பொலியுடன்போய்த், தைக்கவுஞ்செழுந் தோ டொழுந்துருவாந்தன்மை கண்டருடரும்பெருவெளிக

கே, புக்கழுநதினகாமனுருபபெறுவப்புவியில வேட்டுவனெ டுத்தமெனிபுழுப்போல்.

(இ-ள்.) சத்துவம் இராசதம் தாமதம்என்கிற மூன்றுகுணங் களையும் பஞ்சேந்திரியங்களையும் அடக்கிப்பிராணவாயுவை வெழு ப்புகின்ற இரண்டுவழியாகிய இடைபிங்கலைநாடிகளை நன்றாக அ டைத்துச் சுழிமுனைவழியைத்திறந்துநடனச்சிலம்போசையுடனே சென்று தகுதியையுடைய ஐந்தெழுத்தும ஓரெழுத்துருவாகிய த ன்மைகண்டு அருளைத்தருகின்ற பரவெளியிலேபுகுந்து ஆழ்ந்தின வர்கள் எம்முடைய உருவத்தைபபெறுதலாகிய சாரூப்பியததை யடைவார்கள் பூமியிலே குளவிதன்னுருவாகிய மெலியபுழுப போல-எ-று. (எக)

பரந்தவான்கலைமுழுதுமாகமநூன்முதலியபலசமய சாத்திரமுந், தெரிந்துசோர்ந்ததில்வாய்ந்தமுப்பொருளின செய் தியேபொருளென மனந்தெளிந்து, புரிந்துபோக்குறாசிற்ற றிவனைத்தும போக்கியவ்வறிவெனச் சிவபோதம, விரிந்து தோன்றுநெஞ்சுடைய வித்தகரோமேன்மையான நமமெய்ப் பதம்பெறுவார்.

(இ-ள்.) விரியப்பெற்றமேலாகிய கலையானது முழுவதும்ஆ கமநூலினுடைய பாருபாடுகளனைத்தும் பலசமயசாஸ்திரங்களுந் தெரிந்து ஆராய்ந்து அவ்வாராய்ச்சியிலே முப்பொருளாகிய பசுபதி பாசத்தினுடைய செய்திகளை உண்மைபபொருளென்று மனந்தெ ளிந்து முன்செய்த கன்மத்துக்கீடாகவந்த சிற்றறிவனைத்துங்கெடு த்துப் பேரறிவென்னபபட்ட சிவஞானம விரிந்து தோன்றுகின்ற மனத்தையுடைய சதுரப்பாட்டினரோ உயர்வாகிய நமமுடையசாயு ச்சியபதத்தைப் பெறுவார்கள்-எ-று (எஉ)

உருப்பொலாதவரிழிகுலத்தவர் நல்லொழுக்கமில்லவரெ ன்றுநம்மளவில், விருப்பிலாரவரெனினுமெய்யினீறு மிக்காசாதனவேடமுங்கண்டாற், றரிப்பிலாதுசென்றிறைஞ்சியறுசுவைக கொத்தக்க போனகமளித்தவர்க்கெளியர், விருப்பதாமவரடியவர்க்கடியரென்பரா யானெனதென்னுஞ்செருக்கறுப்பார்.

(இ-ள்.) பொல்லாத வுருவுடையவராயினும் இழிந்தகுலமுடையவராயினும் நல்ல ஒழுக்கமில்லாதவராயினும் என்றைக்கும் நம்மிடத்திலே அன்பில்லாதவராயினும் அவர்களுடைய மெய்யிலே விபூதியும் உயர்ந்த உருத்திராக்ஷவேடமுங்கொண்ட வளவிலே தரியாமலெதிரேசென்று வணங்கித்தகுந்த அறுசுவைப் பதார்த்தங்களுடனே அவர்களுக்குத் திருவமுதுசெய்வித்து அவர்களுக்கு எளியராயிருந்து அவரடியார்க்கடியராயிருப்பவர்கள் யானெனதென்னுஞ் செருக்கையறுப்பவர்கள்-எ-று. (எசு)

விரிந்தசஞ்சிதவினைகளன்புடனும் விழிக்கவெந்தது விரும்புமிப்பிறப்பிற்,பொருந்துமவ்வினையுடலுடனகலும்புதிசேரருள்வருவினைபோகத், மருந்தயர்பொருளுமிருடம்புணதேயல்லநம்மன வாகுமிங்கிதைப்போ, விருந்தநயபெருவடிவைநின்கருத்தி லிருத்துவாய்பொருளிதுவெனவுரைத்தார்.

(இ-ள்.) விரிந்திருக்கின்ற சஞ்சிதவினைகள் அன்புடனே சக்ஷுதீக்ஷையென்கிற நயனவிழித்துப் பார்க்கும் பார்வையினாலே வெந்துபோயிற்று விரும்பப்பட்ட இச்சநநத்தில் அனுபவிக்கும்படி யெடுத்துக் காட்டப்பட்ட பிராரத்துவம் இந்தத் தேகந்துடனே போம் நம்முடைய புத்தியில்தங்கிய திருவருளானது இனியேற வொட்டாமல் ஆகாமியவினைகளையொழிக்கும் அரியதுயனைத் தரு

கின்ற உன்னுடையபொருளும் உயிரும் உடம்பும் உன்னுடையத ல்ல நம்முடையதாகும இங்கே உன்னைப்போலே மானிடவடிவங் கொண்டுவந்த நமதுவடிவை உன்மநததி லிருத்திவைப்பாய் இது வேபொருளென்று அருளிச்செய்தார்-எ-று. (எச)

அந்தணா திருவாய்மலர்ந்தருளுமமலவாசகங் கேட்டகம கிழ்ந்துபதந்தனா தமநகெழுபிறப்பறுக்கும்பாதமீதுறபணிந தெதிரெழுந்து,பித்தனைவென்பிழைதனக்கிரங்குமபிஞரு காமிகப பேதைமையுடையேன், முத்தனாகமெய்காட்டினை யெனவே மொழிந்துவநதுகைதமுடிமிசைகுவிந்தார்.

(இ-ள்.) அந்தணராகிய கடவுள்திருவாய்மலர்ந்தருளிய களங் கமற்ற உபதேசமொழிகளைக்கேட்டு மநமகிழ்ந்து திருவாதவூரார்தம் முடைய எழுபிறப்பையும் நீக்குகின்ற குருவினதுபாதமலரின்மே ற்பணிந்து எதிரேயெழுந்துபித்தனாகிய என்னுடைய குற்றத்துக் கு இரங்கியருளிய பரமசிவனேமிகவும் அறியாமையுடைய அடி யேன் சீவன்முத்தனாக உண்மைகாட்டினாயென்று சொல்லி மநம கிழ்ந்து கைகளைச்சிரசின்மேற் குவித்துவணங்கினார்-எ-று. (எரு)

என்னதாக முன்னிருந்தபொருளு மிலலதாகியவுடல முமயானு, நின்னவாக நின்னருளொடு நினைந்தேனின்மலா வெனநின்று நின்றருகா, மன்னு நானைதன் மேலணிகலன்க ண்மதுரையீனவன் வான்பொருளிறையோன், முன்னதாக வைத்திறைஞ்சின ரறஞ்சேர்முதல்வனார் முகமலர்வுகொண் டிருந்தார்.

(இ-ள்.) என்னதென்றுநான் முன்னேநினைந்திருந்த பொரு ளும் எனக்கிடமாகிய தேகமும் யானும்உமது அருளைக்கொண்டு

உம்முடையவைகளாகவே நினைந்தேன் நின்மலனேயென்று நின்று நின்றுருகித் தம்முடைய பட்டுவஸ்திரங்களும்மேலே அணிந்திருந்த ஆபரணங்களும் மதுரையிலிருக்கின்ற பாண்டியன் குதிரை கொள்ளக்கொடுத்த பொருள்களுந்தமது குருவினெதிரேவைத்து நமஸ்கரித்தார் தருமசொரூபராகிய பரமசிவனும் முகமலர்ச்சிகொண்டிருந்தார்-எ-று. (௭௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பெருந்துறையுறைவாரன்புபெறுந்திருவடியராகி
யிருந்தவர்களின்மேன்மையெய்தினார்முகத்தைநோக்கித்
திருந்தியபொருளெல்லாந்திருப்பணிக்களியுமேலா
மருந்தவர்க்குதவுமில்லாதவர்க்கருளுமென்றார்.

(இ-ள்.) திருப்பெருந்துறையிலே யெழுந்தருளி யிருக்கின்ற பரமாசாரியானவர் தம்மிடத்தில் அன்புடையவராயிருந்த அடியார்களில் சிறந்த ஒருவர்முகத்தைப்பார்த்துத் திருத்தமாகிய இந்தப் பொருளையெல்லாம் சிவாலயப்பணிக்குக்கொடும் அரியதவத்தையுடையவர்களுக்குங்கொடும் வறியவர்களுக்குங் கொடுமென்று அருளிச்செய்தார்-எ-று. (௭௭)

தம்பெருமுதல்வர்சொல்லுந் தருமொழிப்படியேயுள்ள
செம்பொருளியாவுமன்பின்றிறந்துளார்தொலைந்தபின்ன
ரம்பரனளித்தஞானமருந்தினையருந்திப்பாச
வெம்பிணியகற்றுமிந்தவித்தகர் முத்தரானார்.

(இ-ள்.) தம்முடைய முதல்வராகிய பரமாசாரியர்சொல்லிய தருந்த சொற்படியே அன்பின்றிறமுடையோராகிய அடியார் தம்மிடத்துள்ளதிரவியத்தையெல்லாங் கொடுத்துவிட்டபின்பு அழகி

யகடவுள் அருளிச்செய்த ஞானாமிர்தத்தைப் புசித்துப் பாசமென்னும் வெய்யபிணியை நீக்கப்பெற்ற அன்பராகிய திருவாதவூரர் சீவன்முத்தரானார்-எ-று. (எஅ)

திருத்திகழ் கவிகைக்கீழுஞ் சிறந்தபொற்சிவிகைமேலும்
வரத்திருமேவுதானைமன்னவனென்னவந்தா
ருருத்தெரியாதநீறுங்கோவணவுடையுங்குஞ்சி
விரித்துளசிரமுங்கண்ணீர்பில்கப்பொழிவிழியுமானார்.

(இ-ள்.) திருந்தமாகிய குடைகீழ்க்கீழும் சிறக்கப்பெற்றபொற்சிவிகையின்மேலும் அழகுபொருந்திய சேனைகள் சூழ்ந்துவரவொரு அரசனைப்போலவந்த திருவாதவூரராகியவர் உருவந்தெரியாமற் பூசப்பட்ட நீற்றையுங் கோவணவுடையையும் குடுமிவிரிந்திருக்கின்ற சிரசையும் ஆநந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களையுமுடையவராயினார்-எ-று. (எஅ)

அன்புடனோக்கிநிற்பரழுவார்கைதொழுவார்வீழ்வ
ரின்புறவெழுவர்பின்பாலேகுவரிரங்கிமீள்வர்
நன்பகற்கங்குல்காணார்ஞானநல்லறிவேகொண்டு
கொன்புனைபித்தர்பாலர்பிசாசர்தங்கொள்கையானார்.

(இ-ள்.) தமக்கு அனுக்கிரகஞ்செய்த பரமாசாரியரை அன்புடனே பார்த்துநிற்பார் ஆநந்தபாஷ்பம்பொழிய அழுவார் கைகூப்பித்தொழுவார் கீழேவிழுந்துநமஸ்கரிப்பார் ஆசைபொருந்த வெழுந்திருப்பார் புறங்காட்டாமல முன்பாகநடந்துசெலவார் இரக்கங்கொண்டு திரும்பிவருவார் பகலும்இரவும் அறியமாட்டார் சிவஞானத்தையே பொருளாகக்கொண்டு கண்டோர்களை அச்சஞ்செய்கின்ற பித்தர்பாலர்பிசாசர்களுடைய கோட்பாட்டையுடையவரானார் மாணிக்கவாசகர்-எ-று. (அ௰)

பன்னுமிந்நிலைமையுற்றார்திண்படைச்சுற்றமாகித்
துன்னினரெல்லாம்வந்துதோன்றலைத்தொழுதுநின்று
தென்னவன்முனியாவண்ணஞ் செழும்பரிதிரள் கொண்
லென்னுமதொன்றுந்தேராதிருப்பழுதென்றிரங்கி. [டேக

(இ-ள்.) நிலைபெற்ற இந்நிலையைப்பொருந்திய திருவாதவூரருடைய வலிமைபொருந்திய படைத்தலைவர்களும் பந்துக்களுமாகிய எல்லாரும் நெருங்கி யெதிரேவந்துநின்று அவரைத்தொழுது வணங்கி அரசனாகிய பாண்டியன் கோபியாதபடி செழுமைபொருந்திய குதிரைக்கூட்டங்களை வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்பதைத் தெரியாதிருக்கிறது பழுதென்றிரங்கி-எ-று. (௮௧)

ஐயநீவருதல்வேண்டுமென்றவரழைத்தபோதிற்
செய்யநீறணிவார்தானைத்திறலினார்தமரைநோக்கி
மையலாமுணர்வின்மிக்கீரியாவர்நீர்மாயாபேதப் [றார்.
பொய்யெலாமுரைத்தல்வேண்டாம போமினியகலவென்

(இ-ள்.) ஐயரேநீர் வரவேணடுமென்று அவரழைத்தபோதில் செம்மையையுடை திருவெண்ணீறணிகின்ற திருவாதவூரர் அந்தச்சேனாதிபதிகளைப்பார்த்து அஞ்ஞானத்திலேயிருந்த நீங்கள் யாவர் மாயாபேதமாகிய பொய்யுரைகளெல்லாம் நம்முடனே சொல்லவேண்டாம் தூரப்போய்விடுங்களென்றார்-எ-று. (௮௨)

என்னிவர்புகல்வதென்றேயாவருநின்றிரங்கி
துன்னுநற்றானைவீரர்தம்முளேதுயரமெய்திப்
பன்னுநம்மொழியுங்கொள்ளார்பரிவிலரென்றுநீங்கித்
தென்னவற்கின்னவாறுசெப்புவோமென்றுசென்றார்

(இ-ள்.) இவரிப்படி சொல்வதுஎன்னவென்று சேனாதிபதிகளெல்லோரும் இரங்கிநின்று தங்களுக்குள்ளே துன்பமடைந்து நாம சொல்லுகின்றசொல்லையும் உட்கொள்ளாதவராயும் நம்மேலன்பில்லாதவராயு மிருக்கிறாரென்று அவரைவிட்டு நீங்கிப்பாண்டியராஜனுக்கு இதைச்சொல்லுவோமென்று போனார்கள்-எ-று. ()

சென்றவர்வையைநாடன்றிகழ்சபைமுன்னெய்தி
வென்றிகொண்மன்னபோற்றிமாமதுரேசபோற்றி
யென்றுபின்வாதவூரரெய்தியசெய்தியெல்லா
மொன்றியகவற்சிகூருமுளத்துடனின்றுசொல்வார்.

(இ-ள்.) அப்படிபோனவர்கள் பாண்டியராஜனுடைய சிறப்புப்பொருந்திய சபைக்கெதிரேபோய் நின்று பராக்கிரமத்தையுடைய அரசனே சரணம பெரியமதுரைக்கு நாயகனே சரணமென்று வணங்கினபின்பு திருவாதவூரரடைந்தசெய்கைகளையெல்லாமிருந்த கவலைபொருந்திய மனதுடனேநின்று சொல்லுவார்கள்-எ-

நின்பெயர்புனைந்தோராகி நினபெருங்கருமஞ்செய்வோ,
ரென்பவர்செய்கைதன்னை யெங்ஙனமியாங்கள்சொல்வோம,
பொன்பொலிமௌலியாய்நின்புடைவிடைகொண்டுபோந்
து, மன்பெருந்துறையாமந்தவளநகர்புகுந்தபின்னர்.

(இ-ள்.) தென்னவன் பிரமராயனென்று உன்பெயரைத்தரித்தவராகியும் உனக்கு மந்திரிதொழில் செய்பவராயும இருக்கின்ற திருவாதவூராருடைய சேதியை எபபடிநாங்கள்சொல்வோம் பொன்னினாற்செய்யப்பெற்று விளங்கிய கிரீடத்தைத்தரித்த அரசனே உன்னிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுபோய் நிலைபெற்ற திருப்பெருந்துறையென்னும் பெயரையுடைய அழகியநகரத்திலே புகுந்தபின்-எ-று. (அ௫)

அந்நகர்மருங்கோர்காவி லிணைமதுளகுருந்திலீசன்
றனையடியார்களாகுந் தாபதர்பலருஞ் சூழ
மன்னியங்கொருவர்மேலா மாதவவேடம்பூண்டு
முன்னுறவிருந்ததகண்டு முழுவிலாமகிழ்ச்சிகொண்டு.

(இ-ள்.) அந்நகரத்திற்குப பக்கத்தில் ஒருசோலையிலிருக்கின்றகுருந்தவிருக்ஷநிழலின்கண்ணே சிவனடியார்களாகியதபசிகள் அனேகர்சூழ்ந்திலபெற்று அங்கேயொருவர்மேலாகிய மகிமைபொருந்திய தவவேடம்பூண்டு எழுந்தருளி யிருப்பதைக்கண்டு அளவற்ற சந்தோஷமபெற்று-எ-று. (அசு)

அங்கவர்தாமுந்தாமுமன்பொடுசிலசொற்கூறிச்
சங்கரசிவனேபோற்றியென்றவர்தாளில்வீழ்ந்து
செங்கரங்குவித்துச்சென்னிசேர்த்து வந்தனைகள்செய்து
பொங்கொளிமணிபபூணுடை பொருளெலாமுவந்துநல்கி.

(இ-ள்.) அந்தப்பெரியவரும் தாமும் அன்புடனே சிலவார்த்தைகள்பேசிச் சங்கராசிவனே சரணமென்று அவருடைய பாதங்களிலே நமஸ்கரித்துச் சிவந்தகைகளைக்கூப்பிச் சிரசின்மேல்வைத்துக்கொண்டு பூசித்துமிகுந்த ஒளியையுடைய இரத்தினாபரணங்களையும் பட்டுவஸ்திரங்களையும் திரவியங்களையும் சந்தோஷமாக அவருக்கேகொடுத்து-எ-று. (அஎ)

குறைவிலாவாடைநீந்துக்கோவணமுடித்துச்செங்கி
றைமயிர்விரித்துநீற்றைமெய்யெலாநயந்துபூசி [ரார்
முறைமையன்றிதுநானென்றுமொழிந்தவெம்முகமும்பா
நிறையழிபித்தராஞர்நிருபவென்றிறைஞ்சிநின்றார்,

(இ-ள்.) குறைவில்லாததம்முடைய வஸ்திரந்தைநீக்கிக்கோவணமாத்திரங் கட்டிக்கொண்டு தலையிலேயுள்ள மயிரைவிரித்துக்கொண்டு தேகமுழுவதும் விபூதியை விருப்பத்துடனே யணிந்து இப்படிச்செய்கிறது கிரமமல்லவென்று சொன்னவர்கள் முகந்தையும் பாராதவராய்க் கிரமந்தப்பிய பித்தனைப்போலானார் பாண்டியனேயென்று வணங்கிநின்றார்கள்-எ-று. (அஅ)

கேட்டலுமதுரைமாறன்கிளர்ந்தமெய்ம்முழுதும்வேர்வு
காட்டிடவெகுளிபொங்கிக்கண்கனல்வடிவமாகி
வாட்டிறன்மன்னர்க்கின்னவண்மையருளரோல்வைய
மூட்டுறுசெல்வந்தானேயெவையிலவென்றுநக்கான்.

(இ-ள்.) அவர்கள் சொன்னவார்த்தையை மதுராபுரியரசனாகிய பாண்டியன்கேட்டுத் தேகமுழுவதும் வியர்வை யுண்டாகக் கோபமிகுந்து கண்கள் அக்கினிவடிவாகச் சிவந்து வாள்யுத்தத்திலே திறத்தையுடைய அரசர்களுக்கு இப்படிப்பட்ட வளத்தைச் செய்கின்ற மந்திரிகளுண்டானால் சம்பாதிக்கப்பட்ட நாடுசெல்வம் சேனைமுதலியவைகளில் குறைவென்னவென்று சிரித்தார்-எ-று.

அடுபரிகொள்வானீந்தவரும்பொருள்கவர்வதாகக்
கெடுமதியுரைப்பார்தஞ்சொற்கேட்டுமாலெய்தினானைக்
கொடுமைகொளிந்தவோலைகொடுத்தெநாருநீனைத்துணம்பா
கடுநடைத்தூதரேகிக்கைக்கொண்டுவமியென்றான் [ற்

(இ-ள்.) யுத்தத்திலே பகைவரைக் கொல்லத்தக்க குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு நாம்கொடுத்த அரியதிரவியங்களைக் கொள்ளையிடுவதற்காகக் கெடுமதி சொல்லுவார் சொல்லைக்கேட்டு மயங்கிய திருவாதவூரரை வேகமாகிய நடையையுடைய தூதர்கள்

போய்க் சொடுமையாகவெழுதிய இந்தவோலையைக்கொடுத்து ஒருதினத்திலே நம்மிடத்திருக்கு கைப்பிடியாகக் கொண்டுவாருங்களென்றான் பாண்டியராஜன்-எ-று. (௯௰)

ஏவலிற்சென்றதூதரொழிற்பெருந்துறையிலெய்தி
யாவலிற்சிவன்றாளேத்துமண்ணலைக்கண்டிறைஞ்சி
மேவலர்க்குறுமேறென்னவெந்தொழில்வேந்தன்வாய்ந்த
காவலர்க்கதிபன்மாறன்றிருமுகங்காண்மினென்றார்.

(இ-ள்.) அந்தபாண்டியராசனேவலினாலேபோனதூதர்கள் அழகியதிருப்பெருந்துறைக்குப்போய்அன்பினாலேசிவனுடைய திருவடிகளைவணங்கியிருக்கின்ற திருவாதவூரரைக்கண்டுவணங்கிச்சத்துருக்களுக்குக்கொடிய தண்டத்தைச்செய்கின்ற இடியேறொத்தவேந்தனாகியும் மேன்மைபொருந்திய அரசாக்கரசனாகியு மிருக்கின்ற பாண்டியனுடைய திருமுகம் இதுகாண்பீராகவென்றுசொன்னார்கள்-எ-று. (௯௧)

அற்றமில்கொள்கைமிக்காரரன்றிருமுகமதன்றி
மற்றொருமுகமுங்காணமனதிலரிதன்மேலன்பு
பற்றிலர்பிறிதோரோலைப்படியெடுத்துரைமினென்ன
வுற்றதனியல்புவல்லானெழுதியது வந்துசொல்வான்.

(இ-ள்.) சோர்வில்லாத கோட்பாட்டின் மிகுந்ததிருவாதவூரர்பரமசிவன் திருமுகமல்லாமல் வேறொருமுகத்தையும்பார்ப்பதற்கு மனமில்லாதவராய் இந்தத்தூதர்கொண்டுவந்த திருமுகத்திலும் பற்றில்லாதவராய்வேறொரு வோலைப்படியே யிதனையுமெடுத்துச் சொல்லுங்களென்று சொல்ல அவர்சொற்படி நல்லதென்று அதுதெரிந்த ஒருவன் அதிலெழுதியிருப்பதை மகிழ்ந்துசொல்லுவான்-எ-று. (௯௨)

தென்னவனரசனோலைதென்னவன்பிரமராய
னென்னுநலமைச்சர்காண்கவெல்லையிறனங்கொண்டேகி
நொன்றுறுபரிகொளாமற்கோவணங்கொண்டீது [ம்.
மன்னர்தங்கருமஞ்செய்வாரவண்மையென்றுவகையுற்றே

(இ-ள்.) பாண்டியராஜனெழுதப்பட்ட வோலை தென்னவன் பிரமாராயனென்று சொலலும் நலலமந்திரிகாண்க அளவற்ற திரவியங்கொண்டு சென்று பெருமைபொருந்திய குதிரையைக் கொள்ளாமல கோவணங்கொண்டா அரசரதுகாரியஞ் செய்பவர்களுடைய வண்மை யிப்படிப்பட்டதென்று மகிழ்ச்சி யடைந்தோம்-எ-று. (௯௬)

வையகமன்னராகிவாழ்வதின்மனைகடோறு
மெய்திரவுசரத்தியாலிரப்பதுபெருமையென்று
மெய்நகத்தம்மையாண்டவேந்தரைப்பிழைத்துவேறு(ம்
செய்வதுபலிகருமென்றுதேர்ந்தநூற்றுணிவுங்கண்டோ

(இ-ள்.) பூலோகத்துஅரசாகிச் சம்பத்துடன் வாழ்வதைக்காட்டிலும் வீடுகள்தோறும தன்னையடைந்த உதராக்கினியினலே இரப்பது பெருமையாகுமென்றும் உண்மையாகத் தம்மைச் சவரக்ஷணைசெய்த அரசருக்குப்பிழைசெய்து வேறொருகருமஞ்செய்வது பயன்படுமென்றும் நீநூலிலே ஆராய்ந்துதேர்ந்த துணிவையுங்கண்டோம்-எ-று. (௯௭)

மன்னரையடைந்துவாழ்தல்வஞ்சநஞ்சுமிழுநாகந்
தன்னுடன்மருவிவாழுந்தன்மையென்றுணர்வீராயிற்
றன்னுமிவ்வோலைகாணும்பொழுதுநந்தூதர்நம்மோ
டீசகர்வருநமாறனெழுதநனவுரைத்துநின்றான்.

(இ-ள்.) அரசனைச்சேர்ந்து வாழ்வாருக்கு அச்சத்தைச்செய்யும்
விஷத்தையுமிழ்கின்ற சருப்பத்துடனேகூடிவாழ்கின்ற தன்மை
போலாமென் றறிவீராகில் இந்தவோலையைக் கண்டமாத்திரத்தி
லே நம்முடைய தூதர்களுடனே இந்தமதுரைமாநகரத்திற்கு வர
க்கடவீராக இதுபாண்டியன் கையெழுத்தென்றுபடித்துநின்றார்.

மீனவனெழுதுமோலைகேட்டபின்மின்பாலன்ப
ரானவரடியாரெம்மையடிமையாயுடையரல்லாற் [று
றானெனக்கண்ணலென்றுந் தன்னையான் பிழைத்தேனென்
மாநிலமன்னர்சொன்னதென்னென மதியிலெண்ணி.

(இ-ள்.) பாண்டியன் எழுதிவிட்டவோலையைக் கேட்ட மா
ணிக்கவாசகர் உமாதேவிபாகராகிய பரமசிவனுடைய அடியார்க
ளேயெம்மை அடிமையாக உடையவரேயல்லாமல் தானெனக்கு
த் தலைவனென்றுமதனக்குநான பிழைசெய்தேனென்றும் பெரிய
உலகத்தை யாளுகின்ற அரசன்சொன்னது என்னவென்று மதி
லேநினைந்து-எ-று. (கசு)

அந்தகனெழுதுமோலைகொண்டவன்றூதர்தாமும்
வந்தெமையணுகமாட்டாருடையவர்மதுகையாலே
வெந்தொருகணத்தில் வீழமேவலர்புரங்கள்செற்றோர்
தந்தமரொருவர்க்கஞ்சத் தகுவரோவென்றுசாற்றி.

(இ-ள்) எம்மையடிமையாகவுடைய பரமசிவனுடைய வலி
மையினாலே யமனெழுதுகின்ற ஓலையைக்கொண்டு அவனால விட
ப்பட்ட தூதரும் எம்மிடத்தில்வந்து அணுகமாட்டார்கள் ஒருக்ஷ
ணப்பொழுதிலே வெந்துவிழும்படித் திரிபுரங்களையழித்த அக்க
டவுளுடைய அடியார்கள் ஒருவருக்கு அஞ்சுவார்களோவென்று
சொல்லி-எ-று. (கஎ)

போயரனை திருந்தாளேநதிபபுண்ணியவடிவேபோற்றி
யாயிரஞ்சுடிகைப்பாபமையலரெனமுடித்தாய்போற்றி
மாயிருஞாலங்காக்குமன்னவனெழுதுமோலைப்
பாயிரமிதுகேளென்று மொழிந்தனர்பழுதிலாதார்.

(இ-ள்.) இப்படி நினைத்துபபோய்ப பரமசிவனுடைய திருவடியைத துதித்துபபுண்ணியவடிவமுடையவனே சரணம், ஆயிரம பணாமுடியையுடைய பாமபை மலர்மாலையாகத் தரித்தவனே சரணம், சுத்தமாகிய பெரியபூமியை ரட்சனைசெய்கின்றஅரசனெழுதிவிட்ட வோலையின்முகவுரையைக் கேட்டருளுமென்று எதிரேநின்று சொன்னார் பழுதிலலாதமாணிக்கவாசகா-எ-று. (௬அ)

கேடிலாவியன்பினுஞ்சேட்டினாமுறுவல்பூத்துப் [ர
பாடலாலேத்துந்தெய்வப்பாண்மையர்க்குவந்துசொல்வா
பீடிலாதவர்போலுள்ளம்பேதுறலொழிவாயிந்த
நாடெலாமதிக்கநாமேநற்பரிதிரள்கொண்டேகி.

(இ-ள்.) கெடுதலில்லாத வியல்பினுடைய பரமசிவன் அதனைக்கேட்டுப் புன்சிரிப்புக்கொண்டு தமிழ்ப்பாடலால் தம்மைத்துதிக்குந் தன்மையையுடைய திருவாதவூரர்க்குச் சந்தோஷத்துடனே சொல்வார் அறிவில்லாதவர்கள்போலக் கருத்திலேகொண்ட பேதைமையை நீக்குவாயாக இந்தநாடெல்லா மதிக்கும்படியாய் நாமே குதிரைகொண்டு சென்று-எ-று. (௬௯)

தென்னவற்களித்துமீள்வோஞ்செழுந்திறற்றுரநரோடு
மன்னனைக்குறுகியெமபால்வரவிடுமோலைதனைஞன்
முன்னுறக்கடிதுவந்தேதுவணித்திங்கண்மூல
மென்னுமந்தினத்திலிங்கேயெய்துநற்பரிகளென்பாய்.

(இ-ள்.) பாண்டியனுக்குக் கொடுத்துந் திரும்புவோமிகுந்த சௌரியத்தையுடைய தூதர்களுடனே அவ்வரச னிடத்திற்குப் போய் நீவோவிட்டவோலையினாலே முன்னதாகச் சீக்கிரத்தில் வந்துவிட்டேன் ஆவணிமாதம்மூலநாளில இஙகே நலலகுதிரைகள் வருமென்று சொல்லுவாயாக-எ-று. (௰)

தொன்மதிக்குலத்துமன்னன் றுயர்செய்வானென்றேசற்
றின்மநக்கவறசிகொள்ளாதொழிகெனநீறுசாதுதிப (று
பொன்மணிக்கலன்கனல்கிப்பூநதுகிலபிறவுந்தந்து
மன்மநத்துவகைகூரமந்திரிப்பான்மைசெய்து.

(இ-ள்.) பழைமையால் வருகின்ற சந்திரகுலத்துஅரசனாகிய பாண்டியன் துன்பப்படுத்துவானென்று சற்றும் உன்மநதிலே கவலைகொள்ளாதேயென்று விபூதிதரித்துப் பொன்னாலும் இரத்தினங்களாலுஞ் செய்த ஆபரணங்களும் அழகியவஸ்திரமும் வாகனமுதலியவைகளுங கொடுத்து அவ்வரசன்மநதில மகிழ்ச்சியடையும்படி. மந்திரிக்கேற்றகோலஞ்செய்து-எ-று. (௰௧)

தென்றிசைக்கதிபன்றன்பாற்சென்றிதுகொடுத்துக்காண்
யென்றுநன்மணியுநலகியேகெனவிடுத்தபின்னர் (டி
கன்றகல்புனிற்றுவென்னக்கசிந்திருகண்ணீர்வார
நின்றுநின்றிறைஞ்சியையாநீத்தியோவென்றுநொந்து.

(இ-ள்.) தென்னாட்டிற்கு அதிபனாகிய பாண்டியனிடத்தில்போய் இதைக்கொடுத்து நீகாண்பாயாகவென்று நல்லமாணிக்கமொன்று கொடுத்துப்போவென்று அனுப்பஅதன்பின்புகன்றை நீங்கிப்போகுந் தலையீற்றுப்பசுப்போல் இருகண்ணிலுங்கசிந்து நீரொழுகும்படி நின்றுநின்றுவணங்கி ஐயாவென்னை நீக்கினையோவென்று மநநொந்தார்-எ-று. (௰௨)

விழிப்புனல்சிந்தச்சிந்தவிண்ணையன்விடைபெற்றேகிச்
சுழிப்புனல்வாவிசோலைசூழ்பெருந்துறையைநீங்கி
வழிக்குறுதுணையாயுள்ளவள்ளலைந்தெழுத்தோதிப்
பழிச்சிறுதூதரோடுமதுரையம்பதியிற்சென்றார்.

(இ-ள்.) கண்களிலேயிருந்து நீர்தாரைதாரையாயொழுக ஆராமையுடனே பரமசிவனிடத்திலே செலவுபெற்றுக் கொண்டு போய்ச் சுழியையுடையநீர் மிகுந்ததடாகமுஞ் சோலையுஞ்சூழ்ந்த திருப்பெருந்துறையை நீங்கிவழிக்குத் துணையாயிருக்கின்ற கடவுளுடைய பஞ்சாட்சரமும் உச்சரித்துக்கொண்டு தம்மைவணங்குகின்ற தூதர்களுடனே மதுராபுரியிற்சேர்ந்தார் திருவாதவூரர்-எ-

மதுரைமன்னவன்முன்னேகிமகிழிலாவணக்கஞ்செய்து
கதிர்மதிச்சடையோனீந்தகவின்கொண்மாமணியுநல்கி
எதிருறநின்றபோதிலின்புறவழுதிநோக்கி
விதிமுறையிருமினென்னவிருந்தனாவிரிந்தநூலார்.

(இ-ள்.) அம்மதுரை அரசனாகியபாண்டியனிடத்திற்குப்போய் மநதில்விருப்பமில்லாமற் புறத்தில் வணக்கஞ்செய்து கிரணநிறைந்த சந்திரனைத்தரித்த சடையையுடைய பரமசிவன்கொடுத்த அழகுபொருந்திய மாணிக்கத்தைக் கையுறையாகவைத்து எதிராகநின்ற மாத்திரத்தில் மநமகிழ்ச்சியுடனே பாண்டியராசன் பார்த்து முறைமைப்படி இங்கேயிருமென்றுசொல்ல விருந்தார் விரிந்தநூலில்வல்லவராகிய மாணிக்கவாசகர்-எ-று. (௱௬)

விலைமதிப்பில்லாவந்தமேதகுமணியைப்பல்கா
லிலையறவியந்துநோக்கிநெஞ்சினுவகையெய்தித்
தலைவனைச்சிந்தையுள்ளேதரிப்பவாதம்மைநாடி
சிலைமுகக்கரத்துமன்னன் செய்ததேதுரைமினென்றான்.

(இ-ள்.) ஒருவராலும் விலைமதிக்கக்கூடாத அந்தமேன்மை பொருந்திய மாணிக்கத்தை வியப்புடனே பலதரம் உற்றுப்பார்த்து மநதிலே சந்தோஷப்பட்டுப் பரமசிவனைக்கருத்திலே வைத்திருக்கின்ற திருவாதவூரரைப் பார்த்து விலைக் கையிலேந்துகின்ற பாண்டியன் நீர்செய்தகாரியமென்ன சொல்லுமென்றுகேட்டான்

மலக்கொடும்பகையைவெல்வார் மன்னவன்முகத்தைநோ
நிலத்தொளிர்புகழின்மிக்காய்நீ தருநிதிகொண்டேகி [க்கி
யிலக்கணக்குறைபாடின்றியீரிருகதியுமுண்டாங்
குலப்பரியினங்கள்யாவும் விலைக்குறக்கொண்டபின்னர்.

(இ-ள்.) மும்மலங்களென்னும் கொடியபகைகளைவெல்லுகின்ற திருவாதவூரர் பாண்டியன் முகத்தைப்பார்த்துப் பூலோகத்திலே விளங்குகின்ற மிகுந்த கீர்த்தியையுடைய அரசனே நீகொடுத்ததிரவியத்தைக் கொண்டுபோய் இலக்கணங்க ளொன்றுங் குறைபாடில்லாமல் நான்குகதிகளுமுடைய நல்லசாதியானகுதிரைக்கூட்டங்களெல்லாம் விலைக்குக்கொண்டபின்-எ-று. (ளசு)

அரும்பரித்தொகுதியெல்லாமணிதிகழ்மதுரைக்கேகப்
பொருந்தியதினமேதென்னப்பூசுரர்விதியிற்றேர்ந்து
திருந்துமாவணியாந்திங்கண்மூலநற்றினமாமென்ன
விருந்தனனதனைநாடியபெருந்துறையென்னுமூரில்.

(இ-ள்.) அருமையான குதிரைக்கூட்டங்களையெல்லாம் அழகுமிகுந்த மதுரைப்பட்டணத்திறகுக் கொண்டுபோகப் பொருந்திய நன்னாள்என்றைக்கென்று கேட்டபோது பிராமணர்விதிப்படிப் பார்த்துத் திருத்தமாகிய ஆவணிமாதத்தில் மூலநட்சத்திரம்நல்லநாளென்று சொல்ல அந்நாளைக்குறித்துக்கொண்டு திருப்பெருந்துறையென்னும் ஊரிலேயிருந்தேன்-எ-று. (ளஎ)

நின்படைச்சுற்றமெல்லாநீடுமிந்நகருநசெய்து
மன்புடன்கடிதுமீண்டாரவர்பெரும்படிறுகூற
மன்பெருமுனிவாலோலைவரைந்தனையதனுல்வந்தேதன்
கொன்பரிதிரள்களெய்துங்கூறுமாவணிமென்ருர்.

(இ-ள்.) உமமுடைய சேனைகளும, சுற்றத்தாரும நீடிய இந்த மதுராபுரிக்குப்போகவேண்டுமென்னும் விருப்பத்துடனே சீக்கிரத்திலே திருமபிவிட்டார்கள் அவாகள்என்மீது பெரியஅபவாதஞ்சொல்ல அதைக்கேட்டுநீர் கோபத்துடனே ஒருவோலையெழுதி அனுப்பிவைத்திர் அதனுலே முன்னதாகவந்தேன் பெருமைபொருந்திய குதிரைக்கூட்டங்களெல்லாம் நான்சொல்லிய ஆவணிமூலத்தன்றைக்கு வருமென்ருர் திருவாதவூரர்-எ-று. (எஅ)

என்பதுகேட்டுமாறனும்பிடையமக்குண்டான
மன்பெருநண்புநீங்கநினைத்துளமருக்கார்சொலலா
லன்பிலர்போலவோலையெழுதினமதுகொண்டென்னே
துன்புறலொழிவீரென்று நன்மையாய்த்தொன்மைகூறி

(இ-ள்.) இப்படிசொல்வதைக்கேட்ட பாண்டியன் உம்முடனே எமக்குண்டாகிய நிலைபெற்றமிகுந்த சினேகநீங்கும்படிக்கு நினைத்த கருத்துள்ளவர்களாகிய சிலர்சொல்ல அதனுலே அன்பில்லாதவர்கள்போல ஓலையெழுதினம் அதுகொண்டென்ன காரியம் மனவியாகூலம் ஒழிவீர்களென்று நன்மையாகப் பழையவுரிமையின்படியேபேசி-எ-று. (எக)

கொன்னெடுங்கோயிலூடுகொடுபுகுந்துரிமைகூரத்
தனனருகிருக்கிமேன்மைதக்காற்கலைமணல்பெ [போன்
பொன்னணிகலன்களியவும்புனையுமென்றளிதது முன்
மன்னுளகருமங்கூறிமனைபிடையேகுமென்ருன்.

(இ-ள்.) பெருமைபொருந்திய நெடிய அரண்மனையிடத்தே அழைத்துக்கொண்டுபோய் உரிமையாகத் தன்னுடையபக்கத்திலிருத்தி உயர்ந்தசருதியாகிய நல்லவாசிரிகளைகொடுத்துப பொன்னிறைசெய்த பலபல ஆபரணங்களைந் தரித்துக்கொள்ளுமென்று கொடுத்து முன்போலத்தானே இராஜகாரியங்க ளெல்லாஞ் சொல்லி வீட்டுக்குப்போமென்று விடுத்தான் பாண்டியராஜன -எ-று

தன்பெருமனையிற்சென்றுகாபகாவைகப்பின்னர்
நன்பரிசமுகமெய்துநாளிரண்டென்னுமுன்னர்
வெம்படைச்சுற்றநீங்கிநிருந்தாழிவிரிக்கநேமி
யம்புவிநகரசன்றன்முன்மைச்சரிலொருவன்சென்று.

(இ-ள்) தன்னுடைய பெரிய அரண்மனைக்குப்போய்த் திருவாதவூரிருக்கப் பின்பு நல்லகுதிரைக்கூட்டங்கள் வரவேண்டிய தினத்துக்கு இரண்டுநாளைக்குமுன்னே விரியப்பெற்ற சமுத்திரஞ்சூழ்ந்த புவிக்கரசனாகிய பாண்டியன் வெவ்வியசேனாதிபதிகள் சுற்றங்கள்யாவரையும் நீங்கித்தனித்திருக்கும்போது மந்திரிகளிலே ஒருவன்முன்னேபோய்-எ-று. (௱டு)

போற்றியெமபொருநைநாடபோற்றியென்றிறைஞ்சிக்கூறு, மாற்றமுண்டொன்றுநினபேர் புனைந்துளவரிசைபெற்றோர், சாற்றருந்துரகங்கொள்ள நேரியன்றலத்திற்சார்ந்து, நீறறினனடியார்கையினிலபொருள்யாவுமீந்தார்.

(இ-ள்.) பொருநைநாடனாகிய அரசனே சரணஞ் சரணமென்று வணக்கஞ்செய்து யான்சொல்லுகின்ற விண்ணப்பமொன்றுண்டு அதென்னெனில் தென்னவன் பிரமராயனென்று நின்பெயரைத்தரித்திருக்கின்ற வரிசைபெற்றோராகிய மந்திரியார்சொல்லுதற்கரிய குதிரைகொள்வதற்குச் சோழனுடைய தேசத்துக்குப்

போய்த் திருநீறுதரிக்கின்ற பரமசிவனடியார்கையில் உன்னுடைய திரவியங்களெல்லாங் கொடுத்துவிட்டார்-எ-று. (௱௰௨)

நின்பெருந்தூதரோகியெழுதுநின்னோலைகாட்டுமே
பின்புவந்தனதுசீற்றமொழித்ததுயிர்பிழைக்கவெண்ணி
யன்புடையவர்போலுன்றனடியிணைகுறுகிப்பின்னர்
நன்பரித்திரளிங்கெய்துநாளுனக்களிப்பரென்றார்.

(இ-ள்.) பெரிய உம்முடைய தூதர்கள்போய் நீரெழுதிய வோலைகாட்டியபின்பு அவர்வந்து உமதுகோபத்தை நீக்கித்தம்முயிர் பிழைப்பதுகருதி அன்புடையவர்கள்போல உமது திருவடியைச்சேர்ந்து ஆவணிமூலத்தில் நல்லகுதிரைக்கூட்டங்களிங்கு நானுனக்குத் தருவேனென்றார்-எ-று. (௱௰௩)

மற்றவர்மொழிந்தவெல்லாம்பொய்யுரைமன்னவென்னச்
சொற்றமிழ்வையைநாடன்றூதரைவெருவநோக்கி
யற்றமில்சுருதிவல்லாரருட்பெருந்துறையிலெய்தி
யுற்றவெம்பரிகளுண்டேலொல்லைவந்துரைமினென்றான்.

(இ-ள்.) அந்தத்திருவாதவூரர்சொன்ன வார்த்தையெல்லாம் பொய்வார்த்தையாகும் அரசனேயென்று சொல்லப் பாண்டியராஜன உடனே தூதர்களஞ்சும்படிப்பார்த்துச் சோர்விலலாத வேதத்தில்வல்ல பெரியோர்கள்வசிக்கின்ற மகிமைபெற்ற திருப்பெருந்துறைக்குப்போய் அங்கே குதிரைகளிருக்கின்றனவா வென்று சீக்கிரத்தில பார்த்துவந்து சொல்லுங்களென்றான்-எ-று. (௱௰௪)

அருந்திறற்றூதரோகியத்தினங்கடிதுமீண்டு
வருந்திமுன்சென்றுமனனர்மன்னனைவணங்கிநின்று
பெருந்துறையென்னுமூரும்பிறிதுளபதியுந்தேடி
அருந்தடங்களிற்றுவேந்தகண்டிலம்பரிகளென்றார்.

(இ-ள்.) அரியதிறத்தையுடைய தூதர்கள்போய் அன்றைய தினந்தானே சீக்கிரத்திலே திருப்பெருக்கத்தோடு மன்னர்மன்னனாகிய பாண்டியன் முன்னே வணங்கிக் கரியமலைகள்போன்ற யானைகளையுடைய வரசனே திருப்பெருந்துறையென்று மூரிலும் அடுத்தமற்றவூர்களிலுந்தேடிப்பார்த்தோம குதிரைகளைக் காணவில்லையென்றார்கள்.எ-று. (௧௰௫)

பாங்குநின் றின்னவாறுபகர்தலும்வெகுட்சியெய்தி
யீங்குநங்கருமஞ்செய்வனென் றிடர்செய்வான்றன்னைத்
தாங்கருந்துயரஞ்செய்து தனைக்குநந்த நிதியமெல்லாம
வாங்குமின் றண்டலாளரென் றிகன்மன்னவன்சொன்னான்.

(இ-ள்.) தூதர்கள் இந்தப்பிரகாரஞ் சொன்ன மாத்திரத்திலே கோபமடைந்து இங்கே நம்முடைய காரியஞ் செய்கிறேனென்று போய் நமக்குத்துன்பஞ் செய்தவனைப் பொறுத்தற்கரிய துயரஞ் செய்து நம்முடைய திரவியங்களையெல்லாம் வாங்குங்கள் தண்டற்காரர்களேயென்று ஆக்கியாபித்தான் வலிமையுடைய பாண்டியராசன்-எ-று. (௧௰௬)

மன்பெருந்தண்டலாளர்மறையவர்குலத்துக்கதிபர்
முன்புநின்றினையசொல்வார்முனிவுடைமுகத்தராகி
நன்பரித்தொகுதிகொள்ளநயந்துமக்களித்த
தன்பொருளெல்லாம்வாங்கச்சாற்றினன்சிறந்தமன்னன்.

(இ-ள்) அரசனுடைய பெரியதண்டற்காரர்கள் பிராமணகுலசிரேஷ்டராகிய மிகுந்தமாணிக்கவாசகர் முன்னேநின்று இவைகளைச் சொல்வார்கள் கோபத்தையுடைய முகத்தினராகி நல்லகுதிரைகளைக் கொள்ள நட்புடனே உம்முடைய வசையில அந்நாளிற் கொடுத்த தன்னுடைய திரவியமெல்லாம் வாங்கச் சொன்னான் கோபத்தையுடைய பாண்டியனென்று பின்னுஞ்சொல்லுவார்கள்-

மற்றிதன் பயனியாதென்னின் மன்னவன் விடுப்பவென்றி
யுற்றவன்றூதர்வலியொடு பெருந்துறையிலெய்திக்
கொற்றவெம்பரிகள் காணார் மீண்டனரோவுறும்பாற்
பற்றியநேசமவிட்டான் பாரினியாளவொட்டான்.

(இ-ள்.) இப்போது நாங்கள் பணத்தைக்கேட்பதற்கு நிமித்தமென்னவெனில், அரசனாலே விடுக்கப்பட்ட வெற்றிபொருந்திய வலிமையுடைய தூதாகள் சீக்கிரத்திலே திருப்பெருந் துறைக்குப்போய் வெற்றியையுடைய வெவ்வியகுதிரைகளைக் காணாமல வந்துவிட்டார்கள் ஆகையால் அரசனும் உம்மிடத்திலே வைத்த நேசத்தை விட்டான் இனிப்பூமியையும் ஆளவொட்டான்-எ-று.()

தனமினித்தருகவேண்டுமென்றுவன்றண்டலாளர்
சினமுடன்புகலவாளாவிருந்தலுந்தீமைகூறு
நினைவுடனமைச்சர்வாழ்வுநீக்கிமெய்வாக்கின்மன்னர்த்
தனியுறவலித்திறற்சாலையிலாக்கினார்கள்.

(இ-ள்.) திரவியமுழுவதுங்கொடுக்கவேண்டுமென்று பின்பு தண்டற்காரர் கோபததுடனேசொல்லப பேசாமலிருக்கவே அவர்கள் தீமைமிகுந்தமனதுடனே அமைச்சரிமையை நீக்கி உண்மை வாக்கையுடைய மாணிக்கவாசகரை வலிமையாகச் சிறைச்சாலையில் வைத்தார்கள்-எ-று. (௱௰௧)

சற்றுமுட்டளர்விலாததன்மையின்வாதவூரர், மற்றவர்செ
லுத்தச்சென்றுவன்சிறைச்சாலையெய்த, நற்றவர்வருத்தங்
காணநாணமுற்றொளிப்பான்போன்று, பொற்றடந்தேரின்
வெய்யோன் போய்க்குடபான்மறைந்தான்.

(இ-ள்.) சற்குருவினுடைய கட்டளைக்குக் குறைவில்லாத தன்மையையுடையவராய்த் திருவாதவூரரானவர் அந்தக்குதிரைகளைச் செலுத்தப் போய் வலியகுறைச் சாலையையுடைய நல்லதவத்தையுடைய இவரது வருத்தத்தைப் பார்க்க மனமுடைந்து ஒளிப்பவனைப் போலப் பொன்மயமாகிய விசாலம்பொருந்திய தேரினின்றும் சூரியன்போய் மேற்குத்திசையின்கணே மறைந்தான்-எ-று. (௱௨0)

கள்ளுலாமிதழிமாலைகவின்பெறமுடித்தவேணி
வள்ளலாரேவச்சென்றவழுதிமேல்வெகுட்சிகொண்டு[ன்
வெள்ளைவான்பிறைப்பற்றோன்றவிழுங்கவங்காந்தபேயி
கொள்ளிவாயனையவண்ணங்கொண்டதுசெக்கர்வானம்.

(இ-ள்.) தேனுலாவிய கொன்றைமாலிகையை அழகுபெற முடித்த சடையையுடைய பரமசிவன் ஏவப்போய்ப் பாண்டியன் மேற் கோபங்கொண்டு வெளுத்தமேலாகிய பிறைப்பலலானது தோன்றி விழுங்கவாயைத்திறந்த கொள்ளிவாய்ப் பசாசம்போல வடிவுகொண்டது செக்கர்வானம்-எ-று. (௱௨௧)

தெண்டிரையுலகினல்லதிறத்தினர்க்குற்றதீங்கு
கண்டுளசிறியோர்போலநகைத்தனகவின்கொண்முல்லை
யொண்டமிழ்வாதவூரர்க்குற்றதையுணர்ந்தேதுன்பங்
கொண்டவரிதயம்போலக்குவிந்தனகமலமெல்லாம்.

(இ-ள்.) தெளிந்த அலைநீர்சூழ்ந்த உலகத்திலே நல்லயோக்கியர்களுக்குச் சம்பவித்த தீங்கைப்பார்த்த சிறியவர்கள்போல வாசனைகொண்ட முல்லைச்செடிகள் சிரித்தன, ஒள்ளிய தமிழ்வேதம் பாடுகின்ற மாணிக்கவாசகருக்குவந்த தீங்குதெரிந்து துன்பங்கொண்ட பெரியோர்கள் சிந்தைபோலக் குவிந்தன தாமரைகளெல்லாம்-எ-று. (௱௨௨)

தென்னவன் வைத்த காவற் சிறையினி லுறைதரு தெய்வ
மன்னவ ரொருவர் காணின் மனமுற் றயர்வா ரென்றே
யின்னலைக் கொண்மனத் தாள்போல விருட்கரங் கொண்டு கூடப்
பொன்னகருள்ளார் கண்கள் புதைத்தனள் கங்குல் மங்கை.

(இ-ள்.) பாண்டியனால் வைக்கப்பட்ட சிறைச்சாலையிலே தங்கிய செய்வத்தன்மையையுடைய திருவாதவூரர் ஒருவர் கண்டால் மனமழிவாரென்று துன்பங்கொண்ட மனமுடையவள் போல இருளாகிய கைகளைக்கொண்டு அழகியமதுரைமாநகரி லுள்ளவர்கள் கண்களைப்புதைத்தனள் இராத்திரியாகிய பெண்-எ-று. (௱உ௫)

மன்பகை தீரப்ப திந்த மந்திரித் தலைவர்க் குண்டா
மென்பது முளதோ வந்தோ வென்செய்து மென்றி ரங்கி
யன்பரை யகன்று நெஞ்சா லழலெழ வுயிர்த்து மாழ்குந்
துன்புடை மடவார் போலத் துயிலிலா மதுரையுள்ளார்

(இ-ள்.) பாண்டியனுடைய பகையை நீக்கிக்கொள்ளுந் தன்மை இந்தமந்திரிகளிலே முதன்மைபெற்ற திருவாதவூரருக்கு உண்டாமென்று சொல்வதுமுண்டோ ஐயோ இதற்குநாமென்ன செய்வோமென்றிரங்கித் தலைவனைப்பிரிந்து ஆற்றாமையுள்ளமனத்தோடு அழலாகிய பெருமூச்சுவிட்டு மயங்குகின்ற துன்பத்தையுடைய மகளிர்போல அன்றிரவில் நித்திரைசெய்கிலர் மதுரையி லுள்ளவர்களெல்லாம்-எ-று. (௱உ௬)

செம்மனப் புனிதர்க் குண்டாந் தீங்கு தங்கிழமை யாலே
மைம்மரு மக்கட வுளீன்ற வருமுகற் குரைக்கு மாபோல்
விம்முசெஞ் சூட்டு முட்டாள் வியன்சிறைச் சேவ லெல்லாந்
தம்மனை யிடங்க டோறு நழங்கின புலரி காலை.

(இ-ள்.) நல்லமனத்தையுடைய பரிசுத்தரான திருவாதவூராருக்கு உண்டாகிய தீங்கினைத் தங்களுக்கிருக்கின்ற உரிமையினாலே ஐந்துமுகசத்தியையுடைய பரமசிவனீன்றருளிய ஆறுமுகசுவாமிக்குச் சொல்வதுபோலப் பருத்தசிவந்த உச்சிக் கொண்டையையும் முள்ளையுடையகாலையும் பெரியசிறைகளையுமுடைய சேவல்களெல்லாந் தங்கள்தங்கள் வீடுகடோறும் விடியற்காலத்தில் சத்தித்தன-எ-று. (௱உரு)

சிற்பரமுணர்ந்துஞானச் செந்தமிழோதுநீதிப
பொற்பினையுடையோரின்னல் பொறாதுசென்றுரைப்பார்
விற்பொலிசடிலஞ்சூலமேலைஞெல்வாயி [போல
நிற்பநங்கோவின்முன்றிலார்த்தனசங்கமெங்கும்.

(இ-ள்.) பரமசிவனது யதார்த்தவழியை யறிந்து செவ்விய தமிழ்வேதமென்கிற ஞானநூலையோதும் நீதியையுடைய மாணிக்கவாசகரது துன்பத்தைப் பொறுக்கமாட்டாமற்போய்ச் சொல்லுகின்றவர்கள்போலப் பிரகாசம்பொருந்திய சடையையுடையவராயும் சூலாயுதத்தை யுடையவராயும் திருவாயிலெழுந்தருளி யிருக்கின்ற சொக்கநாதர் சந்நிதிக்குமுன்னே அனேகசங்கங்கள் முழங்கின-எ-று. (௱உசு)

எம்மிறைபரியிலேறுநாளிதோவென்றுபார்க்குஞ்
செம்மலர்மடவாளிட்டதிலகசெந்தூரம்போல
வம்மலைமிசையேவைகியாடகக்கிரிசூழ்போந்து
மைம்மிகுகடன்மேல்வந்துமுளைத்ததுவாலபானு.

(இ-ள்.) எம்முடைய கடவுள் குதிரையிலேறி வருகின்ற நாளித்தானென்று பார்க்கின்ற செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கப்பெற்ற திருமகளணிந்த சிந்தூரப்பொட்டுப்போல மேற்குமலையில்

அஸ்தமித்து மகமேருமலையைச் சுற்றிக்கொண்டுவந்து கருமைமி
குந்த கீழ்க்கடலிலே உதயமானான் இளஞ்சூரியன-எ-று. (௱௨௭)

மண்கெழுசெங்கோல்வேந்தன்வைகறையெழுந்துநீராற்
கண்கழலவிளக்கிமூழ்கிக்கண்ணுதற்பூசைசெய்து
தண்கதிர்முத்தமாலைசாத்துநற்கலன்கடாங்கி [ன்.
விண்ணொளிர்செம்பொற்கோயின்முகப்பினில் வீற்றிருந்தா

(இ-ள்.) பூவுலகத்திற்செங்கோல் செலுத்துகின்ற பாண்டிய
ன்விடியற்காலத்தில்நித்திரையையொழித்துக கண்கால்முதலிய அ
வயவங்களைச்சுத்திசெய்து ஸ்நானஞ்செய்துசிவபூசைசெய்து குளிர
ச்சிபொருந்திய கிரணங்களையுடைய முத்துமாலைகளைத் தரித்துக்
கொண்டு நல்ல ஆபரணங்களையணிந்துகொண்டு ஆகாயமளாவிய
செம்பொன்னிறைசெய்த தன்னுடைய அரண்மனை முகப்பிலே
வந்து வீற்றிருந்தான-எ-று. (௱௨௮)

வன்றிறலாளரெல்லாமவாம்பரித்திரள்கள்கொள்வாரு
சென்றனரடியார்க்கீந்தசெம்பொருட்டாரீராகி
லின்றுமைவருத்தஞ்செய்துமெனவெரிவெயிலினூடு
நின்றிடுமென்னநின்றார் நீள்பெரும்புகழினிற்பார்.

(இ-ள்.) வலியசௌரியத்தை யுடைய தண்டற்காரர்க ளெல்
லாம் தாவுகின்ற குதிரைக்கூட்டங்கள் கொள்ளப்போய்ச் சிவன
டியார்களுக்குக் கொடுத்துவிட்ட நல்லதிரவியத்தைத் தரமாட்டீ
ராகில் இன்றைக்கு உம்மை வருத்தப்படுத்துவோமென்று எரிகி
ன்ற வெயிலிலே நின்றிடுமென்றுசொல்ல அப்படியேநின்றார் மி
குந்தபுகழில் நிற்பவராகிய திருவாதவூரர்-எ-று. (௱௨௯)

அங்குநின்றிளைப்பார்தம்மையாண்டவான்றகையையுன்னி
யிங்குணர்ந்திலைகொல்லோவென்றுதம்மனத்தேசொல்லிச்

சங்குவெண்குழையாய்மன்னன்றனக்குவாம்பரிகளீத
னங்கடனாகுமென்றுநவின்றசொற்பொய்ம்மையாமோ.

(இ-ள்.) அந்தவெயிலிலே நின்று இளைப்பாராகிய மாணிக்க வாசகர் தம்மையாண்ட குருவைநினைத்து இங்கேயெனக்கு நேரிட்ட வருத்தத்தை அறிந்தாயில்லையோவென்றும் வெள்ளிய சங்கக் குழையையுடைய பரமசிவனே பாண்டியனுக்குத்தாவுகின்ற குதிரைகள் கொடுப்பது நம்முடைய கடனாகுமென்று சொன்னசொற் பொய்ம்மை யாமோவென்றும் தம்முடைய மநதிற்சொல்லுவார்-எ

ஊனுடம்புடையவாழ்க்கையொழித்துனக்கடிமையென்று
மாநிலம்புகலுமாறுவந்துனையடைந்தேன்றன்னை
மீனவன்றன்பான்மீளவிடுத்தனைவேலைநீரு
ளானபினந்நீராறுநீரெனவாவதுண்டோ.

(இ-ள்.) மாமிசபிண்டமாகிய தேகவாழ்வைநீக்கி உனக்கு அடிமையானவனென்று பெரியவுலகத்தார் சொல்லும்படிவந்து உன்னையடுத்த அடியேனைப் பாண்டியனிடத்தில் மறுபடியும் விட்டாய் ஆற்றுநீர்ச் சமுத்திரத்துடனே கலந்தபின்பு அக்கடல்நீராகுமேயல்லாமல ஆற்றுநீராவதுண்டோ-எ-று. (௱௯௧)

அறத்தணிச்செல்விபாகவன்பிலேனின்பாலென்று
வெறுத்திடிலடியேற்கிங்குவேறொருதுணையுமில்லை
செறுத்துயர்புரங்களெல்லாஞ்செற்றவரடியான்றன்னை
நிறுத்தினர்வெயிலிலென்றானின்புகழ்க்கேற்றமாமோ.

(இ-ள்.) முப்பத்திரண்டு தருமத்தையும் வளர்க்கின்ற ஒப்பற்ற உமாதேவியை ஒருபாகத்திலேவைத்த கடவுளே உம்மிடத்தில் அன்பில்லேனென்று என்னை வெறுத்துவிட்டாய் அடியேனுக்கு

இங்கேவேறொரு துணையுமுண்டோ பெரியதிரிபுரங்களைக் கோபி த்தெரித்த சிவனுடைய அடியாரை வெயிலிலே நிறுத்தினார்களெ ன்றால் உம்முடைய கீர்த்திக்குப்பெருமையாகுமோ-எ-று. ()

வானநாடவர்க்குமேலோய்வந்தனைகடிமைப்பபோ
தானநானிமையுற்றாலாருனக்கடிமையாவார்
நானெனாமந்தார்சொலனுநலனுமையன்றிநின்ற
வீனனொருவன்சொல்லலேறுமோவுனத்திலென்றார்

(இ-ள்.) தேவர்களுக்கு மேலானவரேவந்து உமக்குஇப்போ து அடிமையானநான் துன்பப்பட்டால் யாருனக்கு அடிமைப்ப டுவார்கள் யானென்னும் அகந்தையறுத்த நல்லமநத்தையுடையவ ர்கள் சொல்லுகின்ற நலலசொல்லல்லாமல் ஈனனாகிய என்னுடை ய சொல்லானது செவியிலேறுமோவென்றார்-எ-று. (௱௩௩)

அவத்தொழில்புரியாமேன்மையன்பருக்கன்புசெய்து
பவக்கடலிடைவிழாமற்பரிதருட்பார்வைநல்கி
தவப்பெருவடிவநகொண்டுகாளளித்தாருமையர்
செவிப்புலன்புகுந்ததன்பாசெப்பியமாற்றமெல்லாம்

(இ-ள்.) அவந்தொழிலைச்செய்த மேன்மையையுடைய அன் பரிடத்திலே கிருபைசெய்து பிறவிக்கடலிடைவிடாமல் அன்புட னே கிருபாநோக்கமருளிக் குருமூர்த்தமாக யெழுந்தருளித் திருவ டியைக் கொடுத்தருளுகின்ற பரமசிவனுடைய செவியினிடமாக நுழைந்தது திருவாதவூரர்சொல்லிய சொற்களெல்லாம்-எ-று. ()

காமபடுதோளிபாகன்கண்ணுதலண்ணலன்பர், தாம்படுது யரமெண்ணி யத்துயர்தணிக்கவேண்டித், தேம்படுமலங்க ண்மார்பிற் றென்னவன்றனக்குவென்றி, வாய்பரியளித்தல் சொல்வாம்வல்வினைப்பகையைவெல்வாம்,



லவணமரிகுதிரைகளைக்கொண்டுவந்தது.





பரிகள்நரிகளானது.

(இ-ள்.) மூங்கிலினையொத்த தோளினையுடைய உமாதேவி பாகனுகியும் நெற்றிக்கண்ணை யுடையவனுகியும் இருக்கின்ற பரமசிவன் தன்னுடைய அடியாராகிய திருவாதவூரர் படுகின்றதுயரத்தை நினைத்து அந்துயரத்தை நீக்கவேண்டி வாசனைபொருந்திய வேப்பமாலையணிந்த மார்பையுடையபாண்டியனுக்கு வெற்றியையுடைய தாவுகின்ற குதிரையைக்கொடுத்த கதையைச்சொல்லித் தீவினைப்பகையை வெல்லுவோம்-எ-று. (ளகூ)

## திருப்பெருந்துறைச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம்-ளஅஉ.

# குதிரையிட்டசருக்கம்.

## சந்தவிருத்தம்.

தந்தையென்பவர்மைந்தர்வாதைதவிர்ப்பதேகடனுதலா
லந்தமின்றியகாதலன்பரமுங்கல்கண்டபினரியெலாம்
வந்துவெம்பரியாகவும்பரிவீரர்வானவராகவுஞ்
சிந்தைகொண்டனரங்கமால்விதிதேடுவார்மதிசூடுவார்.

(இ-ள்.) பிள்ளைக்குவந்த வருத்தத்தை நீக்குவது பிதாக்களுக்குக் கடனுகையாலே முடிவில்லாத அன்பையுடைய திருவாதவூரர் வியசனப்படுவதைப்பார்த்த பின்பு நரிகளெல்லாம்வந்து வெவ்விய குதிரைகளாகவும் தேவர்கள் அந்தக்குதிரைகளைச்செலுத்துகின்ற இராவுத்தராகவும் மனத்திலேநினைந்தார் அந்தமகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தேடுவாரும் சந்திரனை முடியிற்றரிப்பவருமாகிய பரமசிவன்-எ-று. (க)

தேசிலாநரிவந்துவந்துதிரண்டுவெம்பரியானபின்
றூசிலாவிமையோர்கடாமுமமைந்தசேவகராகினார்
மாசிலாமணிமன்றனாரியவாசிவாணிபர்போலவே
யேசிலாவுருமாறினார்மறையிவுளியின்புறமேவினார்.

(இ-ள்.) அழுக்கில்லாதநரிகள்வந்துவந்துகூடிவெவ்வியகுதிரைகளானபின்பு குற்றமில்லாத தேவர்களும், அவைகளுக்கு ஏற்றஇராவுத்தராயினார்கள் களங்கமில்லாத அழகியசபையினிடத்திலே நடனஞ்செய்கின்ற கடவுளானவர்ஆரியதேசத்துக்குதிரைவர்த்தகர் போல ஏசுதலில்லாத தம்முடையஉருவமாறினவராகி வேதக்குதிரையின்மே லேறிக்கொண்டார்-எ-று. (உ)

சேடுகொண்டுதிரண்டுவீரரிரண்டுபாங்கர்சிறக்கவே
யூடெழுந்துகளிம்பரெங்கணுமும்பருங்கிளர்வெய்தவே
கோடுடன்றுடிவிம்மநீடியகூடல்சூழ்மதில்வாயில்வா
யாடல்வெம்பரிகொண்டுசென்றனராதியாருமைபாதியார்.

(இ-ள்.) சவுக்குகள்கொண்டு குதிரைச்சேவகர் திரண்டு இரண்டுபக்கங்களிலுஞ் சிறப்பாகவர அவ்விடத்திலேஎழுகின்றதூளியானது பூமியாகாயமெங்கும் பறக்க ஊதுகொம்பு உடுக்கை முதலிய வாத்தியங்களுஞ்சத்திக்க மதுரைமாநகரத்து நெடியமதில்வாயிலினிடத்தே ஆடுகின்ற வெவ்வியகுதிரைகளைக் கொண்டுவந்தார் யாவர்க்கு முதல்வராகியும் உமாதேவியை யொருபாகத்திலுடையவராயும் இருக்கின்ற கடவுள்-எ-று. (௩)

அங்குநின்றவர்சென்றுசிம்பவலங்கலானைவணங்கியே[வே
யெங்கணுந்துகள்பொங்கிவிம்மவெழுந்துகாகளமார்ப்ப
திங்கள்வெண்குடைமன்னவாரியதேசவெம்பரியின்றுநற்
றுங்கவன்மதிலின்புறத்துத்துவன்றிவந்தவெனச்சொனார்.

(இ-ள்.) அங்கே நின்றவர்கள்போய் வேப்பமாலையைத் தரித்த பாண்டியனைவணங்கி எவ்விடத்திலுந் தூசகளெழும்பி நெருங்கவும் சின்னங்கள் முழங்கவும் சந்திரவட்டக்குடையையுடைய அரசனே ஆரியதேயத்துக் குதிரைகளின்றைக்கு நம்முடைய உயர்ந்தவலிமையான மதிற்புறத்துநெருங்கி வந்தனவென்றுசொன்னார்கள்-எ-று. (௪)

வாசியின்றிரள்வந்தவென்றலும் வாதவூருறையையர்மே,
னேசம்வைத்தவர்தம்மை முன்னரழைத்துநீர் கலையாதிதந்,
தாசில்வெம்பரி காணவம்மினென்றேகியங் கெழுந்தடைய
லார்,கூசுதன்படைசூழவேயிறைகோவிலின்புறமெய்தினான்

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் வந்தனவென்று சொன்னமாத்திரத்திலே திருவாதவூரரிடத்தில் நேசம்வைத்து அவரை வரவழைத்து வஸ்திரமுதலிய வெகுமதிகள் கொடுத்துக் குற்றமில்லாத வெவ்விய குதிரைகளைப்பார்க்க வாருமென்றுசொல்லி எழுந்துசத்துருக்களும் அஞ்சத்தக்க தன்னுடைய சேனைகள்சூழப் பாண்டியராஜனானவன் அரண்மனையைவிட்டுப் புறத்துவந்தார்-எ-று. (௫)

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வண்டுபடியலங்கனெடுந் தடந்தோண் மாறன்மணிச்சிவி
கைமீதேறிமதுரைமூதூர், கண்டிநகண்களிக்கும்வகையால
வாயிற் கடவுளிடும்பரிவரவுகாண்பானெண்ணிச், செண்டு
வெளிதனிற்போந்து பனிநீர்தோய்ந்தசெங்கழுநீர் மதுமாலை
சிறந்துதூங்குந், தண்டரளமணிப்பந்தர் நிழற்கீழம்பொற்ற
விசின்மிசை யினிதிருந்தான்றானைசூழ.

(இ-ள்.) வண்டுகள்மொய்க்கின்ற வேப்பமாலையணிந்த நெடியவிசாலம்பொருந்திய புஜத்தையுடைய பாண்டியனானவன் இரத்

தினைச் சிவிகையேலேறிக்கொண்டுபழமையாகிய மதுராபுரியிலுளளவர்கள் பார்த்து இரண்டுகண்களுங்களிக்கும்படி திருவாலவாயிலிருக்கின்ற சொக்கநாதரகொண்டுவருகிற குதிரைகளின் வரவினைக்காணநினைத்து வையாளிவெளிக்குப்போய்ப் பனிநீர்தோய்ந்த செழுமைபொருந்திய செங்கழுநீர்மாலைசிறந்து தொங்குகின்ற குளிர்ச்சிபொருந்திய முத்துப்பந்தலினிழற்கீழ் அழகியபொன்னாற்செய்த சிங்காசனத்தின் மேல இனிதாகவிருந்தான் சேனைகள்சூழ-எ-று. (சு)

முத்தமிழின்றிறநவிலும்புலவர்சூழ முதுமறையோர்மங்கலச்சொன்முறையிறகூறக, கைத்திகழும்வளைபுலம்பக்கலன்கண்மின்னக்கன்னியர்களிருபாலுங்கவரிவீசக, கொத்துலவுமபலமலரின வாசந்தோய்ந்துகுலவுமிளந்தென்றல்வரமாதர்பாட, மெத்துமணிமுத்தமெனும்பணிகள்பூண்டு வெண்மதியினைநேற்றம்போலவீற்றிருந்தான்.

(இ-ள்.) இயலிசைநாடகமென்னும் முத்தமிழின்றிறத்தை அறிந்த புலவர்கள்சூழப் பழைமையாகிய வேதப்பிராமணர்கள் முறையாக வாழ்த்தெடுக்கக் கைகளிலணிந்திருக்கின்ற வளையல்கள் தொனிக்க ஆபரணங்கள் ஒளிசெய்ய மங்கையர்கள் இரண்டுபக்கத்திலுமிருந்து வெண்சாமரைகள்வீசப் பலபூங்கொத்துகளின் வாசனையளாவிப் பொருந்திய இளந்தென்றலானதுவீச மகளிர்கள்பாட மெச்சுகின்ற முத்துமாலிகையைத் தரித்துக்கொண்டு வெண்மையாகிய உதயகாலத்துச் சந்திரனைப்போல வீற்றிருந்தான் பாண்டியராஜன்-எ-று. (எ)

மங்குல்படிதடம்புரிசைவாதவூரர் மனங்களிப்பவிழிகளிப்ப வழுவிலாத, திங்களெனுந்தன்மரபுவிளங்கவென்றுந் திரு

நீறுபஞ்செழுந்துஞ்சிறந்துமல்கச், சங்கினுடன்காளங்கண்
முழவமார்ப்பத் துயங்கியெழுந்துகளுயர்வான்றன்மேற்செ
ல்லத், துங்கநெடுங்கடல்பரந்து வருதல்போலத்துவன்றியுள
பரித்திரளினைத்தென்னவன்கண்டானே.

(இ-ள்.) மேகங்கள் தங்குகின்ற விசாலமாகிய மதில்சூழ்ந்த திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகருடைய மநது சந்தோஷிக்கக் கண்கள் களிக்கக் குற்றமற்ற தன்னுடைய சந்திரவம்சம் விளங்க என்றைக்கும் திருநீறும், பஞ்சாக்ஷரமுஞ்சிறந்து நிலைபெறச் சங்குகளும், சின்னங்களும், பேரிகைகளும் சத்திக்கப் பூமியிலே யெழுகின்றதூள்கள் உயர்ந்த ஆகாயத்தின்மேற் பரவப்பெரிய கடலானது பரவிவருகின்றதுபோல நெருங்கிவருகின்றகுதிரைக்கூட்டங்களின் தோற்றத்தைக்கண்டான் பாண்டியராஜன்-எ-று. (அ)

கலிவிருத்தம்.

அங்கிளர்மதுரையம்பதியிலாவணித்
திங்களின்மூலநாளெறிதினத்தினி
லெங்கணுநீறுமஞ்செழுத்துமோங்கிடச்
சங்கரனிம்பரிச்சமூகம்வந்தவால.

(இ-ள்.) அழகுமிகுந்த மதுரைமாநகரத்தில் ஆவணிமாதத்தில் மூலநாளில் எவ்விடத்திலும்திருநீறும்பஞ்சாக்கரமும்விளங்கும்படிப்பரமசிவனாலே இப்படிப்பட்ட குதிரைக்கூட்டங்கள்வந்தன-

தூத்திரண்மணிகெழுசோதிமாமுடிப்
பார்த்திவன்விழிகளும்பருகவீதியிற்
கூத்தினர்செயலெனக்குலாவுலாம்பரிச்
சாத்தனர்வரும்பெருந்தன்மைகூறுவாம்.

(இ-ள்.) பரிசுத்தமாகிய திரட்சிபொருந்திய இரத்திநம்பதித்துப் பிரகாசிக்கின்றபெரிய கிரீடந்தரித்த அரசனுடைய கண்களைவிருந்துண்ண வீதியினிடத்திலே கூத்தாடிகள்செய்கையைப்போல விளங்கித்தாவுகின்ற குதிரையைநடத்தி இராவுத்தர்கள் வருகின்ற பெரியதன்மையைச் சொல்லுவாம்-எ-று. (ம)

கட்டியசுரிகையர் கவின்கொள்வாளினர்
பொட்டணிநுதலினர்பொன்செய்மேனியர்
பட்டுடைமருங்கினர்பவளசீர்வடம்
விட்டொளிவிளங்கியவியன்கொண்மார்பினர்.

(இ-ள்.) அரையிலேகட்டிய உடைவாளினையுடையவரும் அழகிய கத்தியையுடையவரும் சந்தனப்பொட்டணிந்த நெற்றியையுடையவரும் பொன்னிறமாகிய மேனியையுடையவரும் பட்டுவஸ்திரத்தை யணிந்த அரையையுடையவரும் விட்டுவிட்டு ஒளிசெய்கின்ற பவளமாலையையணிந்தவிசாலமாகிய மார்பையுடையவர்.

புன்மயிற்பீலியர்புலியின்றோலினர்
பின்மலர்ப்பாசிலேபிணைத்தகுஞ்சியர்
வன்மொழிநகுரலினர்வயங்குதூணியர்
வின்மலிகரத்தினர்வெறித்தபார்வையர்.

(இ-ள்.) இலேசாயிருக்கின்ற மயிற்பீலியை யுடையவரும பொன்னரி மாலையையுடையவரும் பின்புறத்தில் தாழ்கின்ற குடுமியிலே மலரும்பச்சிலேயும் சேர்த்துக்கட்டிய மாலையை யணிந்தவரும் உரத்தசொல்லையுடைய குரலினரும்பிரகாசிக்கின்ற அம்பறுத்தூணியுடையவரும் வில்லேந்திய கைகளையுடையவரும் வெறித்தபார்வையையுடையவரும்-எ-று. (மஉ)

பொன்னியல் குழையினர்பொலனகொண்மாலையர்
பன்னிறச்சார்ந்தினர்பணைத்தோளினர்
சென்னியிற்றிமணியிலங்குசேடனை
பின்னிவிட்டென்னபின்னகுஞ்சியர்

(இ-ள்.) பொன்னினாற் செய்த குண்டலத்தை யுடையவரும் பொன்னரிமாலையை யுடையவரும் பலநிறத்தையுடைய தலைசசார்த்தணிந்தவரும் பருத்தபுயத்தையுடையவரும சிரோரத்தினம் விளங்குகின்ற ஆதிசேடனை பின்னிட்டதுபோலப் பின்னியகுடுமியை யுடையவரும்-எ-று. (௰௧)

தாங்கியசுரிகையுந்தயங்குவேல்களும
வாங்கியசிலைகளுங்கணையும்வாளுமாய
ஞாங்கரிவர்வரநாப்பட்டோன்றினார்
தேங்கியநதிமதிச்சென்னியண்ணலார்.

(இ-ள்.) தாங்கப்பெற்ற உடைவாள்களும், பிரகாசிக்கின்ற வேலாயுதங்களும், வளைந்தவிற்படைகளும், அம்பும், கத்திகளும், உடையவருமாய்ப் பக்கங்களிலே இவர்கள்வர நடுவிலேவந்தார் அவராரென்றால, தேங்கப்பெற்ற கங்காநதியையும் மூன்றாம்பிறைச் சந்திரனையுமுடித்த சிரத்தையுடைய பரமசிவன்-எ-று. ()

## கலிவிருத்தம்.

நச்சுரகவுச்சிமணிநண்ணுமொருவண்ணக்
கச்சிடைவிசித்துளகவின்கொளுடையவாளும்
பச்சைமுழுநீலமொடுபன்னிறவடஞ்சேர்
செச்சைநிறமன்னியதிரண்டவிருதோளும்.

(இ-ள்.) நஞ்சையுடைய சருப்பத்தினது சிரோரத்திநம் பதித்துவிளங்கிய நிறத்தையுடைய கச்சையிடையிலேகட்டி அதனிடத்திலேசெருகிய அழகைக்கொண்ட உடைவாளும், பச்சைநீலம் முதலிய பலநிறத்தையுடைய இரத்திநமாலைகளணிந்த சிவந்தநிறத்தையுடைய திரட்சிப்பொருந்திய இரண்டுபுயங்களும்-எ-று. ()

ஒப்பரியசட்டையுமுடுத்திலகுபட்டுந்
தொப்பியுமுகத்திடைதுளக்கமுளராகிச்
செப்பருநலங்குலவுசெண்டொருகைகொண்டே
யிப்படியிலிப்படிவம்யாவருளரென்ன.

(இ-ள்.) உவமைசொல்லுதற்கரிதாகிய அங்கியும்உடுத்துவிளங்கிய பட்டுடையுந்தலைச்சாத்தும் உடையவராயுந் திருமுகத்திற் பிரகாசமுள்ளவராயுஞ் சொல்லுதற்கரியநன்மைமிகுந்த குதிரைச்சவுக்கை ஒருகையிலேகொண்டு இந்தப்பூமியிலே இந்தவடிவமுள்ளவர்கள் யாரிருக்கிறார்கள்-எ-று. (௰சு)

கட்டிபடிமீதின்மணிகச்சைமணிமுன்பி
னிட்டவிருபக்கமணிபின்னொலிபுலம்பப்
பட்டிலகுபக்கரைபணிக்கவிரியெட்டும்
விட்டொளிவிளங்குமொருவெண்பரியிலேறி

(இ-ள்.) அங்கவடியிற் கட்டிய மணிமாலைகளும், கச்சையிற் கட்டிய மணிமாலைகளும முற்புறத்தும் பிறபுறத்தும இரண்டுபக்கங்களிலுங் கட்டிய மணிமாலைகளும் இன்னோசையாய் ஆரவாரிக்கப் பட்டினாற்செய்யப்பட்ட கலலணையிற்கட்டிய சாமரைகளெட்டும் விட்டுவிட்டு ஒளிவிளங்கப்பெற்ற வெள்ளைக்குதிரையின் மேலேறி-எ-று. (௰எ)

வீசுகவரித்திரண்மிடைத்தொளிரமீதே
தேசொடுகவித்துளசெழுங்குடைவயங்கப்
பூசல்புரிவெம்பரிபொருந்துபடையூட
மாசிலகுலவாரியரின்மன்னனெனவந்தார்.

(இ-ள்.) வீசுகின்ற சாமரைக்கூட்டங்கள்நெருங்கிப் பிரகாசிக்கவும் மேலேகவிந்திருக்கின்ற செழுமைபொருந்திய குடைகள் காந்தியோடுபிரகாசிக்கவும யுத்தஞ்செய்கின்ற வெவ்விய குதிரைச்சேனையினிடையிலே குற்றமற்ற ஆரியதேயத்தார்க்கு அரசனைப் போலவந்தார் குதிரைச்சேவகர்-எ-று. (மஅ

மன்னவனுமிங்கிவர்வருந்தகைகமைகண்டே
தன்னுளமகிழ்ந்திருநடங்கணிமையாம
லன்னமெனுமூர்திநெடுமாலரனையல்லா
தின்னவெழில்யாவருளரென்றதிசயித்தான்.

(இ-ள்.) பாண்டியனும் இந்தக் குதிரைச்சேவகர் வருகின்ற பெருமையைப்பார்த்து தன்மநமகிழ்ந்து விசாலம்பொருந்திய இரண்டுகண்களும் இமையாமல் அன்னவாகனத்தையுடைய பிரமதேவன் விஷ்ணு உருத்திரன் இவர்களிலொருவரல்லாமல் இந்த அழகோடுங்கூடியவர் யாவருள்ளாரென்று அதிசயித்தான்-எ-று. ()

பண்ணியதவந்துளபயன்பரியின்மீதே
நண்ணியதெனத்தமினயந்தனர்வியந்தா
ரெண்ணிபமுடித்தனரெனக்கருதிநின்றார்
புண்ணியமறைத்தமிழ்புகன்றதிருவாயார்.

(இ-ள்.) முன்னேநான் செய்ததவத்தினாலே உண்டாகியபிரயோசனமே குதிரையின்மேலேவந்ததென்று தமக்குள்ளே மகிழ்ச்

சிகொண்டு அதிசயத்தை யுடையவராய் என்னெண்ணத்தை முடித்தாரென்று நினைத்துநின்றார் புண்ணியவடிவாகிய வேதத்தைத்தமிழ்செய்த மாணிக்கவாசகர்-எ-று. (உ௰)

தூயசுடர்வேல்பலசுழற்றியெதிர்செல்வார்
வாயொலிவிளைப்பகரில்வாளினர்விதிர்ப்பார்
நேயமொழிதம்மிலணிநின்றுசமர்செய்வா
ராயினரரன்புடையிலானபரிவீரர்.

(இ-ள்.) தூய்மையான ஒளியுள்ள அநேகவேலாயுதங்களை சுழற்றிக்கொண்டு எதிரேபோவார்கள் வாயினாலே ஆரவாரிப்பார்கள் பகைகொண்டு கத்திகளை அசைப்பார்கள் நேசமுடனே தங்களுக்குள்ளே அணிவகுத்துநின்று யுத்தஞ்செய்வார்கள் இப்படிப்பட்ட விநோதமுள்ளவர்களானார்கள் பரமசிவனோடு கூடவந்த குதிரைவீரர்கள்-எ-று. (உக)

நீறுசிவநீதிநிலைநிற்கவுலகாளு
மாறனுமகிழ்ந்துதவுமன்னரையழைத்தே
கூறரியவாரியகுலேசரொருவீதி
யேறும்வகைசென்றுரையுமென்றினிதுசொன்னான்.

(இ-ள்.) திருநீறும் சைவநெறியும் நிலைநிற்க உலகத்தையாளுகின்ற பாண்டியன் மகிழ்ந்துதவராஜராகிய திருவாதவூரரையழைத்துச் சொல்லுதற்கரிய ஆரியகுலஅதிபரை ஒருவீதியிலே இந்தக் குதிரைகளை நடத்தும்படிக்குப்போய்ச் சொல்லுமென்று இனிதாகச் சொன்னான்-எ-று. (உஉ)

என்னிவன்மொழிந்தனனெனத்தமிலிரங்கா
மன்னியவருந்தவரும்வாண்முகமலர்ந்தே

கன்னலைநலங்கொள்கனியைக்குறுகிநெஞ்சான்
முன்னுறவணங்கிவிழிமுத்துதிரநின்று.

(இ-ள்.) என்னவார்த்தையிவன் சொன்னனென்று தமக்குள்ளே யிரக்கமுற்று நிலைபெற்ற அரியதவத்தையுடைய மாணிக்கவாசகரும ஒளிபொருந்திய முகத்திலே மலர்ச்சியுள்ளவராய்க் கரும்பையும் நற்சுவைகொண்ட கனியையுமொத்த பரமசிவனுக்குச் சமீபத்தேபோய் மனத்தினாலே முன்னேவணங்கிக் கண்களிலே யிருந்து முத்துகள்போல நீருதிரும்படிநின்றார்-எ-று. (உரு)

மன்றன்மலரோனுநெடுமாலுமுருவேறா
யன்றுமுதலின்றுமறியாதவகைநின்றாய்
வென்றிவிடையன்றியுயர்வெம்பரியின்மீதே
யின்றுனைவணங்குமனமெந்தவமியற்றேன்.

(இ-ள்.) வாசனைபொருந்திய தாமரைமலரிலிருக்கும் பிரமனும் மகாவிஷ்ணுவும் உருவமவேறாகி அன்றுமுதல இன்றைவரைக்கும அறிதற்கரியனாய் நின்றவனே வெற்றியையுடைய இடபவாகனத்திலல்லாமல உயர்ச்சியுள்ள வெவ்விய குதிரை வாகனத்தின்மேலே இன்றைக்கு உன்னைக்கண்டு வணங்கமுன்னே என்ன தவஞ்செய்தேன்-எ-று. (உசா)

வந்தபடியிவ்வுருவணங்குமிதுவல்லா
லந்தவடிவாகிலுனையாரறியவல்லா
ரிந்தவகைகண்டடியவர்க்கெளிமையென்றே
சிந்தைதனிலன்பொடுதெளிந்ததுலகெல்லாம்.

(இ-ள்.) தேவரீரெழுந்தருளிவந்த இவ்வடிவைக்கண்டு வணங்கப்பெற்ற இதுவல்லாமல் மனோவாக்குக்கெட்டாத அந்தநிஷ்களவடிவாகி யிருந்தாயானால் உன்னையாவரறியவல்லவர் இந்தவடி

வங்கண்டல்லவோ பெரியோர்கள் அடியார்க்கு எளியனாயிருக்கிறா யென்று மநத்தில அன்புடனேதெளிந்து சொல்லுகிறார்-எ-று. ()

என்றுமுகமன்பலவியம்பியருளாலே
வென்றிபுனைமீனவன்விளம்புமொழிசொன்னார்
கொன்றைமுடியாருமகிழ்ந்துகொடைமாற
னென்றியொடுகாணுமவணநடபரியுகைந்தார்.

(இ-ள்.) இப்படியென்று அநேகஉபசாரவார்த்தைகள் சொல்லி அருளினாலே வெற்றியைத்தரித்த பாண்டியராஜன் சொன்ன சொல்லை விண்ணப்பஞ்செய்தார் கொன்றைமாலிகைதரித்த முடியையுடைய பரமசிவனும் அகமகிழ்ந்த ஈகையையுடைய பாண்டியராஜன் நன்றாகப்பார்க்கும்படி நல்லகுதிரையைநடத்தினார்-எ

மன்னரவ்பந்தமுடன்வட்டநெடுவீதி
யென்னுமிவுளிநதொழிலகளியாவுமினிதேறி
யுன்னுமநவேகமெனவோடுமுயர்பாய்மா
நன்னடமிடும்படிநடாத்திஎதிர்வந்தார்.

(இ-ள்.) நிலைபெற்ற நாகபந்தம் விருத்தம் நெடுவீதியென்கிற குதிரையினுடைய நடைபேதமெல்லாம் இனிதாகநடத்திக் காட்டி நினைக்கின்றமனோவேகம்போல வோடுகின்ற உயர்ந்த குதிரைகளானவை நல்ல நடனமிடும்படி நடத்திக்கொண்டு எதிரேவந்தார்-எ-று. (உஎ)

வெம்பரியினண்ணலைவியந்துதமிழ்மாறன்
கம்பமுடியெய்தவொருகைவிரல்கழற்று
வம்பொன்விலையில்லதொருங்கலையளித்தா
னெம்பரமர்செண்டின்மிசையேற்றுநகைசெய்தார்.

(இ-ள்.) வெவ்வியகுதிரைக்கு யசமானைப்பார்த்து அதிசயப்பட்டுத் தமிழைவளர்த்த பாண்டியன் சிரக்கம்பஞ்செய்து ஒருகை விரலைசுழற்றி அழகியபொன் இவ்வளவென்று விலையில்லாததா யரியவஸ்திரமொன்று கொடுத்தான் எமமுடைய கடவுளானவர் சவுக்கின்மேல் ஏற்றுக்கொண்டு புன்னகைசெய்தார்-எ-று. (உஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏற்றவொண்கலையைநேரபெய்திலனொருவன்செண்டில்
காற்றெனவிரைவினேந்திக்கடிதுதன்கரத்தில்வாங்கிப்
போற்றிலன்முடியின்மீதுபுனைந்திலனென்றுமாற[ட்]ான்.
னீற்றனன்மறைப்பிணுலேநெஞ்சிடைவெகுட்சிகொண்

(இ-ள்.) அதைப்பாண்டியராசன்கண்டு நாம்கொடுத்த தகுதியுள்ளபிரகாசம் பொருந்திய வஸ்திரத்தை விருப்பமில்லாதவனைய்க்காற்றைப்போல ஒருவலியசெண்டில விரைவுடன் ஏந்திகொண்ட தேயன்றிபுகழாமலும சிரசிலேதரிததுக்கொள்ளாமலும அவமதித்தானென்று பாண்டியராசன் திருநீற்றையணிந்த கடவுளினுடைய மறைப்பினுலே கோபங்கொணடான்-எ-று. (உ௯)

வெளிப்படவரியமேனிவிண்ணவன் கண்ணுநெஞ்சுங்
களிப்புறவருதல்கண்டுங்கண்டிலன் கன்னிநாட
னொளிதலுலகெங்குநிற்போனுறுபவமொழித்துஞாந
மளித்திடினன்றியாவரவன்றிறந்தெரியவல்லார்.

(இ-ள்.) வெளிப்படக் காணுதற்கரிய அருமைத் திருமேனியையுடைய பரமசிவனுனவர்பார்த்தவர்கண்களும் மநமுஞ்சந்தோஷமடையும்படி வருகிறதைப்பார்த்தும் பாண்டியன் காணவில்லை ஒளித்துக்கொண்டு உலகெங்குநிற்கின்ற கடவுள் மிகுந்தபிறவி

மையொழித்து அறிவுகொடுத்த தல்லாமல் எவர்கள் அவருடைய தன்மையைத் தெரியவல்லவர்கள்-எ-று- (கூ0)

எண்டிசைமன்னரன்பாலீந்தமென்கலைகள்யாவுஞ்
செண்டிடைக்கோடலன்னோர்தேயநல்லியற்கையென்
வண்டமிழ்வாதவூர்மாமதுரேசனெஞ்சிற் [றே
கொண்டெளமுனிவுதீரக்குறைந்துமுன்னின்றுசொன்னார்

(இ-ள்.) எட்டுதிசைகளிலுமிருக்கின்ற அரசர்கள் அன்பால் தமக்குக் கொடுக்கப்பட்ட வஸ்திரங்களை யெல்லாம் சவுக்கிலேவாங்கிக்கொள்வது அவரது தேயவழக்கமென்று வளத்தையுடைய தமிழ்பபாடுகின்ற திருவாதவூரரானவர் பாண்டியராஜன் முன்னே நின்று அவன்மநத்திலேகொணடிருந்த கோபம் சாந்தியாகும்படித்தாழ்ந்து சொன்னார்-எ-று. (கூக)

நலத்தகுமிந்தநீர்மைகேட்டபினயந்துமன்னன்
கலக்கமிலிவுளிநணூல்கற்றவர்தம்மைநோக்கி
யிலக்கணவிதியாலுள்ளவிரும்பரியிழிவுமேன்மை
துலக்குடனுமதிஞடியெம்முடன்சொல்லுமென்றான்.

(இ-ள்.) நன்மைபொருந்திய இந்தவழக்கத்தைக் கேட்ட பிற்பாடு அன்புகொண்டு கலக்கமில்லாத அசுவலக்ஷணசாஸ்திரங் கற்றறிந்தவரைப்பார்த்து இலக்ஷணவிதிப்பிரகாரமிருக்கிற பெரியகுதிரையினுடைய இழிவும் உயர்வும்பிரகாசமாக உங்களுக்குள்ளே சோதித்து நம்மோடேசொல்லுமென்று சொன்னான் பாண்டியராஜன்-எ-று. (கூ௨)

சொற்றிகழ்துரகநூலின் றுணிபொருளுணர்ந்துளோருங
கொற்றவெம்பரிகட்குள்ளகுற்றமுங்குணமுநாடிப்

பொற்றடங்கிரியின்மீதுபொருகயல்பொருத்துமீண்ட
வெற்றிகொண்மன்னாகோன்முனிவ்வகைவிளம்பலுற்றார்

(இ-ள்.) சொல்லிறற் பிரகாசிக்கப்பட்ட அசுவலக்ஷணத்தி னுடைய நிச்சயமாகியபொருளைத் தெரிந்தவர்கள் வெற்றிபொருந் திய விரும்பத்தக்க குதிரைகளுள்ள குற்றத்தையும் குணத்தையும் பார்த்து மகமேருமலையினமேல தன்னுடைய மீனக்கொடியை யெ ழுதிவைத்துத் திரும்பிய வெற்றியைக்கொண்ட அரசர்க்கரசனாகி ய பாண்டியராஜன்முன்பாக இந்தபடிச்சொன்னார்கள்-எ-று. ()

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாவினைச்சந்திரசுழியாமண்டாவர்த்தந் தண்டையடியிற்
சுழியாமுடலின்பக்க, மேவுசுழிகௌவகமாங்காகவர்த்தமே
ன்மைதிகழ்முன்வளையச்சுழிதானும், பாவுசெழுங்கேதா
ரியடியிற் சேர்ந்தபயனிலகொடுஞ் சுழிகேசாவர்த்தமாகும்,
பூவமருங்கச்சையிற்பட்டையேயாகப்புகன்றசுழியிச்சுழி
கள்புணராவாகி

(இ-ள்.) துன்பத்தைத் தருகின்றசந்திரச்சுழி அண்டாவர்த்த மென்னுந் தண்டையடியிலிருக்கின்ற சுழிகளும் உடலிலொரு பக் கத்திலிருக்கின்ற சுழியாகியகௌவகமும் காகவர்த்தமும்மேன்மை யாகவிளங்கிய முன்வளையச்சுழியும் பரவியசெழுமையுள்ள கேதா ரிச்சுழியும் காலிலிருக்கின்ற பிரயோசனமில்லாத கொடியசுழியா கிய கேசாவர்த்தமும் பொலிவோடுங்கூடிய கச்சைநிலையிற் பட் டையாகச் சொலலப்பட்ட சுழியும்ஆகிய இந்தச்சுழிகள் பொருந் தாதனவாகி-எ-று. (கூச)

(இ-ள்.) சிரசிலேயிரண்டுசுழியும் செழுமையுள்ள நாபியிலே நான்குசுழியுஞ் சிறந்த மார்பிலே யிரண்டுசுழியும் நெற்றியிலே ஒரு சுழியும் உட்கட்டிலே ஒருசுழியும் ஆகியசுழிகள் பத்துங்குறையாமல் நரிபூனை கரியகாக்கைபேய் ஓரிநாய் செழுமையுள்ளபன்றி இவைகளுடைய சத்தமில்லாதவையாய்ப் பெரிய அலையையுடைய கடல், மேகம், சங்கம, இடபம, பேரிகை, இவைகளைப்போல சத்தமுடையவாகி-எ-று. (௯௬

உறுத்திகழ்செய்புலிபுளியங்கழுதைசெந்நாயொண்பூனை
நரியினுடன்கரியகாகந், தரித்தவழற்புகைநிறமுமபுனையவா
கித் தருக்கிநறுந்தெறுங்கவனத்தனைமையெய்தி, விரித்தகதி
ர்வெண்டரளந் திங்கணீலமென்கமலத்தாது செழுங்கனகங்
காயா, வரத்தமலர்நல்ல பசுங்கிள்ளைபோல வமைந்தவொளி
தயங்கியவங்கத்தனவாகி.

(இ-ள்.) கோபித்துப்பகைக்கின்ற புலிகரடி கழுதைசெந்நாய் ஒளியையுடைய பூனைநரிதரிக்கப்பெற்ற கரியகாகம் தீப்புகை இவைகளினுடைய நிறத்தைப் பொருந்தாதவைகளாய் இறுமாப்புடையனவாய் வாயுவென்னும் வேகத்தோடுங்கூடிப் பிரகாசித்த கிரணங்களையுடைய வெள்ளிய முத்துக்கள் சந்திரன் நீலரத்தினம் மெல்லிய தாமரையினுடையமகரந்தஞ்செழுமைபொருந்திய பொன்காயா செவ்வரத்தமலர் நல்லபச்சைக்கிளியாகிய இவைகள்போல அமைந்த உருவத்தையுடையவாகி-எ-று. (௯௭)

நெற்றியகன்றுயர்குரவமுடைத்தாய் வெண்மைநிறைந்து
தயிலொத்திலகுமெயிற்றவாகித், துற்றநறுங்கச்சமிகச்சிறந்
தாவுஞ்சுகவிளங்களிபோலும்வருணத்தோய்ந்தே, யுற்ற

விரண்டிமைமயிருமொத்தாளைகவுண்டாகியுக்கிரமாம் விழிப்பார்வையுடையவாகி, முற்றுமெயிற்றசையின்றியுள்வளைந்துமுக்கோணமெனத்திசமுமுகத்தவாகி

(இ-ள்.) நெற்றிபரந்து உயர்ந்தமேலுதட்டை யுடையவாய் வெண்ணிறநிறைந்து தமமிலேவரிசையாய் ஒத்துப் பிரகாசிக்கப் பெற்ற பற்களையுடைய வாய்நிறைந்த நல்லவாசனைசிறந்து நாக்கும்மாவினிளந்தளிர்போலும செம்மைநிறம்பொருந்தி இரண்டிமைமயிருந்திரட்சியுடையவாய் உக்கிரமாகிய கண்பார்வையுடைய வாய்தேகத்தில அதிகமாமிசமில்லாமல உள்ளேவளைந்து முக்கோணமாய்ப்பிரகாசிக்கும முகத்தையுடையவாய்-எ-று. (கூஅ)

உளையினுடன்றலைமயிருநிறமொன்றாகியுரத்தினுடன்கழுத்துரகபடமேபோன்று, வளைசிறந்ததொனிபரந்துகுவிந்துள்வாங்கி * மண்டல முண்டாயுரங்கொள்குரங்கள்சேர்ந்து, கிளைகொணரம்புகள்மறைந்து தசைதாழ்ன்றிக்கிளர்முழந்தாணெளித்தபதங்கெழுமலின்றி, நெளிமுதுகுபுணர்ந்து துடைதிரண்டுதண்டை நீண்டுபலகெய்த்த நிறநீர்மையாகி.

(இ-ள்.) கழுத்துமயிரும் தலைமயிரும் ஒருநிறமாய் மார்பினுடனே கண்டமும் பாம்பின் படம்போலொத்துச் சங்குகள்போலத்தொனியுண்டாய்க் குவிந்து உள்வாங்கிமண்டலஞ் செய்வனவாய் வலிமைகொண்ட குளம்புடையவாய்க்கிளைகொண்ட நரம்புகள் மறைந்து தசையையுடையவாய்ப் பிரகாசிக்கின்ற முழங்கால் நெளித்தலில்லாமல் நெளிப்பாகியமுதுகும் பெருத்ததுடைகளுந்திரண்டுதண்டைக்காலானதுநீண்டுமெருகுள்ளநிறத்தையுடையவாய்.

* மண்டலம் - இருகாலையுமுடக்கல்.

மிக்கசெழுமறைநாவிற் கமலநாதன விழிப்புனலில்விண்ணோர்களெண்மர்தம்பான், மைகடன்மேலமர்தத்தி லங்கிமீதின்மல்குகநப்பையிலூகவண்டந்தன்னிற், றொகவெழுபேதமெனு மிவற்றிற்றோன்றுநகொன்மையவாயிரண்டுதுணைக்காலெற்றி, யொகவெழுக்குமபரிகளுள வாய்வானிலொண்புனலின் செல்லுநெறியுளவுமாகி.

(இ-ள்.) மிகுந்தசெழுமையுள்ள சாமவேதத்தினுடைய நாவிலும் பிரமதேவனைவன் ஓமஞ்செய்யும்போது அவன் கண்ணினின்று கையிலவழிந்த நீரினிடத்தும் இந்திரன்முதலியதிக்குப்பாலகரெண்மரிடத்தும் சமுத்திரத்திற்பிறந்த அமிர்தத்தினிடத்தும் அந்தப்பிரமனோமஞ்செய்த அக்கினியிடததும் நிறைந்த தருப்பையிலும் இலட்சுமிசாபத்தாற் பிரமன்கேட்டானுக அந்தக்கோட்டான் முட்டையிலும் ஆகிய இவ்வேழிடத்திலும் உற்பத்தியான பழைமையுடையனவாய் நாலுகாலும் நெற்றியும் ஒக்கவெளுத்திருக்கும் பஞ்சகல்யாணிஎன்னுங் குதிரைகள் ஆகாயத்திலும் நீரிலும் செல்லுகின்றவழியுண்டாய்-எ-று. (௪௰)

மங்காளன்சாரங்கன் கங்காநீலன்மௌவழகன் கொங்காளன்சன்னைசம்பான, குங்குமச்சோரன்கரியானீலன் சாரன்முலவுமள்ளானுசஞ்சிவந்தானல்லான்பொல்லான், றங்குகருங்காற்சம்பானென்று கூறுந்தன்மையுளபன்னிறமும் புனைந்தசாதித், துங்கமிகும்பரியிவையென்றவற்றின்றன்மைத்தொன்மை யுரைத்தரசனை முன்றொழுதுநின்றார்.

(இ-ள்.) மங்காளனென்றும், சாரங்கனென்றும், கங்காநீலனென்றும், மௌவழகனென்றும், கொங்காளனென்றும், சன்ன

சம்பானென்றும், குங்குமச்சோரனென்றும், கரியானென்றும், நீலனென்றும் சாரமென்றும், விளங்கியமள்ளானென்றும், உரஞ்சிவந்தானென்றும் நலமானென்றும் பொலலானென்றும், கருங்காற்சம்பானென்றும், பலபிறதசைகளையுமுடைய சாதியாய் உயர்ந்த குதிரைகளின்வகைகளொன்று அவற்றின்மேன்மையெல்லாஞ் சொல்லிப் பாண்டியராஜனைத் தொழுது நின்றார்கள்-எ-று. (௬௧)

நரிபரி [illegible] மொழி கேட்டு [illegible] யளிக்கும [illegible], பொறபுடைய [illegible] குதிரைகளைப் பொங்கு மகிழ்செய்திரா நின். [illegible] கயிறுமாறித் தருதுரகத்தொகுதிகளையென்றான்.

(இ-ள்) நன்மையுள்ள குதிரையினுடைய இலட்சணங்களை யறிந்தவர்கள் இந்தப்பிரகாரஞ் சொன்னசொல்லைக்கேட்டு மிகவும் நயப்படைந்து வெள்ளிமலையையொத்த இடபவாகனத்திலேறிய ந்த கடவுளாற்கொடுக்கப்பட்ட தெய்வீகமுள்ள செவ்வியகுதிரைகளையெல்லாம் விலைமதித்தபின்பு அழகுபொருந்திய தானங்கொடுத்த பொருளின்மேல எட்டிப்பங்கு அதிகம் விலைபெற்ற குதிரைகள்வருதலினாலே மிகுந்த மகிழ்ச்சியடைந்து பாண்டியராசான் பரமசிவனுடைய திருமுகத்தைப்பார்த்துக் கயிறுமாறித்தரக்கடவீர் குதிரைக்கூட்டங்களையென்றான்-எ-று. (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

காத்துலகளைத்துமுய்யக்கண்ணுதல்செய்யநீதிப்
பார்த்திவன்கருமஞ்செய்வார்பற்றியங்கரத்தில்வாங்கச்

சாத்தவர்தமயிலங்கோர்சால்பினாகயிறுமாறி
யீத்தனபந்தியூடுசேர்ந்தனரிவுளியெல்லாம்

(இ-ள்.) உலகமெல்லாம் பாதுகாத்துப் பிழைக்கும்படி இருபாநோக்கஞ்செய்கின்ற நீதியையுடையபாண்டியராஜனது காரியஞ்செய்வோர்கள் கையிறைப்பிடித்துவாங்கக்குதிரைச் சாத்தர்களுக்குள்ளே பெருமைபொருந்திய ஒருவர்கயிற்றை மாறிக்கொடுத்தார் உடனே அவர்கள் குதிரைகளையெல்லாம் இலாயத்திலே சேர்த்தார்கள்-எ-று. (௪௩)

திண்டிறலெழுவுநேமித்தென்றிசைக்கிறையுஞ்செய்ய
வண்டமிழ்க்கிறையுநாணவந்திநந்திசையினேகிப்
பண்டைநற்படிவமாகிப்பணிந்துவிண்ணவர்கள்சூழக்
கொண்டலைப்பொருவுகண்டர்குலவுநங்கோயில்புக்கார்.

(இ-ள்.) மிகுந்தவலிமைபொருந்திய சக்கரஞ்செலுத்துகின்ற தென்றிசைக்கு அதிபனாகிய பாண்டியராஜனும் செம்மையாகியவளத்தையுடைய தமிழுக்கரசராகிய மாணிக்கவாசகரும் காணும்படியாய்த் தாம்வந்த திசைவழியாகச்சென்று பழையவடிவங் கொண்டு தேவர்களெல்லாம் வணங்கிச்சூழ மேகம்போன்ற கரியகண்டத்தையுடைய பரமசிவனானவர் பிரகாசிக்கின்ற தமதுகோயிலிற் புகுந்தார்-எ-று. (௪௪)

வாய்ந்தனபரிகளும்மாலென்றெழிலவாதவூரின்
வேந்தனாமனையிலேகவிடுத்துளமகிழ்ச்சிகூர்ந்து
சார்ந்தமெய்த்தகைமையோருந்தானையுஞ்சூழவேகி
யாய்ந்தநற்றமிழ்நூல்வல்லவரசனுங்கோவில்புக்கான்.

(இ-ள்.) இப்படிப்பட்ட குதிரைகள் உம்மாலெனக்குக்கிடைத்தனவென்று திருவாதவூரர் வேந்தராகியமாணிக்கவாசகரை அர

ண்மனைக்குப்போகவிடுத்து நமகிழ்ச்சியடைந்து தன்னைச்சார்ந்த பெரியோர்களும் சேனைகளுஞ் சூழும்படிச்சென்று ஆய்ந்திருக்கின்றநல்ல தமிழ் நூலில் வல்லவனாகிய பாண்டியராஜனும் தன்னுடைய அரண்மனையிற்புகுந்தான்-எ-று. (௪௫)

அந்திமைகலைமாலையணைதலும்பரிகளெல்லா
நித்தனதருளினாலேநெடுங்குரனரிகளாகி
மெய்த்தமிழ்மதுரைமூதூர்விழித்துயிலொழித்திரங்கத்
தத்தமிலுடன்றுகூடித்தனித்தனிக்களித்துநின்று.

(இ-ள்.) அந்தப்பகல்போய் இரவுவந்தபின்பு பரமசிவனுடையகிருபையினாலே குதிரைகளெல்லாம் நெடியகுரலையுடைய நரிகளாய் உண்மையாகிய தமிழ்விளங்குகின்ற மதுரைமாநகரருடைய நித்திரையையொழித்து இரங்கும்படித்தமக்குள்ளே தாமேகூடிச் சண்டையிட்டு வெவ்வேறாகச் செருக்கடைந்துநின்று-எ-று. ()

கலிவிருத்தம்.

நின்றநின்றநெடும்பரியாளர்மேற்
சென்றுவெம்பகைசெய்துவெருட்டியே
துன்றுகின்றதுரங்கமொருங்கொடு
கொன்றுநின்றுயர்கூவிளிகொண்டவால்.

(இ-ள்.) அங்கங்கிருந்தநெடிய குதிரைக்காரர்மேல் குதிரைகள்போய் வெய்யபகைகொண்டு வெருளச்செய்து நெருங்கியிருக்கின்ற பழையகுதிரைகளை ஒருங்குபடக்கொன்று நின்று உயர்ந்த பெருங்கூச்சல்கொண்டன-எ-று. ஆல்-அசை. (௪௭)

வரைசெய்கோபுரமாடநெருங்கிய
வாசர்வீதியுமாவணவீதியு

முரசவோசை முழங்கொழிந்தேமிக்க
குரைகொள்வாய்நரிகூக்குரலானதால்.

(இ-ள்.) மலையைப்போற்செய்த கோபுரமும் உப்பரிகைகளும் நெருங்கியராசவீதிகளும் கடைவீதிகளும் பேரிகை யோசைமுழக்கம நீங்கி மிகுந்தசத்தத்தைக்கொண்ட வாயையுடைய நரிகள் ஊளையிடுஞ்சத்தமாயிற்று-எ-று. (சஅ)

பாடியாரணமபோற்றமன்றிற்பயில்
ஞுடியார்விளையாட்டின்புதுமையா
லோடியாருமொளித்திடவென்றொரு
கோடியானதுகூவுநரிக்குழாம.

(இ-ள்.) வேதங்கள்பாடிப் போற்றும்படிக்கும் சநகசபையிலே நிருத்தஞ்செய்கின்ற கடவுளுடைய விளையாட்டின புதுமையினாலே எல்லாருமோடி யொளித்துக்கொள்ளுங்களென்று ஒரு கோடி நரிகள்கூட்டங்கொண்டு கூவும்-எ-று. (சகூ)

துங்கமாறன்றொகுபடைவெங்கொலை
தங்குமாயுதந்தாங்கியெதிர்ககவே
யெங்குமானநரிகளெல்லாங்கொடுஞ்
சிங்கமாயமர்செய்யத்தொடங்குமால்.

(இ-ள்.) உயர்ச்சிபொருந்திய பாண்டியராஜனுடைய கூட்டமாகிய சேனைகள் வெய்யகொலைதங்கிய ஆயுதங்களையெடுத்துக் கொண்டு எதிர்க்கஎங்கும் பரவியிருக்கின்ற நரிகளெல்லாங் கொடிய சிங்கம்போல அமர்செய்யத்தொடங்குகின்றன-எ-று. (ருய)

நீடுவாடையிடந்தொறுநின்றணி
கூடுவார்மிகக்கூவிவெருட்டுவா

ரோடுவாரொளித்தோடிப்புகுமிடந்
தேடுவாரெதிர்சென்றமர்செய்குவார்.

(இ-ள்.) நீடியதெருக்கள்தோறும் நின்று அணிவகுப்பாகக் கூடுவோர்கள் மிகவுங்கூச்சலிட்டு மயங்கச்செய்வார்கள் ஓடுவார்கள் ஒளித்துக்கொண்டு ஓடிப்புகுந்துகொள்ளு மிடந்தோறுந் தேடுவார்கள் எதிரேசென்று யுத்தஞ்செய்வார்கள்-எ-று. (௫௧)

எங்களாருயிர் காத்தருளின்றணி
திங்களாயெனத்தெய்வம்பரவுவா
ரங்கபாடமடைத்தரண்செய்குவார்
மங்குலாடுமதிற்றலையேறுவார்.

(இ-ள்.) எங்களுடைய ஆன்மாவை இன்றைக்குக்காத்திரட்சிக்கவேண்டும் மூன்றாம்பிறைபணிந்த பரமசிவனேயென்று சொக்கநாயகனைப் பரவுவார்கள் அழகியகதவுகளைச் சாத்திக்கொண்டு காவல்செய்வார்கள் மேகங்கள் விளையாடுகின்ற மதிலின்மேலேறிக்கொள்வார்கள்-எ-று. (௫௨)

நற்றவஞ்செயனன்கிலதானதோ
கொற்றவன்செய்யகோலகொடிதானதோ
விற்றிகள்பயனென்னெனவின்னணம்
முற்றிரங்கினார்கூடலுளோரெலாம்.

(இ-ள்.) நம்முடையதேசத்தில் நல்லதவஞ்செய்வது நன்மையில்லாததாயிற்றோ அரசனுடைய செங்கோல் கொடிதானதோ, இன்றைக்கு இதனுடையபிரயோசனம் என்னமோவென்று இந்தப்பிரகாரம் இரங்கினார்கள் மதுராபுரியிலுள்ளவர்கள்-எ-று. (௫௩)

தூயவன்றுரகத்தொழிலாளர்கள்
கோயிலின்கடைக்குரல்செய்துபோய்

மாயவெம்பரிவந்தவெல்லாநரி
யாயவென்றரசற்கெதிர்கூறினர்.

(இ-ள்.) பரிசுத்தராகிய வலிமையுள்ள குதிரைக்காரர்கள் அரண்மனைவாசலில் வாயைத்திறந்து கூச்சலிட்டுக் கொண்டுபோய் மாயமாய்வந்த வெம்மைபொருந்திய குதிரைகளெல்லாம் நரியாய்ப்போயினவென்று பாண்டியராஜனுக்கெதிரே சொன்னார்கள்-எ

மாக்களோசையும்வாம்பரியோசையுங்
கூக்குலாவுகுறுநரியோசையு
மீக்கொண்மாமுடி மீனவன்றஞ்செவி
தீக்கொள்வேலைச்செருகியதொத்தவால்.

(இ-ள்.) மனிதர்களுடைய சத்தமும் தாவுகின்ற குதிரைகளுடைய சத்தமும் ஊளையிடுகின்ற குறியவாகியநரிகளுடைய சத்தமும் மேலாகிய கிரீடத்தைக்கொண்ட சிரசையுடைய பாண்டியராஜாவின் காதிலேகாய்ந்த வேலாயுதத்தைச்செருகிய தொத்திருந்தன-எ-று. (௫௫)

இந்தவாறொலிகேட்டிருகண்டழல்
சிந்தவாகஞ்சிறுவெயர்ப்பெய்தவே
யந்தமாறன்வெகுட்சிகண்டண்ணலார்
வந்தமாயநரிப்படைமாற்றினர்.

(இ-ள்.) இந்தப்பிரகாரமாகிய சத்தத்தைக்கேட்டு இரண்டுகண்களும் தீப்பொறிசிந்தத் தேகத்தில்வேர்வை சிறியதுளிகளாக உண்டாக அந்தப்பாண்டியராஜன்கோபிக்க அதைக்கண்டு பரமசிவனவர் மாயமாய்வந்த நரிச்சேனைகளை நீக்கினர்-எ-று. (௫௬)

பொன்கொணாடன்புனைந்தநலந்திகழ்
மின்கொளாரம்விளங்கியமொய்ம்பினுன்
றன்கணுகிடப்பவர்தண்டல்செய்
வன்கணாளரைவம்மெனக்கூறினுன்.

(இ-ள்.) செல்வத்தைக்கொண்ட பாண்டியநாட்டை யுடையவனும் அலங்காரஞ்செய்த நன்மைபொருந்திய பிரகாசங்கொண்ட முத்துமாலைவிளங்கிய புயத்தையுடையவனுமாகிய அரசனானவன் தன்னுடைய கண்ணுக்குச்சமானமாய் நடக்கின்றகொடியதண்டற்காரரை வாருமென்று ஆக்கியாபித்தான்-எ-று. (௯எ)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

நரியினிற்றொகுதியெல்லாநற்பரித்திரள்களாக்குஞ்
சரிதையைக்கொணர்மினென்னத்ஈரொடுறுதவர்களோடி
யிருபிறப்புடையராகியினிப்பிறப்பில்லார்தம்மை
விரைவினிற்சூறுகிநும்மையழைத்தனன்வேந்தனென்றார்

(இ-ள்.) நரியினுடைய கூட்டங்களெல்லாம் நல்லகுதிரைக்கூட்டங்களாக்குகின்ற சரித்திரத்தையுடையமந்திரியைக் கொண்டுவாருங்களென்றுசொல்லத் தண்டற்காரர் பாண்டியன்பாதத்தை வணங்கிச் சீக்கிரமாகப்போய் இரண்டுபிறப்பை யுடையவராகி யினியொருபிறப்புமில்லாத மாணிக்கவாசகரைக்கண்டு உம்மை அரசனழைத்துக்கொண்டுவரச் சொன்னானென்றார்கள்-எ-று. (௯அ)

சித்தருக்கன்புபூண்டசித்தருமுறுவலெய்தி
நித்திலத்தொளிபோன்மின்னுநீறெறுஞ்சாந்தபூசிப்
பத்தருக்கேவல்செய்வார்பதமலர்முடியிற்சூட்டி
முத்தமிழ்ப்பொருணைநாடன்முன்புசென்றருகுநின்றார்.

(இ-ள்.) சித்துவித்தைக்காட்டிய கடவுளிடத்தில் அன்புவை த்த சித்தத்தையுடைய திருவாதவூரரும் புன்சிரிப்புகொண்டு முத் துப்பிரகாசத்தைப்போல் பிரகாசியாநின்ற திருமேனியிலே திரு நீருகிய சந்தனத்தைப்பூசி அடியவர்களுக்கேவல்செய்வாராகிய க டவுளுடையபாதாரவிந்தங்களைச் சிரசிலேவைத்துக்கொண்டு இய லிசைநாடகமென்னு முத்தமிழையும் வளர்க்கின்ற பொருநைநாட னுகிய பாண்டியராஜன்முன்னேபோய்ப் பக்கத்திலேநின்ருர்-எ-

மூட்டெழுமழல்போன்மன்னன்முனிவுடைமுகத்தனுகி
யிட்டுநம்பொருள்களெல்லாமிரப்பவர்தமக்குநல்கி
நாட்டுளநரிகளெல்லாநற்பரியாக்கிடீமுன்
காட்டினரிவர்செய்மாயங்கண்டிரோவமைச்சிரென்ருன்.

(இ-ள்.) மூண்டெழுகின்ற தீயைப்போல் பாண்டியராச னைவன் கோபத்தையுடைய முகத்தினனுகிச் சொல்லுவான் இவர் நாம்சம்பாதித்த திரவியங்களெல்லாம் யாசகர்களுக்குக்கொடுத்து விட்டு நாட்டிலேயிருக்கின்ற நரிகளையெல்லாம் நல்ல குதிரைக்கூ ட்டங்களாக்கி நம்முன்னேயழைப்பித்துக்காண்பித்தார் இந்தமாய த்தைக் கண்டீர்களோ மந்திரிகளேயென்ருன்-எ-று. (௬௰)

தன்றொழில்வழுவினேர்கடமக்குறுதுயரஞ்செய்தல்
வன்றிறலரசர்நீதியாயினுமறைவல்லாளர்
சென்றுயர்தவத்திநிற்போர்தெரிவையர்விருத்தர்பால
ரொன்றிவர்க்குறுகண்செய்தலெமமனேரியல்பன்றென்று

(இ-ள்.) பின்னும்பாண்டியராசனைவன் தன்னுடையதொ ழிலிலே தப்பினவர்களுக்கு மிகுந்த துன்பத்தைச்செய்வது வலி மைபொருந்திய சௌரியத்தையுடைய அரசர்களது நீதியாயினும் வேதத்தில் வல்லபிராமணர்கள் உயர்ந்ததவமார்க்கத்திலே நிற்பவ

ர்கள் மாதர்கள் விருத்தர்கள் பாலர்களென்றுசொல்லப்பட்ட இவர்களுக்குத் துன்பஞ்செய்வது நம்போலவார்களுக்கு இயற்கையல்லவென்றுசொல்லி-எ-று. (௬௧)

தண்டஞ்செய் வன்கணாளர் தங்களை நோக்கி நங்கண்
கண்டிடமுன்னில்லாமற் கடிதினிலிவர்கொண்டேகி
மண்டழல்வெயிலினூடு வலோட்பிணினிறுத்தி நம்பாற்
கொண்டனநிதியமெல்லாங் குறைவறவாங்குமென்றான்.

(இ-ள்.) கொடுமையையுடைய தண்டற்காரர்களைப் பார்த்து இவரை நம்முடைய கண்பார்க்க எதிரேயில்லாமல் சீக்கிரத்திலே கொண்டுபோய் நெருப்பையொத்த வெயிலினிடத்தே ஒரு கோடுகிழித்து அதிலேநிறுத்தி நம்மிடத்திலேவாங்கிய திரவியங்களையெல்லாம் குறைவில்லாமல் வாங்குங்கோளென்றான் பாண்டியராஜன்-எ-று. (௬௨)

வன்றிறலேவலாளர்மற்றவர்தமைக்கொண்டேகி
யொன்றியவரைப்பினூடு நிறுத்தலுமுலகோர்போற்று
நன்றிகொள்வாதவூரர்நரியெலாம்பரிகளாக்கித்
தென்றிசைநிருபர்க்கீந்தசித்திரத்தைநினைந்துசொல்வார்.

(இ-ள்.) வலியசௌரியத்தையுடைய தண்டற்காரர் அவரைக்கொண்டுபோய்க் கோடுகிழித்து அதிலேநிறுத்தினார்கள் அப்போது உலகத்தார்வணங்குகின்ற நன்மையைக்கொண்ட திருவாதவூரர் நரிகளையெல்லாங் குதிரைகளாக்கித் தென்னாட்டரசனாகிய பாண்டியனுக்குக் கொடுத்த சித்திரத்தைநினைந்து சொல்லுவார்-எ-று.()

தொல்லையோரிருவர்தேடுஞ்சோதியேயாதுசெய்வே
தில்லையோர்பரவநின்றதெய்வமேயாதுசெய்வே

னில்லையோகருணைநின்பாலினறெனையடிமைகொண்டா
யலலையோதமியேனின்னலறிதியோவறிந்திலாயோ.

(இ-ள்.) முற்காலத்திலே பிரமாவிஷ்ணுக்கள் தேடியசோதி சொரூபனே நானென்னசெய்வேன் இலலைமூவாயிரவர் வணங்கும்படிநின்ற கடவுளே நானென்னசெய்வேன் உனனிடத்திற் கிருபையில்லையோ என்னையடிமைகொண்ட னீயல்லையோ என்னுடைய துன்பத்தையறிந்தாயோ அறிகிலாயோ வென்றார்-எ-று. ()

பரித்திரணரியேயானபான்மைகண்டடியேன்றன்னை
வரித்தினரிதனைமாற்றவல்லநீமாறாயாகிற் [ளு
றரித்தனைவிடத்தையென்னுந்தன்மையும்புரங்கண்முன்
னெரித்ததுமிலவாமென்றெனாிரங்கினாவர்க்குமிக்கார்.

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் நரிகளானதன்மையைக்கண்டு அடியேனை வருத்துகிறார்கள் இதனை நீக்கததக்கநீ நீக்கமாட்டாயானால் விஷத்தைதகண்டத்திற் றரித்தாயென்னுந் தன்மையும் திரிபுரங்களை முன்னெரித்ததும் இலலையாமென்று இரங்கினார் எவரினுமிகுந்தவராகிய திருவாதவூரார்-எ-று. (கூரு)

நன்றிகொள்கடவுட்கங்கைநதியினைவையையூடு, சென்றெழில்வாதவூரர்பெரிடர்தீரென்றேவி, யன்றெறுமடங்கைத்காளாயடியவர்க்கெளியாரென்றை, துன்றியமுடியின்மேன்மண்சுமந்தனைதயுரைத்தல்செய்வாம்.

(இ-ள்.) நன்மையைக்கொண்ட தெய்வகங்கையைப்பார்த்து வையைநதியிலேபோய் அழகிய திருவாதவூராருடைய பெரியதுன்பத்தைநீக்கென்று அனுப்பி அப்போது ஒருபிட்டு வாணிச்சிக்கு

கூலியாளாய் அடியவர்களுக்கு எளியராகியபரமசிவன்கொன்றை மலர்நெருங்கிய சிரசின்மேலேமண்சுமந்தகதையைச் சொல்லுவாம்-எ-று. (௪௯)

குதிரையிட்டசருக்கம் முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம்-௨௪௬.

# மண்சுமந்தசருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தங்கியவருளின்மிக்கார்தாமபடும்பிம்மையுள்ளி
யங்கணரவர்பாலுற்றவருந்துயரகற்றுமென்று
கங்கையைவிடுப்பவேகிகதிபெருகநெடுந்துறையைப்
பொங்கலைப்புனலாயெங்கும்பரண்டதுபுணரியேபோல்.

(இ-ள்). தங்குகின்ற கிருபையிலே மிகுந்தவராகியதிருவாதவூரர் படுகின்ற துன்பத்தைநினைத்துபரமசிவனவரிடத்திலேவந்த அரிய துன்பத்தைநீக்குவமென்று கங்காநதியை யேவஅதுகடிய பெருக்கெடுத்துவையைநதியிலேசேர்ந்து மிகுந்தசலப்பிரவாகமாயெங்கும்புரண்டதுசமுத்திரம்போல்-எ-று. (௧)

(இதுமுதல்ஏழுசெய்யுளும் ஆற்றுச்சிறப்பு.)

சேர்ந்தவெண்முத்தமூரல்செய்துநீர்க்கலைமேலார்த்து
காந்தளஞ்செங்கைவீசிக்கனதனக்குரும்பைகாட்டி
மாந்தளிர்ப்பதங்கண்மீதுவருதிரைநெளிழமார்ப்பப்
போந்துளகணிகைமாதர்போன்றதுவையையாறு.

(இ-ள்.) வெண்மைபொருந்திய முத்தமாகிய பற்களாற்சிரித்து சீராகியவஸ்திரத்தை மேலேகட்டிக்கொண்டு காந்தளாகியசிவந்தகையை வீசிக்கனம்பொருந்திய தனமாகியகுரும்பைகளைக் காட்டி மாந்தளிராகிய பதங்களின்மேலே வருகின்ற அலையென்னுஞ் சிலம்புகள் சத்திக்கநடக்கின்ற வேசைமாதினை நிகர்த்ததுவையை நதி-எ-று. (உ)

திரைப்பெருமருப்பினலேசெழுங்கரையிருபாற்குத்தி
மரத்திரண்முறித்துச்சாலிவயலெலாமழித்துவாயா
னுரைத்திரள்சிந்திமீதேநுண்மணலிறைத்துவண்டு
நிரைத்தலின்மதத்தவேழநிகர்த்ததுவையையாறு.

(இ-ள்.) அலையாகியபெரியகொம்பினாலே செழுமைபொருந்திய இரண்டுபக்கத்துக் கரைகளையுங் குத்திமரக்கூட்டங்களை முறித்து நெற்கதிர்களையுடைய கழனிகளையெல்லா மழித்து வாயினாலே நுரைக்கூட்டங்களைச்சிந்தி நொய்மணலை மேலேயிறைத்து வண்டுகள் வரிசையாகமொய்க்கவருதலால் மதத்தினையுடைய யானையை யொத்ததுவையைநதி-எ-று. (௩)

மைமத்திகழ்குழலாளந்தமலைமகண்முலையிற்றோய
வைத்தனைவருத்துமேன்மையனகவாயுதமென்றெண்ணிச்சம்
யொத்தெழுந்தொளிருங்கன்னலுயங்குசெங்கழுநீர்க்கருப்
புத்தவையழிக்கவேண்டிப்புரண்டதுபழனமெலலாம்.

(இ-ள்.) மையைப்போலப் பிரகாசிக்கின்ற கூந்தலையுடைய அழகிய பார்வதியினது தனபாரங்களிற் கூடும்படிக்குப் பரமசிவனைவருத்துகின்ற மேன்மைபொருந்திய மன்மதனுடைய ஆயுதங்களென்று நினைத்து ஒரோசியாய் எழுந்துபிரகாசிக்கின்ற கரும்புகளையும் விளங்குகின்றசெங்கழுநீர்மலரையும்தாமரைமலரையும்

இன்னும் புதியவாயுள்ள பலமலரையும் அழிக்கவேண்டியவயல்களின்மேல் விழுந்துபுரண்டது வையையாறு-எ-று. (௪)

வடம்படைத்துடையபாரவனமுலைமுகத்து மாத
ரிடுந்துகில்கடுகிவீழ்வதென்னநின்றழகுசெய்து
கடம்படக்கிடந்தோங்கின்றயங்குசெங்குரும்பைமீது
நெடும்புனற்றிரைபோய்மீளநிவந்ததுவையையாறு.

(இ-ள்.) முத்துமாலையைத் தரித்துள்ள அழகிய தனபாரத்தின்மேல் மங்கையர்கள் தரிக்கின்ற வஸ்திரம்சீக்கிரத்தில் வீழ்வதுபோல நின்று அழகினைச்செய்து விசாலமாகவிருக்கின்ற தென்னமரத்தில் விளங்குகின்ற சிவந்தகுரும்பையின்மேல்நெடிய நீர்த்திரைகள்வீசி மீளப்பெருகியது வையைநதி-எ-று. (௫)

மீதெழுபரிதிகையால் விடுங்கனல்வெப்பந்தீரப்
பூதலமடந்தைபோர்க்குபுதியவெண்டுகிலேபோல
யாதளர்ப்பழனஞ்சோலையாதெனப்பார்த்துகஞ்ச
மாதுறைமதுரைமூதூர்மதிற்புறஞ்சென்றுசேர்ந்து.

(இ-ள்.) ஆகாயத்திலெழுகின்ற சூரியனானவன் தன்கிரணங்களென்னுங்கைகளால் விடுகின்ற வெப்பம்நீங்கப் பூமிதேவியானவள் போர்த்துக்கொள்ளுகின்ற புதுமைபொருந்திய வெள்ளைவஸ்திரம்போல் மலரையுடைய கழனியெது சோலையெதுவென்று சொல்லப்பரவித் தாமரைப்பூவிலிருக்கின்ற லட்சுமியானவள் வசிக்கின்ற மதுரைமாநகரத்து மதிற்புறத்தே வெள்ளம்வந்து சூழ்ந்தது-எ-று. (௬)

தாங்கெபதுவசவாயிற்றடமதிலியைத்தள்ளி
யாங்கெழின்மதுரைமூதூரழிப்பதுபோன்றுசெல்லப்

பாங்குளவிடங்களெல்லாம்பரந்ததுவையையன்னீ
ரீங்கெதுசெய்வமென்றுயாவருங்கவற்சிகொண்டார்

(இ-ள்.) தாங்கப்பெற்ற கொடிகள்கட்டிய கோபுரவாயிலையுடைய விசாலமாகிய மதிலையிடியும்படித் தள்ளி மதுராபுரிப்பட்டணத்தை யழிப்பதையொத்துச் செல்லப்பக்கங்களிலேயுள்ள இடங்களெல்லாம் வையைநீரானது பரவிவந்தது அதுகண்டு இவ்விடத்திலேயாம் என்னசெய்வோமென்று எல்லாருங் கவலைகொண்டார்கள்-எ-று. (எ)

மைக்கடுங்களிற்றுத்தானைவழுதியுங்கடிதுவந்து
தொக்கபொன்மலருமுத்துந்துகின்மணிப்பூணுநல்கித்
தக்கவண்புவியிலுள்ளோர்தமக்குயிரென்னுமன்னே
மிக்கநின்கோபமாறல்வேண்டுமென்றிறைஞ்சிநின்றான்.

(இ-ள்.) வேகத்தையுடைய கறுத்தயானைபோன்ற சேனைகளையுடைய பாண்டியராஜனும் சீக்கிரத்திலேவந்து நெருங்கியபொன்னும் பூவும்முத்தும் வஸ்திரமும் இரத்தினாபரணமும் அந்தவையையாற்றிலே விட்டுத்தகுந்த பூலோகத்தாருக்கு உயிரென்கிறதாயே உன்னுடைய மிகுந்தகோபமாறுதல் வேண்டுமென்று வணங்கிநின்றான்-எ-று. (அ)

கலைமதிக்குலத்துமன்னன்கன்னிநன்னாடன்கூறுந்
தலைமைமிக்குடையசொல்லாற்றன்முனிவொழிகவின்றி
மலையனத்திரைகண்மேன்மேல்வருதல்கண்டிது வென்
னென்று நிலைபுறச்சிந்தையுள்ளேகேடினைநாடிப்பின்னர்

(இ-ள்.) சந்திரகுலத்து மன்னவனுங் கன்னிநாடனு மாகிய பாண்டியன் வேண்டிக்கொண்டதலைமைப்பாட்டை மிகவுமுடைய சொல்லினாலே வையைநதியானது தன்னுடைய கோபந்தீர்ந்தா

மல் மலையைப்போல அலைகள் மேலுமேலும் வருதல்கண்டு இதுஎன்னவென்று நிச்சயந்தெரிய மநதுக்குள்ளே ஆலோசித்தான் அப்படி ஆலோசித்தபின்-எ-று. (௬)

ஆதியாங்கடவுளெந்தையாலவாயமலன்மங்கை
பாதியான்சிறந்தபூசைபண்டையிற்குறைந்ததுண்டோ
நீதியாந்தவத்தின்மிக்கார்நெஞ்சகம்புழுங்கமண்மேற்
றீதியாஞ்செய்ததுண்டோசெப்புமினமைச்சியென்றான்.

(இ-ள்.) யாவர்க்கும் முதற்கடவுளாயும் எனது பிதாவாயும் திருவாலவாயிலிருக்கும அமலனும் உமாதேவிபாகனுமாகிய பரமசிவனுக்கு முன்சென்மத்திலே யான்செய்யும் பூசையிலே குறைவுபட்டதுண்டோ, நீதிநிறைந்த தவத்திலே மிகுந்த பெரியோர்களுடையமநம்புழுங்கும்படிப் பூமியிலேயான் தீங்குசெய்ததுண்டோ, சொல்லுங்கள் மந்திரிகளேயென்றான் பாண்டியராஜன்-எ-று. ()

விளங்கிளாமதிசேர்செந்நீவிந்தகர்பத்தரான
வளந்திகழ்வாதவூரர்வருநதியல்லாப்பினீக்கி
புளங்கொளமகிழ்ச்சிசெய்யினுறுபுனலுாகொளாதென்
றளந்தறிவறிந்துகூறியாகவாதொழுதுநின்றார்.

(இ-ள்.) பிரகாசிக்கின்றமூன்றும் பிறையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனுக்கு அடியாரான வளம்பொருந்திய மாணிக்கவாசகரைவருத்தப்படுத்துகின்ற கோட்டிநின்றுநீக்கி அவருக்குமநமகிழும்படி செய்வித்தால் மிகுந்த இந்தநீர் ஊரை யடித்துக்கொண்டு போகாதென்று ஆலோசித்துச் சொல்லிப் பாண்டியனைத்தொழுது நின்றார்கள் மந்திரிகள்-எ-று. (௱௪)

மன்னனுமவர்கடம்மேன்மகிழ்ந்கருட்பார்வைநல்கி
யென்னுளமதிற்றவாற்றின்றினிதுரைத்தீரென்று
கொன்னுறுவளப்பினூடுநிற்குநற்குணத்தினானை [ன்
முன்னுறவழைத்துநனிபானமுகமலர்ந்திதுமொழிந்தா

(இ-ள்.) பாண்டியராஜனும் அப்படிச்சொன்னவர்களிடத்து மநமகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்து என்மநத்தில் நினைத்தபிரகாரமே இன்றுஇங்கே இனிதாகச் சொன்னீர்களென்றுசொல்லி அச்சத்தைத்தருகின்ற வளப்பினிடத்திலே இருக்கின்ற நற்குணத்தையுடைய மாணிக்கவாசகரைத் தம்முன்னே யழைப்பித்துச் சிநேகத்தால் முகமலர்ச்சியடைந்து இந்தவார்த்தைசொன்னான்-எ-

பாம்பணிசெய்யவேணிப்பரமபரனடியார்கைமே
லாம்பொருணமதேயானாலறம்பிறர்க்காவதுண்டோ
தேம்படுமலங்கன்மார்பா செயலிதற்குமதுமேனி
சாம்பவதுவமேயானசெய்தண்டலேதகவிலாமை.

(இ-ள்.) சருப்பத்தையணிந்த சிவந்தசடாபாரத்தை யுடைய பரமசிவனடியார்கள் கையிலே நீர்கொடுத்தபொருள் நம்மதேயானல் தருமம்பிறர்க்குப்போகுமோ வாசனைபொருந்திய மாலையை யணிந்த மார்பினையுடைய மாணிக்கவாசகரே இந்தக்காரியத்திற்கு உமது திருமேனி வருந்துவது விருதாவே இதற்குயான் தண்டேல் செய்தது அறிவிலாமையாம்-எ-று. (௰௧)

உற்றவித்தகைமைமுன்னேயுணருமிவ்வுணர்விலாமை
குற்றமித்தனையுநம்மேற்கொண்டனங்குறைவிலாமன்
மற்றினிப்புகலுமாறென்[illegible]ம்பூர்கொளாம
[illegible]னுநவின்றான்.

(இ-ள்.) வந்த இந்தக்காரியங்களை முன்னதாக அறியுமறிவில்லாமையாகிய குற்றத்தை நமதாகக்கொண்டோம் குறைவில்லாமல் இனிநாஞ்சொல்லத்தக்கதென்னவென்றால், வையைநதி நம்முடைய மதுரைமாநகரையழியாமல் நன்மையாகிய தவத்திலே தலைவராகியநீரே அடைத்தடைசெய்யுமென்று சொன்னான் பாண்டியராஜன்-எ-று. (௯௪)

அருட்பெருவழுதியிவ்வாறன்புரைபகர்ந்தபோதுங், கரிப்
பரிதென்னமுன்னஞ் சமுகமாய்வெகுண்டபோதும், விருப்
பொடுவெறுப்புமில்லாமெய்ம்மையாந்தன்மையாண்ட, திருப்
பதத்தினைந்தார்வையைசெருக்குடன்புகுந்துகொள்ளாமல்.

(இ-ள்.) கிருபையையுடைய பெரியபாண்டியராஜனானவன் இந்தப்பிரகாரம் பக்தியானவசனஞ் சொன்னபோதும் ஒருவராலுந் தாங்குதற்கரிதென்று சொல்லும்படி முன்பு அக்கினியைப்போல கோபித்தபோதும் விருப்பும் வெறுப்புமில்லாத மனத்தினையுடைய மாணிக்கவாசகர் தம்மையாட்கொண்ட பரமசிவனுடைய திருவடியை நினைத்தார் வையைநீரானது மதுராபுரியை யடித்துக் கொண்டு போகாமல்-எ-று. (௯௫)

சுந்தரப்பரிமேல்வந்ததோற்றமேமனத்திலுன்னி
யந்தரத்திறைஞ்சநன்னீரடங்கியுள்வாங்கிச்செல்ல
வெந்துயர்பிறவியானவிடங்கொளாவேலைநீந்தி
வந்தருட்கரையிற்சேர்வார்வையையங்கரையிற்சென்றார்.

(இ-ள்.) அழகிய குதிரையின்மேல்வந்த காட்சியையே மனதில் நினைத்து ஆகாயத்திலே வணங்க நல்லநீரானது அடங்கி யுள்வாங்கிபோக வெப்பம்பொ[illegible]ச்செய்கின்றபிறவியாகிய

விடத்தையுடைய கடலைநீந்திவந்து கிருபையாகிய கரையிலே சேரப்பட்ட மாணிக்கவாசகர் வையைநதிக்கரையில் வந்தார்-எ-று.

முறைமுறைவணங்கிநின்றவரியார்முகத்தைநோக்கி
யறைதிரைநெடுநீர்வையையடைப்பதுகடிதில்வேண்டு
முறையுமிம்மாந்தரெல்லாமொல்லையில்வம்மினென்று
பறையறைவித்துநம்மூர்க்கிவ்வுரைபரப்புமென்றார்.

(இ-ள்.) கிரமப்படி வணக்கஞ்செய்துநின்ற தூதர்களுடைய முகத்தைப்பார்த்துச் சத்திக்கின்ற அலையையுடைய நெடியநீர் சூழ்ந்த வையைநதியைச் சீக்கிரத்தில் அணைசெய்யல்வேண்டும் வசிக்கின்ற இந்தமனிதர்களையெல்லாம் சீக்கிரத்தில் வாருங்களென்று முரசறைவித்து நம்முடைய ஊருக்கு இந்தச்சொல்லைத் தெரிவியுங்கோ ளென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௰௭)

ஆரியர்கடிதிலோடிவன்பறையறைவித்தம்பொற்
றேரியல்வீதிதோறுஞ்சென்றுரைப்பதன்முன்னே
கூரியகொட்டிமண்சேர்கூடையுங்கொண்டுவையை
நீரியல்கரைமேல்வந்துநின்றனர்மதுரைமாந்தர்.

(இ-ள்.) அப்படியே தூதர்கள் சீக்கிரத்திலோடி வலிய பறையறைவித்து அழகிய பொன்மயமாகிய இரதங்கள் நடக்கின்ற தெருக்கள்தோறும் போயிதனைச்சொல்லுதற்கு முன்னமே கூர்மைபொருந்திய மண்வெட்டியும் மண்ணெடுக்கும கூடையுங்கொண்டு நீர்பெருகிய வையைநதிக்கரையிலேவந்து நின்றார்கள் மதுரையிலுள்ள மனிதர்கள்-எ-று. (௰௮)

நீறுகொண்டிலங்குமேனிமறையவர்நியமஞ்செய்த
வீறுகொண்டிடங்கடோறுமாரியர்விரைந்துசென்று

கூறுகொண்டிடவாக்குப் வேறுகோலறையளிந்துசெங்கை
மாறுகொண்டிறுங்கிவையைவன்கரையடைக்கலுற்றார்.

(இ-ள்.) விபூதியைத்தரித்து விளங்குகின்ற திருமேனியையுடைய மாணிக்கவாசகரானவர் நியமித்த அதிகாரத்தைக்கொண்டு இடங்கள்தோறும் தூதர்கள் சீக்கிரத்திற்போய் எப்படிப்பட்டவர்களுக்கும் அளவுகோலால் வேறுவேறளந்துவிட்டுச் சிவந்தகையிலே ஒருமாறுகொண்டு அடித்து வையைநதிக்கரையை அடைக்கத்தொடங்கினார்கள்-எ-று. (௰௧)

கண்பெறுகழையின்முத்துங் கடகரிமருப்பின்முத்தும்
வெண்பணிலத்தின்முத்துமேதகுகரும்பின்முத்தும்
வண்புனற்றிரைகள்வீசவரையெனக்கரைகள்செய்து
பண்படப்பொருந்தநீட்டபதித்துயர்வரம்புசெய்வார்.

(இ-ள்.) கணுக்களையுடைய மூங்கிலிற்பிறந்த முத்துக்களையும், மதத்தையுடைய யானைக்கொம்பிற்பிறந்த முத்துக்களையும், வெள்ளியசங்கிற்பிறந்த முத்துக்களையும், மேன்மையாகிய கரும்பிற்பிறந்த முத்துக்களையும், வண்மைபொருந்திய நீர்த்திரைகள் கொண்டுவந்து ஒதுக்க அவைகளைமலைகளென்னும்படிக் குவித்துத்தகுதியாகப்பொருந்தநீரிலேபதியத்தள்ளிஉயர்ந்தகரைசெய்வார்கள்-எ-று.

பரிக்கிரணிறுத்துமென்பார்பாம்புகளுநட்டுமென்பார்
திரைபுனன்மிகுத்ததென்பார்தேவர்கட்கபயமென்பார்
கரைப்படுமிலோடாமவரவரொதுக்கீடு
வரைப்பிடைக்குவிந்துநிற்பாராயினர்மதுரையுள்ளார்.

(இ-ள்.) குதிரைப்பாய்ச்சலாக மரக்களைநிறுத்துமென்பார்கள் கல்லுவக்கோலாற்செய்யும் பாம்புத்திரைகளை உருட்டித் தள்ளுமென்பார்கள் அலையையுடையநீர் அதிகரித்ததென்பார்கள் அதற்குப்

பயந்து யாம் தேவர்களுக்கு அடைக்கலமென்பார்கள் வரிசைப்படுகின்ற அகிற்கட்டைகளுடனே சந்தனக்கட்டைகளும் அடித்துக்கொண்டு வருதலைப்பார்த்து அங்குள்ளவர்கள் நெடியதாகிய ஒரிடத்திலே குவிந்துநிற்பார்கள் இத்தன்மையை யுடையவரானார்கள் மதுரைமாநகரத்திலுள்ளார்-எ-று. (௨௧)

வருநடைப்புதுநீர்வையையிவ்வகையடைக்குமெல்லை
கீருடைப்பொலிதருசென்னிநிலாமலர்க்கன்புமிக்காள்
சீருடைத்தவத்தினிற்பாள்செம்மனச்செல்வியென்னும்
பேருடைநரைமுதாட்டிபிட்டுவிற்றுணவுகொள்வாள்.

(இ-ள்.) அழகினையுடைய புதுமைகொண்ட பிரவாகமிருந்த வையைநதிப்பெருக்கை இந்தப்பிரகாரம் அணைசெய்யும்போது கங்கையைத்தரித்த பிரகாசம்பொருந்திய சிரசையுடைய பரமசிவனிடத்தில் அன்புநிறைந்தவளும் சிறப்புடையதவத்திலே நிற்பவளுமாய்ச் செம்மனச்செல்வியென்னும் பெயரையுடைய நரைத்த ஒருகிழவியானவள் பிட்டுவிற்பனைசெய்து சீவனஞ்செய்து வருபவள்-எ-று. (௨௨)

ஆங்கவட்களந்துநீக்குங்கோலறையடைப்பதின்றி
யோங்கலைப்புதுநீர்வையையுடைப்பினையடைக்குமெல்லை
தீங்குளதறுகணாளர்சென்றகற்குறுகண்செய்ய
வீங்கெமக்குறுதியாவாரியாவரோவென்றிரங்கி.

(இ-ள்.) அவ்விடத்தில் அந்தப்பிட்டுவாணிச்சிக்கு அளவுசெய்து நீக்கியபங்குமாத்திரம் அடையாமல் அலைகளையுடைய புதிய நீர்மிகுந்த வையைநதிக்கரையெல்லாம் அடைக்கும்போது அதைப்பார்த்துக் கொடுமையுள்ள தூதர்கள் வருத்தப்படத் துன்பஞ்செய்ய அந்தஅம்மையானவள் பயந்து இவ்விடத்திலே எனக்குறுதி

யாய்வந்து இந்தப்பங்கை யடைப்பவர்கள் யாரோவென்று இரக்கமடைந்து-எ-று. (௨௩)

பிட்டினைக்கூலிகொண்டுபெருங்கரையடைப்பாரின்றி
நெட்டிலைச்சூலமேந்துநின்மலன்கோயிலெய்தி
மட்டறத்தளர்ந்தகொங்கைமார்பினிற்கண்ணீர்வார
வெட்டிருந்திரண்டபாதமிறைஞ்சினளிதனைக்கூறும்.

(இ-ள்.) பிட்டினைக்கூலியாக வாங்கிக்கொண்டு பெரியகரையையடைப்பவரொருவருமில்லாமல் நெடியவிலைகளையுடைய சூலாயுதத்தை யேந்தப்பட்ட சொக்கநாதரது கோயிற்குப்போய் அளவுகடந்து தளர்ந்துசாய்ந்த கொங்கைகளையுடைய மார்பிலேகண்ணீரொழுக அஷ்டமூர்த்தியாயிருந்த அவருடைய திருவடியை வணங்கினறு இதைச்சொல்லுவாள்-எ-று. (௨௪)

நாலடித்தரவுகொச்சககலிப்பா.

நெட்டரவக்கச்சுடையாய்நீலநிறத்திருமாதின்
வட்டமுலைத்தழும்புபடவந்தணையுந்திருமார்பா [தும்
கட்டியபொற்சடையாயுன்கண்ணருள்கொண்டெப்பொழு
பிட்டினைவிற்றுண்போர்க்கும்பேரிடும்பையுளதாமோ.

(இ-ள்.) நெடியசருப்பக்கச்சையுடையவனே கரியநிறத்தையுடைய காமாட்சியினது வட்டமாகியமுலைத்தழும்புபடவந்து அணைந்த அழகியமார்பையுடையவனே, கட்டப்பட்ட சிவந்தசடாபாரத்தையுடையவனே, உன்னுடைய கிருபாநோக்கத்தைக் கொண்டு எப்போதும் பிட்டினைவிற்று உண்ணப்பட்ட எனக்கும்பெரியதுக்கமுண்டாமோவென்றாள்-எ-று. (௨௫)

யாருடனினிப்புகல்வேனென்னுடையாய்வையையினை
னீருடையாதடைக்கும்வகைநீசிறிதின்றருளாயேல் [ன்
சீருடையாயுனக்கடிமைசெய்யுமவர்க்கெளிமையெனும
பேருடையாயெனப்பலரும்பேசுமொழிபழுதாமோ.

(இ-ள்.) இனியாரோடியான் சொல்லுவேன் என்னையடிமையாகவுடையவனே வையைநதி நீருடைத்துக்கொண்டுபோகாமல் அடைக்கும்படி நீ இன்றுகொஞ்சங் கிருபைசெய்யாயானால் சிறப்பையுடைய கடவுளே, உன்க்கடிமை செய்யும் அடியவர்களுக்கு எளிமையென்னும் பெயருடையவனென்று பலரும்பேசுகின்ற சொல் பழுதாகுமோ-எ-று. (உசு)

தாயுமிலைதந்தையிலைதமருமிலைதமியேனைப்
பேயினுடனின்றாலும்பிரித்தறியவொண்ணாத
தீயவெனதிலம்பாடென்சிந்தையிலெவெந்துயர்தீர
நீயருளாயாயினுயிர்நீப்பேன்மற்றென்செய்கேன்.

(இ-ள்.) எனக்குமாதாவுமில்லை, பிதாவுமில்லை, ஞாதிகளுமில்லை, தனியேனாகியவென்னைப் பேயுடனேகூட நின்றாலும் அதினின்றுவேறு பிரித்தறியக்கூடாதவென்னுடைய தரித்திரமானது தீயதாயிருக்கின்றது என்மனதிலிருக்கின்ற வெவ்வியதுக்கம் நீங்கும்படி நீகிருபைசெய்யாயானால்உயிரைநீக்கிக்கொள்ளுவேன் பின்னென்னசெய்வேனென்றான்-எ-று. (உஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்றெனக்குறுதியாகியானிடும்பிட்டுவாங்கி
வன்றிறற்கூலியாளாய்வந்தணையடைப்பாரில்லை

யுன்றனக்குப்பயமயானென் றுரைப்பவட்கன்மேலன்பு
சென்றவட்காளாமாறு துணிந்தனர்தேவதேவர்

(இ-ள்) இன்றைக்கு எனக்குஉறுதியாய் நான்கொடுக்கப்பட்ட பிட்டினைவாங்கிக்கொண்டு மிகுந்தவலிமையுள்ள கூலியாளாய் வந்து மேலாகியவையையாற்றங்கரையை அடைப்பாரில்லை உனக்கடைக்கலம் யானென்று முறையிடுகின்ற பிட்டுவாணிச்சியின் மேல் அன்புவைத்து அவளுக்குஆளாகும்படித் துணிவுகொண்டார் தேவதேவராகிய சொக்கநாதர்-எ-று. (உஅ)

ஆடையுந்துணிந்தசிரையாகியேகூலியாளாய்க், கூடையுந்
தலைமேற்கொண்டு கொட்டுடைத்தோளராகிப், பீடைகொ
ண்டயர்வாள்நாணப்பெரும்பசியுடையார்போல, வேடைகொ
ண்டொல்லைவந்தார்வேண்டியவடிவங்கொள்வார்.

(இ-ள்.) துண்டாய்க்கிழிந்த வஸ்திரத்தை யுடையவராயும், கூலிகொண்டு வேலைசெய்யும் ஆளாயும், கூடைகவிழ்ந்த தலையையும், மண்வெட்டியைக் கொண்டிருக்கும் தோளையுமுடையவராயுந் தன்பங்கை அடைத்தற்கு ஒருவருமில்லாமையாலே துன்பங்கொண்டு ஆயாசப்படுகின்ற பிட்டுவாணிச்சியம்மை காணும்படி அதிகபசியுடையவர்போல வேட்கைகொண்டு சீக்கிரத்தில்வந்தார் வேண்டியவடிவங்கொள்ளும் சொக்கநாதர்-எ-று. (உகூ)

வந்தெனையேவல்கொள்வாருளர்கொலோ மற்றிங்கென்று
புந்தியின்மகிழ்ந்துகோயில்வாயிலிற்புகன்றபோதி
லந்நகன்மொழியைக்கேளாச் சனனை தனையயர்ச்சிகூருஞ்
சிந்தனையொழிந்துகூலியாளனைச்சென்றுசேர்த்தாள்.

(இ-ள்.) இங்கேவந்துஎன்னை வேலைகொள்வாருண்டோவென்று மநந்திலேமகிழ்ச்சிகொண்டு ஆலயத்தின் கோபுரவாயிலிலே நின்று சொன்னார் அப்போது அந்தநலலசொல்லைக்கேட்டுத் தாயாகிய பிட்டுவாணிச்சியம்மையானவள் தன்னுடைய மனோவியாகுலந்தீர்ந்து கூலியாளாகிய கடவுளை அடுத்தாள்-எ-று. (௬௰)

புடையினைமேலுலகோரின்றிப புனைந்துள புலித்தோலாடை, யுடையின்மேலசைக்குங்கச்சாபோங்குநச்சுரகமின்றிச், சடையினமேன்பதிடமின்றிக தாங்கியமூமாணினறி, விடையின்மேலின்றிநின்றவெளியனைவெளியிறகண்டாள்.

(இ-ள்.) பக்கத்திலே முப்பத்துமுக்கோடிதேவர்களுமில்லாமல் தரித்திருக்கின்ற புலித்தோலாடையும், அதனமேற்கட்டப்பட்ட கச்சாயோங்கிய சருப்பமுமில்லாமல சடாபாரத்திலே சந்திரனுமிலலாமல் தாங்கபபெறற மழுமானுமில்லாமல் இடபவாகனமுமில்லாமலநின்ற சிதாகாசரூபத்தையுடைய கடவுளைவெளியிலேகண்டாள் பிட்டுவாணிச்சியம்மை-எ-று. (௬௧)

மைந்தநீயென்பகியநாளாய்வருகெனமுன்னர்கூலி
தந்திடேலவருவலென்றுசாற்றலுநகரவிபபோ
திந்திவாரமுமபோலுமினியபிட்டளிப்பேனல்லா
லந்திவாயிந்தவிற்றேயளிப்பனின்கூலியென்றாள்.

(இ-ள்.) கண்டவுடனே மகனேநீஎனக்கு இங்கேஆளாகவரக்கடவாயென்று சொல்ல, அதற்குக் கூலியாளானவர் முன்கூலிகொடுத்தையேயானால் வருவேனென்றுசொல்ல அதற்கு அந்த அம்மை யிபபோது சாப்பிடுதற்குத் தேவாமிர்தமபோலும் இனிமையுள்ள இந்தப்பிட்டுத்தருவேன் அல்லதுசாயங்காலத்தில் இந்தப்பிட்டினைவிற்று உன்கூலியைக் கொடுபபேனென்றாள்-எ-று. ()

இரும்பசியுடையேனன்னே யினியபிட்டளிப்பையாகிற்,
குரமபுகொண்டடைப்பேன்யானே கோலமுழுதுமென்
னக், கரும்புராகத்தின்மேலிட்டபிட்டினைக்கரதலத்தாலள்ளி, வி
ரும்பியீங்கிதனைக்கொள்வாயென்றனள்விருப்பமிக்காள்.

(இ-ள்.) மிகுந்தபசியுடையேன் நீயே இனிமையுள்ள பிட்டினைக் கொடுப்பாயானால் கோலாலளவுசெய்த உன்பங்கு முழுவதும் யானே அடைப்பேனென்று சொல்லற்கரியபுரத்தையுடைய வஸ்திரத்திலே யிட்ட பிட்டினைக் கையினாலள்ளி விருப்பம்வைத்து இங்கே யிதனைத்தின்னென்றுசொன்னாள் அன்புமிகுந்த பிட்டுவாணிச்சியம்மை-எ-று. (௬௬)

கூற்றடுங்கமலபாதர்குறுந்துணிக்கரியசீரை
யேற்றிடப்பிட்டுவாங்கியின்புறவமுதுசெய்து
மாற்றருமபசியையன்னேமாற்றினையினிப்போய்வையை
யாற்றினிற்கூற்றிலுண்டாமருங்களையடைப்பேனென்றார்

(இ-ள்.) கூற்றுவனையுதைத்த தாமரைமலரையொத்த திருவடிகளையுடைய பரமசிவனவர் கொஞ்சந்துண்டாய்க் கருமையுள்ள கந்தையையேற்று இட்டபிட்டினை வாங்கி இன்பமிகும்படித் திருவமுதுசெய்து ஒருவராலும் நீக்குதற்கரிய பசியினைத்தாயேநீக்கினாய் இனிநான் வைகையாற்றுக்குப்போய் உன்பங்குண்டான அரியகளையை அடைப்பேனென்றார்-எ-று. (௬௭)

நன்றுநன்றின்னுமன்னேநயந்துபிட்டளித்தல்வேண்டு
மென்றுதந்துணிக்கசீரையேற்றதிலுறையவாங்கித்
தின்றுதின்றலைநீர்வையைச்செழுங்கரையதனிற்சென்று
குன்றெனுந்தவத்தாயுன்றன்கோலறைகாட்டுகென்றார்.

(இ-ள்.) நல்லதுநல்லது இன்னமுந்தாயே நயப்புடனே பிட்டினைக் கொடுக்கவேண்டுமென்று சொல்லிந்தமது துண்டுக்கலையை யேற்று அதுநிறையவாங்கித் தின்று தின்று அலையையுடைய நீர்மிகுந்த செழுமையுள்ளவையைநதிக்கரையிலேவந்து மலைபோலும் உயர்ந்த தவத்தையுடைய அம்மே, உன்னுடையபங்கைக்காட்டுமென்றார் சொக்கநாதர்-எ-று. (௬௫)

மெய்த்தவர்புரிவார்தம்மின்விழுப்பமிக்குடையவன்னை
யித்தடங்கரையைவல்லேயடைப்பாயென்னப்
பைத்தவெம்பகுவாய்நாகப்பணிமதிப்பாதிகொன்றைக்
கொத்துடனமுடிக்கவல்லார்கோனிலத்தையடைக்கலுற்றார்.

(இ-ள்.) மெய்ம்மைபொருந்திய தவஞ்செய்பவருக்குள் நன்மைமிருந்தபிட்டுவாணிச்சியமையானவள் இந்தவிசாலமாகிய கரையைச் சீக்கிரத்திலேதம்பி நீயடைப்பாயாகவென்றுசொல்லப் படத்தையும் வெப்பம்பொருந்திய பிளந்தவாயையுமுடைய சருப்பத்தையுங் குளிர்ச்சிபொருந்திய அர்த்தசந்திரனையுங்கொன்றைமலர்க்கொத்துடனே சிரசின்மேன்முடிக்க வல்லவராகிய சொக்கநாதர் கோலாலளவுசெய்த பங்குநிலத்தை அடைக்கத்தொடங்கினார்-எ-

பேர்ப்பர்மண்கூடைபெய்வர்பிறைமுடிமேற்சும்மாடு
சேர்ப்பர்பின்சுமந்துவையைத்திண்கரைசொரிந்துமீள்வர்
வேர்ப்பர்மெய்யிளைப்பார்போலமென்றுபிட்டிரசநாவிற்
பார்ப்பரவ்வன்னைதன்மேற் பரிசருட்பார்வைசெய்வார்.

(இ-ள்.) மண்ணை வெட்டுவார், கூடையிலேயிடுவார், மூன்றாம்பிறையைத் தரித்தசிரசின்மேற் சும்மாடுகோலிவைப்பார், பின்புசுமந்து திண்ணிய வையைநதிக்கரையிலே சொரிந்துதிரும்பு

வார், வியர்வையடைவார், திருமேனி யிளைப்பார்போல் பிட்டினையென்று நாவிலே சுவைபார்ப்பார், அந்தப்பிட்டுவாணிச்சியம்மைமேல் அன்புவைத்துக் கிருபாநோக்கஞ்செய்வார் கூலியாளாகிய சொக்கநாதர்-எ-று. (கஎ)

பிட்டுநன்றென்றுகூறிப்பிறைமுடியசைப்பார் வேட
னிட்டமென்றரையிற்சாலவீசனுநகாமினென்பார்
கொட்டுடன்கவித்தகூடைகொண்டுநின்றாடல்செய்வார்
வெட்டிமண்குவிப்பாரோடிவிரைந்தடிபாயந்துமீள்வார்.

(இ-ள்.) பிட்டுநன்று யிருக்கின்றதென்றுசொல்லி மூன்றாம் பிறையைத்தரித்த சிரசை அசைப்பார், வேடர்குலத்திலவந்த கண்ணப்பநாயனார் படைத்த மெலியமாமிசத்தைக் காட்டிலும், பரமசிவனுக்கு இந்தப்பிட்டுமிகவும் இனிமையுள்ளதாகுமென்பார் மண்வெட்டியுடனே கவித்துக்கொண்டிருக்கின்ற கூடையையுங் கொண்டு கூத்தாடுவார், வெட்டி மண்ணைக் குவிப்பார் சீக்கிரத்திலே காலினலேதாண்டித் திரும்புவார்-எ-று. (கஅ)

பரிவுடைமனத்தினளும்பரமர்தஞ்செய்திகண்டு
கரையினையடைந்தவேண்டுமென்றுதங்கருமக்கூற
ளுரானுடைவழுதிதூதர்காண்பரோவென்றுகணசெய்வாள் நாள்
ரிருவினையுடையேன்மற்றிங்கெனசெய்வேனெனநினைந

(இ-ள்.) அன்புள்ளமனத்தினையுடைய பிட்டுவாணிச்சியம்மையும் கூலியாளாகவந்த சொக்கநாதருடைய செய்தியைப்பார்த்து வையையாற்றின்கரையை யடைக்கவேண்டுமென்று தன்னுடையகாரியத்தைச் சொல்லமாட்டாதவளாய் வலிமையையுடைய பாண்டியராஜனுடைய தூதர்கள் காண்பார்களேயானால் துன்பஞ்

செய்வார்கள் இருவினைகளையுடைய நான் இதற்குஎன்ன செய்வேனென்றுநினைத்தாள்-எ-று. (௫௯)

மற்றிவணிலைமைவெள்ளிமன்றுணின்றாடுகின்ற
கொற்றவரறிந்துபின்னுங்கூடைமண்கரைமேலேற்றி
யுற்றவிக்கரையையன்னேயொல்லையிலடைப்பேனின்னே
சற்றிதற்கிரங்காதேகுன்றனுடைமனையிலென்றார்.

(இ-ள்.) இந்தப்பிட்டு வாணிச்சியம்மை நிலைமையை வெள்ளியம்பலத்திலே நிருத்தஞ்செய்கின்ற சொக்கநாதராகிய கூலிக்காரர் தெரிந்துபின்னும்கூடையிற்கொண்ட மண்ணைக்கரையிலே கொட்டிவிட்டு இந்தக்கரையை இப்பொழுதேதாயே, சீக்கிரத்தில் அடைப்பேன் கொஞ்சமாகிலும் இதற்கு இரங்காமல் உன்னுடைய உரிமையுள்ளவீட்டுக்குப் போவென்றார்-எ-று. (௬௰)

நீறணிபுனிதமேனிநின்மலன்விடுப்பவேகித்
தோறிரைமுகத்தினாடன்றன்மனைபுகுந்துமெல்லை
கூறருந்தவத்தின்மிக்காள்கூறையடைக்கவஞ்சி
மாறடுதிரைக்கைதன்னாற்றொழுதனள்வையைமங்கை.

(இ-ள்.) விபூதிதரித்த பரிசுத்தமாகிய திருமேனியையுடைய சொக்கநாதரனுப்ப நடந்துதோல்திரைந்த முகத்தையுடைய பிட்டுவாணிச்சியம்மை தன்வீட்டிற்குப் போயினாள் அப்போது சொல்லுதற்கரிய தவத்தினால்மிகுந்த அவளுடைய பங்கைச் சுவாமியடைக்க அதற்குப் பயந்துமாறிவருகின்ற அலையாகிய கைகளால் வணங்கினாள் வையைநதியாகிய மாது-எ-று. (௬௧)

சிறந்தமண்கூடைவேணிதிருமுடிக்கொட்டையாக
நிறங்கிளர்கொன்றைநீழனிறைமணலணையதாக

வுறுங்கொழிலைமுயற்சியாலேயுயங்கிமெய்யினைத்கார்போ
மறைந்தாற்கெங்குமானவள்ளலார்பள்ளிகொண்டார். [௭

(இ-ள்.) சிறக்கப்பெற்ற மண்ணெடுக்குங்கூடை சடாபாரத்தையுடைய திருமுடிக்குத் தலையணையாகவும் சிறந்தையுடைய கொன்றைமரத்தினது கீழுள்ளவே கரைந்திருக்கின்ற மணலிலேமெத்தையாகவு மிகுந்ததொழிலைசெய்யு முயற்சியாலே வருந்தித் திருமேனியினைந்தவர்போல மறைந்து உலகெங்குமாயிருக்கின்ற சொக்கநாதர் துயில்கொண்டார்-எ-று. (௬௨)

ஆங்கவர் துயிலுமெல்லையநட்பெருவாழ்வின் மிக்கா
ரோங்கியகருமஞ்செய்வாராகியொண்பிரம்புதாங்கிப்
பாங்குகுறைவைகாடிப்படாந்தகோவையினுள்ள
தீங்குநன்குணர்ந்தொன்னைச்சேறுறாக்கரையிலன்னோர்.

(இ-ள்.) அவ்விடத்திலே சொக்கநாதர் நித்திரைசெய்யும்போது கிருபையுள்ளபேரின்ப வாழ்விலேயிருந்தமாணிக்கவாசகரானவர் மிகவுமுயர்ந்த காரியஞ்செய்பவராய் ஒளியையுடைய பிரம்பு வைத்துக்கொண்டு பக்கத்திலேயிருக்கின்றவர்களைப்பார்த்து அவரவருக்கு அளந்துக்கொடுத்த பங்கிலுள்ள குற்றத்தையும நன்மையையும் அறியுங்கோளென்று சென்றார் அப்படியே அவர்கள் வையைநதிக்கரையின்மேற் போனார்கள்-எ-று. (௬௩)

நன்குறவடைத்தல்செய்காரியாவருமெனநயந்து
சங்கரனடக்குநீடுதடங்கரையவர்களெய்தி
யெங்கணுமுயர்ந்தாழ்ந்தகிவ்விடமியார்க்குவந்த
பங்கிதுமொழிமினென்னநின்றவரிவைபகர்ந்தார்.

(இ-ள்.) நன்மைபொருந்த எல்லாரும் அவரவர்பங்கை நன்றுயடைத்தார்களென்று மநமகிழ்ந்து சொக்கநாத ரடைக்கின்ற

டியகரையிலே அவர்கள்வந்து எவ்விடமும் உயர்ந்திருக்க இவ்விடமாத்திரந் தாழ்ந்திருக்கின்றது இதுயாவர்க்குவந்த பங்குசொல்லுங்களென்ன அங்குநின்றவர்கள் இவைசொன்னார்கள்-எ-று.()

பெருவளநீடுகூடற்பிட்டுவிற்றுணவுகொள்வா
ளொருமுதுமடந்தையாளாயொருவன்வந்திங்கணெய்தி
யிருநிலமகிழ்ந்துகூடையுட்சொரிந்திரங்கிநிற்பன்
சிரமிசையெடுப்பன்மீள்வன்சிந்துவன்குதல்செய்வான்.

(இ-ள்.) பெரியவளங்கணீடிய மதுரைமாநகரத்திலே பிட்டினைவிற்றுச் சீவனஞ்செய்பவளாகிய ஒருகிழவியிருக்கின்றாள் அவளுக்காளாய் ஒருத்தன் இங்கேவந்து பெருமைபொருந்திய மண்ணைவெட்டிக் கூடையிலே சொரிந்து இரங்கிநிற்பான் தலைமேலெடுப்பான் திரும்புவான் கொட்டுவான் சிரிப்பான்-எ-று. (௪௫)

பாடுவனாடல்செய்வன்பையவோர்கூடைமண்ணை
நீடுதிண்கரையிலேறச்சொரிகுவனொடிந்துநிற்ப
னோடுவனோடிமீள்வனொருகைமண்கரையிலேறப் [ன்.
போடுவன்போகவென்னில்வருவன்வாவென்னிற்போவ

(இ-ள்.) பாடுவான், கூத்தாடுவான், மெல்ல ஒருகூடைமண்ணை நீண்ட உரத்தகரையிலேறக் கொட்டுவான், நெடுநேரநிற்பான், ஓடுவான், ஓடித்திரும்புவான், ஒருகைமண் கரையிற்போகப் போடுவான் போவென்றால் வருவான் வாவென்றாற்போவான்-எ-

பிட்டினைநுகர்வனையாபெரிதுநன்றென்றுரையைக்
கொட்டுவன்செய்கைகாணிலரசிளங்குமரனொப்பா [ங்
னெட்டலர்க்கொன்றைநீழனெடுந்துகில்கொள்கின்றானை
கட்டுரைசற்றுங்கேளாதவன்றனைக்காண்பீரென்றார்.

(இ-ள்.) பிட்டினைச்சாப்பிடுவோன் ஐயா, மிகவுநன்றாயிருக்கி றதென்று கையைக்கொட்டுவானை அவனுடைய செய்கையைப்பா ர்த்தால் இளமைபொருந்திய இராசகுமாரன்போலு மிருக்கின்றா ன் நெடியமலையையுடைய கொன்றைமரநிழலில் தேகம்போது நித்திரைசெய்கின்றானை [illegible] டைய சொல்லைக்கொஞ்சமுங் கே ளான் அவனைக்கா [illegible] எ-று. (சஎ)

என்றலுமவனையிங்கேகொணர்மினென்றியம்புகின்ற
வன்றிறலொருவனுக் [illegible] லேயோடிச்
சென்றலுஞானயோகத்தெழுந்துவிழித்துமன்று
துன்றியபுரங்கள்செற்றார் துணைவிழிதிறந்தார்.

(இ-ள்.) இப்படியென்று சொன்னமாத்திரத்திலே அவனை யிங்கே கொண்டுவாருங்களென்று இவருக்குள்ளே யிருந்தவலிய சௌரியத்தையுடைய ஒருவனைச்சொல்ல மிலேச்சதூதரிலொருவ ன் சீக்கிரத்திலேயோடினான் அப்போது செழுமையான ஞானயோக நித்திரைநீங்கித் திரிபுரங்களையுமெரித்த பரமசிவனானவர் திருக் கண் விழித்துக்கொண்டார் எ-று. (சஅ)

விழித்தலுங்கடிதுசென்றுபார்த்தியன்வெருவநோக்கி
மொழிகனல்சிதறியங்குமுன்னவன்றன்னையெய்த
வழைத்தலும்வருதல்செய்யானஞ்சிநின்றிரங்கல்கண்டு
பழித்தவர்செய்கைபற்றியீர்த்தனன்பரிவிலாதான்.

(இ-ள்.) விழித்துக்கொண்ட மாத்திரத்தில் சீக்கிரத்திலே ஓ டிநின்ற மிலேச்சதூதனானவன் அவரைப்பயப்படப் பார்த்துச் சொல்லாகிய நெருப்பைப்பொழிந்து அந்தயசமானிடத்துக்கு வா வென்று அவரையழைத்தமாத்திரத்தில் வராமல பயந்துநின்று இ

ரங்குதல்கண்டு பழித்து அவருடைய சிவந்தகையைப்பிடித்திழுத்தான் பத்தியில்லாதவன்-எ-று. (௪௯)

ஆங்கவன்கடிதிற்றள்ளியண்ணலையெண்ணிலாத
தீங்கினன்முன்னர்க்கொண்டுசேறலுமவெகுட்சியெய்திப்
பாங்குநின்றவருணின்றபாவியைப்பாவிநோக்கி
யீங்கெழுகுருதிசோரவடித்திடிங்கிவனையென்றான்.

(இ-ள்.) அந்த தூசனானவன் ஆளாகவந்தகடவுளைச் சீக்கிரத்திலே அளவற்ற குற்றங்களையுடையவன் முன்னே தள்ளிக்கொண்டுபோய்ச் சேர்ந்தமாத்திரத்திலே பாவியாகியயசமான் கோபங்கொண்டு பக்கத்திலேயிருந்தவரில் ஒருபாவியைப்பார்த்து இங்கே இரத்தமொழுகும்படி இவனையடிப்பாயாக வென்றான்-எ-று. (௫௰)

கடுத்தசொல்வன்கணாளன்கடுத்துடன்மாறுகையி
லெடுத்தனன்முனிவர்விண்ணோரெடுத்தனர்தொழுதுசெங்
யடித்தனனடித்தபோதிலன்புடையரிவைபாகங் [கை
கொடுத்திலர்துணுக்கமெய்தமறைந்தனர்குறைவிலாதார்.

(இ-ள்.) கடுத்தசொல்லையுடைய கொடியவன் கோபத்துடனே பிரம்பினைக்கையிலே யெடுத்தான் அப்போது முனிவரும் தேவருங் கையெடுத்துக்கூப்பி வணங்கினார்கள் அவன் அடித்தான் அப்போது அன்புடைய உமாதேவியிருக்கும் வாமபாகத்தைக் கொடாமல் அங்கிருந்தவர்களெல்லாந் திடுக்கிடும்படி மறைந்துவிட்டார் குறைவில்லாதசொக்கநாதர்-எ-று. (௫௧)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தார்மேனின்றிலங்குபுயவழுதிமேலுந் தன்மனைமங்கையர்
மேலுமமைச்சர்மேலு, மார்மேலுஞ்சென்றுபெருஞ்சேனை
மேலு மயன்மேலுமான்மேலுமறவோர்மேலுந், தேர்மேல்

வெம்பகன்மேலுமதியின்மேலுஞ் சிறந்துளவிந்திரன்மேலு
ந் தேவர்மேலும், பார்மேலுங்கடனமேலுமரங்கண்மேலும்
பட்டகரன்மெய்யிலடிபட்டபோதே.

(இ-ள்.) அப்போது மாலையணிந்த பிரகாசம்பொருந்திய புயங்களையுடைய பாண்டியராஜன்மேலும, அவன்பத்தினிகள் மேலும், மந்திரிகள்மேலும, எவர்கள்மேலும, போர்யுத்தஞ்செய்யும் சேனைகள்மேலும், பிரமன்மேலும, மஹாவிஷ்ணுமேலும், முனிவர்மேலும், தேர்மேலிருக்கின்ற சூரியன்மேலும், சந்திரன்மேலும், சிறப்பினைப்பெற்றுள்ள தேவேந்திரன்மேலும, தேவர்கள்மேலும், பூமியின்மேலும், சமுத்திரத்தின்மேலும், மரங்கள்மேலும், பட்டது பரமசிவன்மேலடிபட்ட அடி-எ-று. (௫௧)

தங்கமுருவொழித்துப்பிறிதுருவமெய்திச் சதுமுகனுஞ்சங்
காழிகரித்தமாலு, மங்கமுகற்றெரிவரிதாய்வெளியேநின்ற
வண்ணலார்வடிவிலடிபட்டபோதி, லெந்தவுலகங்களினுமிரு
ந்துளோர்களெம்முடலிலடியுறைந்ததென்றுகூற, முந்தியெ
ழும்பன் மொழிகளுநாந்தவெல்லேமோதகிக்குமெழுகடலின்
முழக்கமபோலும்.

(இ-ள்.) தங்கள் தங்கள் வடிவங்களை விட்டு வேற்றுருவங் கொண்டு நான்குமுகங்களையுடைய பிரமதேவனும், சங்குசக்கரந் தரித்த மஹாவிஷ்ணுவுந்தேடி அந்தமும்ஆதியுந் தெரிதற்கரிதாகி இப்போது வெளியேநின்ற சொக்கநாதருடைய திருமேனியில் அடிபட்டபொழுதிலே எந்தலோகத்திலிருந்து வந்தவர்களும் எங்கள்தேகத்தில் அடிபட்டதென்று சொல்ல முன்னதாக எழும்புகின்ற அந்தச்சொற்கள் உலகமுடிவுகாலத்திலே சத்திக்கின்ற சத்தசமுத்திரங்களுடைய முழக்கம்போலானது-எ-று. (௫௨)

மாயையெனுங்கரும்பெரியபுனன்மேன்மொக்குள்வண்ண
மெனுமெண்ணிலாவண்டத்துள்ளுறு, மேயவகையெண்பத்து
நான்குநூறாயிரமானபலயோனியவற்றினுள்ளுறு, மாயவுயிர்
க்குயிராகிநிற்குந்தன்மையவனிகளஞ்ஞானரறிந்துபாதச்,
சேய்மலர்வழுத்துதற்கோர் கூலியாளாயச்சென்றுமுடிமண்
சுமந்தார்தில்லைநாதர்.

(இ-ள்.) மாயையென்று சொல்லுகின்ற கருமையுள்ளபெரிய நீரின்மேலே குமிழிவடிவென்று சொல்லும் அளவில்லாத அண்டங்களுக்குள்ளே பொருந்தி யிருக்கின்ற எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதமென்னும் இவைகளிலுள்ளிருக்கின்ற உயிருக்குயிராயிருக்குந் தன்மையைப பூவுலகத்தில் அஞ்ஞானிகளறிந்து தம்முடைய பாதமாகிய செந்தாமரைமலரை வணங்குதற்கு ஒருகூலியாளாகிப்போய்ச் சிரசிலே மண்சுமந்தார் தில்லைமாநகரத்திலே நிருத்தஞ்செய்கின்ற சபாநாதர்-எ-று. (௫௪)

(நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.)

மையணையுங்கிருமிடற்றார்மெய்யிலடிவாதவூ
ரையருடம்பினும்வந்துபடுதலுமேயயர்வெய்தி
யுய்யவென்னையாட்கொள்ளவுகந்தொருவர்க்காளாகி
மெய்யவெழுந்தருளினரோவென்றென்றுமிகநொந்து.

(இ-ள்.) மேகத்தையொத்த அழகியகண்டத்தை யுடையசொக்கநாதர் திருமேனியிலேபட்ட அடியானது திருவாதவூரிலே அவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடைய திருமேனியிலும் வந்துபட்டமாத்திரத்திலே அவர் ஆயாசத்தையடைந்து நான்பிழைக்கும்படி யென்னை அடிமைகொண்டருள மநமகிழ்ந்து சொக்கநாதர்ஒருவருக்குக் கூலியாளாகி எழுந்தருளினரோவென்று மிகவுந்தமக்குள்ளே வருத்தப்பட்டு-எ-று. (௫௫)

தம்பெருமையறியாத நம்மிறைவர்தமக்கிரங்கிக்
கம்பிதமுங்கண்ணீருமவரக்கவறசிறிறும்போதில்
வெம்பிறவிதொலைத்தார்முன்றூரியர்கள்விரைந்தோடி
யும்பர்பிரானறிருவிளையாட்டெல்லாமங்குரைத்தார்கள்.

(இ-ள்.) தம்முடைய பெருமையிவ்வளவென்று அறியாத தம துகடவுளாகிய சொக்கநாதருக்கு இரக்கமுற்று நடுக்கமுங் கண்ணீரும் உண்டாகக் கவலையடைந்தபொழுதிலே வெய்யபிறவியைத தொலைத்த மாணிக்கவாசகர்முன்னே தூதர்கள்சீக்கிரத்திலோடிவந்து தேவர்களுக்கிறைவராகிய கடவுளுடைய திருவிளையாட்டெல லாஞ்சொன்னார்கள்-எ-று. (௫௬)

வேட்டுநதும்பெருங்காதல்விஞ்சகரித்தன்மையெலாங்
கேட்டுமநநதளர்ந்துமிகககிளர்ந்துவிழிப்புனல்பொங்க
வாட்டிகழுஞ்சடையண்ணன்மண்சுமந்தவிடங்கொடுபோ
காட்டுமெனமொழிந்தவரோடவ்விடமேர்கடிதெய்தி [யக

(இ-ள்.) மிகுந்த ஆசையால்விரும்புகின்ற மாணிக்கவாசகரானவர் இந்தச்செய்திகளனைத்தையுங் கேள்விப்பட்டு மனந்தளர்ந்து மிகவும் கண்களிலேநீர்பெருகச் சிவந்த வொளியினாற் பிரகாசிக்கின்ற சடாபாரத்தையுடைய சொக்கநாதர் மண்சுமந்த இடத்தைக் கொண்டுபோய்க் காணபியுங்களென்று சொல்லி அவர்களுடனே அவ்விடத்திலே நேராகச்சீக்கிரத்திற்போய்-எ-று. (௫௭)

அழுங்கியரும்பெருநாகிகடிபோனும்விழாம [று
லெழுந்தருளும்பெரியோனேயெங்கனுளாயென்றென்
தொழுங்கரமுங்கண்ணீருந்துளங்கியமெய்ப்புளகமுமாய்
விழுந்துபுரண்டிவ்வாறுபுலம்பினார்மெய்யன்பாளர்.

(இ-ள்.) அடியேன் வருத்தப்பட்டுக் கொடுமையை யுடைய பெரியநரகத்தில் வீழாமற்செய்யஎழுந்தருளியகடவுளே நீயெவ்விடத்திலிருக்கின்றாய் எவ்விடத்திலிருக்கின்றாயென்றுதொழுகின்ற கைகளுங் கண்ணீரும் நடுங்குகின்ற மெய்யிற்புளகமுமுடையவராய்க் கீழேவிழுந்துபுரண்டு இந்தப்பிரகாரம் புலம்பினார் மெய்யன்பையுடைய மாணிக்கவாசகர்-எ-று. (ருஅ)

நீறுபடும்பொன்மேனிநின்மலனேநெடுங்கங்கை
யாறுபடுஞ்சடைமுடியாயடியவர்கட்கெளியானே
மாறுபடும்புரமெரித்தாய்மாறுபடும்போதுடலிற்
கூறுபடுஞ்சிவஞானக்கொம்பினுளங்குழையாதோ

(இ-ள்.) திருநீற்றையணிந்த பொன்போன்ற திருமேனியையுடைய நின்மலனே, நெடியகங்காநதியைத்தரித்த சடாமுடியையுடையவனே, அடியவர்கட்கெளியவனே, மாறுபட்ட திரிபுரத்தையெரித்தவனே, மாறானதுபடும்போது உன்னுடைய இடப்பாகத்திலிருக்கின்ற சிவஞானமே வடிவாகிய உமாதேவியினது மனங்குழையாதோவென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (ருகூ)

கொங்கையுரன்மணிமார்பிற்குறியிடுமவ்விறலுடைய
மங்கையாள்பெருமானைமண்சுமக்கநினைத்தாளோ
கங்கையாளலைக்கரத்தாற்கரைத்திலளோபுள்ளுருவாம்
பங்கயாசனனறியாப்பணிமுடியெனறறியாரோ.

(இ-ள்.) தனபாரங்களாலே அழகியமார்பிலே தழும்புசெய்த வீறுப்பையுடைய காமாட்சியானவள் கடவுளைமண்சுமக்கும்படி நினைத்தாளோ, கங்கையானவள் அலையாகிய கையினாலே அக்கம்பனைக் கரைக்கவில்லையோ, அன்னவடிவாகிய தாமரைமலரில்

ருக்கின்ற பிரமனாலுமறியப்படாத சருப்பத்தையணிந்த சிரசென்றறியாளோ வென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௰)

பிரமனுடன்றிருமாலும்பிறப்பகலப்பல்காலும்
பரிவினுடன்றருமலரோ பாதரிமேற்சிலையோ
புரிசுருள்செஞ்சடையோநற்புதுமதியோவாயிரவாய்
வரியரவின்பலபடமோமண்சுமக்குஞ்சுமடாடு.

(இ-ள்.) பிரமதேவனுடனே மஹாவிஷ்ணுவும் தம்முடைய பிறவி நீங்கப்பலகாலும் அன்பினுடனே சாத்துகின்றமலரோ, அல்லது அடியவர்கள் சாத்துகின்ற பச்சிலையோ, முறுக்கையுடைய சிவந்தசடையோ நல்லபுதுமையையுடைய மதியோ, ஆயிரமவாயுள்ள நெடியசருப்பத்தினுடைய அனேகமபடங்களோ, நீயெடுத்த மணலைச்சுமக்குஞ் சுமடாடு-எ-று. (௬௧)

கலைபயிற்புகழ்வையைக்கரைதிருவம்பலமாக
வலைமெறியும்புனலோசையந்தரதுந்துமியாகத்
தலைவனடங்கண்டார்களரவமொடுநவமுநியுங்
கொலைதவிர்ந்தபுலியென்றுங்குலமுநியுமானாரோ.

(இ-ள்.) தமிழ்ப்பாடலின்றன்மையையறிந்தகீர்த்தியையுடைய வைகைநதிக்கரையே அழகியவெள்ளியம்பலமாக அலையைவீசுகின்ற நீரினுடையசத்தமே தேவதுந்துமியாகக் கடவுளுடைய திருநடத்தைக்கண்டவர்கள் பாம்படியையுடைய தவமுநியாகிய பதஞ்சலியுங் கொலைதவிர்ந்தபுலியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவியாக்கிர பாதருமானாரோ-எ-று. (௬௨)

[illegible]நிறங்கிளர்[illegible]விழிக்கேறனிகராகக்
[illegible]நிறைந்த[illegible]லைபொற்செண்டேறத்

தேனேறுமலர்க்கொன்றைச் சிரமுடிமேன் மண்சுமந்த
யானேறுஞ்சிவபதமுமெனக்கேறவின்றே.

(இ-ள்.) மீனேறிய கொடியையுடைய பாண்டியனது கண்ணுக்கு நேராகவிரைந்து நடக்கின்ற குதிரையேறுவதுகண்டு அவன்கொடுக்கும் பீதாம்பரமானது குதிரைச்சவுக்கிலேறத் தேனேறியமலர்ந்தகொன்றை மாலிகையைத்தரித்த அழகிய சிரசின்மேல் மண்கூடையேற விருந்தபடியால் யானேறுகின்ற சிவபதமும்எனக்கேற இனிமையில்லாததாயிருந்ததென்றார் மாணிக்கவாசகர் எ-று.

பொன்னுலகத்துள்ளோரும்புரந்தரனுந்திருமாலு
மன்னுமறைக்குரியோனும்வழியடிமைத்தொழில்செய்ய
வென்னைதனக்காளாகியணிவையையடைத்தடியுண் [னே
டென்னையாட்பணிகொள்ள விசைந்தனையோவிறையோ

(இ-ள்.) தெய்வலோகத்திலுள்ள தேவர்களும், தேவேந்திரனும், மஹாவிஷ்ணுவும், நிலைபெற்ற தவத்திற்குரிய பிரமதேவனும், வழிவழியாக அடிமைத்தொழில்செய்யப் பிட்டுவாணிச்சியம்மைக்குக் கூலியாளாய் அழகிய வைகைநதியை அடைத்து அடிபட்டு என்னைக் கிருபையையுடைய பணிகொள்ளச் சம்மதித்தனையோ, இறைவனேயென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௪)

கட்டுமரைத்துணிச்சீரைக்கச்சையுமத்திருத்தோளிற்
கொட்டுமுடித்தலைமீதுகவித்தபொற்கூடையுமாய்ப்
பிட்டுநிறைவமுடையாள்பின்புவருந்திருக்கோல
மிட்டமுறத்தொழும்படிநான்பணிடிமேனிறையோனே.

(இ-ள்.) அரையிற்கட்டுகின்ற துண்டாய்க்கிழித்த துணியுங்கச்சையும் அந்தத்திருத்தோளிலேமண்வெட்டியும், சிரசின்மீதிலே கவித்துக்கொள்ளுகின்ற ஒருகூடையுமாய்ப் பிட்டினைத்தருகின்ற

நல்லதவமுடைய அமமையினது பின்னேவருகின்ற அழகியகோலத்தை அனபுபொருந்தத் தொழும்படி நாணகாணவிலலை யிறைவனேயென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௫)

தாருநஞ்சடைமுடியாய்த் தவமபெருகமுயன்றவர்க
ளீருநமபுகழ்வையைநெடுங்கரைமேனின்றாரோ
சீருநங்கனகமுடித்தென்னவனேமதுரையெனும்
பெரூரிலிருப்பவரோபிட்டமுதிட்டருள்வாளோ.

(இ-ள்.) கொன்றைமாலிகையைத் தரித்த சடாமுடியையுடைய சொக்கநாதரே, நீர் கூலியாளாய்வந்த திருவுருவைக்காண மிகவுந் தவத்தைமுயன்றுசெய்தவர்கள் வெள்ளமோடுகின்ற கீர்த்தி மிகுந்தவையைநதிக் கரையின்மேல் நின்றவர்களோ, சிறப்பு மிகுந்த பொற்கிரீடத்தையுடைய பாண்டியராசனே, பெரியமதுரைமாநகரி லிருப்பவரோ, பிட்டமுதிட்டருளிய செம்மனச்செல்வியோவென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௬)

பொன்மௌலிநதலைமீதுபுண்ணியர்மண்சுமந்தேறுங்
கொன்மலியுங்கோலறையுங குளிர்வையைப்பேராறுங்
கன்மமெனும்பகைபோகக்கண்ணுதல்வெம்பரியேறுந்
தென்மதுரைமூதூருமல்லவோசிவலோகம்.

(இ-ள்.) பொன்னினாற் செய்த கிரீடத்தையணிந்த சிரசின் மேலே புண்ணியராகிய சொக்கநாதர் மண்ணைச் சுமந்துக்கொண், டேறுகின்ற பெருமைமிகுந்த கோலினாலளந்தபங்கு நிலமும், குளிர்ச்சிபொருந்திய வையையென்னும் பெயரையுடைய நதியும் கன்மமலமென்னும் பகையானது ஓடிப்போகப் பரமசிவன்வெவ்விய குதிரையிலேறுகின்ற அழகியமதுரைமா நகரமும், அல்லவோசிவலோகம்-எ-று. (௬௭)

இன்னவகையன்புடையாரிரங்கினராயிடைவையைத்
துன்னுதிரைப்பேராறுந்தொலையவடிந்ததுபின்னர்த்
தென்னவனுஞ்சிவன்செயலாமெனத்தெளிந்துவாதவூர்
மன்னவர்தமபால்வந்துவணங்கியிதுகூறுவான்.

(இ-ள்.) அவ்விடத்திலே இந்தப்பிரகாரம் அன்பையுடைய மாணிக்கவாசகர் இரக்கமுற்றிருந்தனர், நெருங்கிய அலைகளையுடைய பெரியவைவையைநதியுஞ் சீக்கிரத்தில்வடிந்தது, பின்பு பாண்டியராஜனும் இவையெல்லாஞ் சிவன்செயலாமென்று தெளிந்து திருவாதவூரர்க்கரசனாகிய மாணிக்கவாசகரிடத்தில்வந்து வணக்கஞ்செய்து இதனைச்சொல்லுவான்-எ-று. (௯அ)

அந்தரர்தம்பதியினிழிந்தருள்புனைமாத்தியர்குலத்து
வந்தருளித்தமியேற்குமந்திரியாய்மகிழ்வெய்தி
யெந்தைவயப்பரியேறல்காட்டியெனக்கொழியாத
பந்தமறத்திருவுள்ளம்பற்றினைநற்றவத்தோனே.

(இ-ள்.) தேவர்கள் வசிக்கின்ற பொன்னகரத்தினின் றிழிந்து கிருபையைத்தரித்த ஆமாத்தியர்குலத்திலேவந்து திருவவதாரஞ்செய்து தமியேனாகிய அடியேனுக்கும் மந்திரியாகி மகாமகிழ்ச்சியடைந்து எமதுபிதாவாகிய சொக்கநாதர் வெற்றியையுடைய குதிரையேறிவருவதை யெனக்குக்காட்டி எப்போதும் நீங்காதபாசத்தளையறும்படி திருவுளம்பற்றினீர் நல்லதவத்தையுடைய மாணிக்கவாசகரேயென்றான் பாண்டியராஜன்-எ-று. (௯௧)

கருமாளத்திருமேனிகாட்டினனென்றுணராமற், றிருமாலும்பரவரியான்றேவருடன்பரியேறி, வருமாயச்சூழலினாலழக்காடையண்டர்தொழும், பெருமானுக்களித்தேனென் பிழைசெய்தேன்பெரியோனே.

(இ-ள்.) என்னுடைய பிறவிமாளத் திருமேனிகொண்டு காண்பித்தாரொன்றறிந்து கொள்ளாமல மகாவிஷ்ணுவாலும் வணங்குதற்கரிய சொக்கநாதர் தேவர்களுடனே குதிரையேறிக்கொண்டுவர்த அந்தமானையினுடையகுழுகையினாலே அழுக்குவஸ்திரத்தைத் தேவர்பணிகின்ற கடவுளுக்குககொடுத்தேன் என்னபிழையினைச்செய்தேனபெரியோனேயென்றார் பாண்டியராஜன்-எ-று.

அப்பணிசெஞ்சடையானைப் பசுபரிமேலாளாகக், மெய்
ப்பொருளென்றுணராமல் வெய்யவினைப்பொருள்வேண்டிச்,
செப்பருமிக்கொடுங்கன்மைசெய்வித்தேன்சிறுமையுளே, னெ
ப்பிழையும்பொறுத்தருள்வாய்நரகிற்புகாமல்.

(இ-ள்.) கங்கையைத்தரித்த சிவந்தசடையையுடைய கடவுளை அருமையையுடைய குதிரைக்காரராக்கு மும்மையுண்மைப் பொருளென்று தெரிந்துகொள்ளாமல் தீவினைக்குக் காரணமாகிய திரவியததைவிரும்பிச் சொலலுதற்கரிய கொடுமை செய்வித்தேன் சிறுமையுள்ளவனாகிய என்னுடைய எந்தபபிழையும் பொறுத்தருள்வாய் அடியேன நரகத்திற்புகாமல்-எ-று. (எ௧)

நாகமணிந்தபிரானறங்கமிகுமபரியேறிப்
பூநாறுஞ்சடைமேன்மண்சுமந்தபுகழ்போதாதோ
யானுநின்பணியேசெய்தொழுகவிவ்வுலகந்
தானாளவேண்டுமெனவென்றுரைத்தான்றமிழ்மாறன்

(இ-ள்.) பரிசுத்தம் பொருந்திய சுருப்பந்தையணிந்த சொக்கநாதரானவர் உயர்வுமிகுந்த குதிரையின்மேலேறிப் பூமணம்வசிக்கிற சடாபாரத்தின்மேல மண்சுமந்த கீர்த்திபோதாதோ, நான நான்தோறும் உம்முடைய பணிவிடையைசெய்துவர நீர்இனி இவ்வுலகததை யாளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான் தமிழைவளர்க்கின்ற பாண்டியராஜன்-எ-று. (எ௨)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வன்றிறன் மன்னனிவ்வா றுரைத்தலும்வாதவூரர்
தென்றிசைபுரக்குநீதித்தென்னவனறன்னைநோக்கிப்
பின்றிகழ்சடையோன் மன்னு பெருந்துறைநகரிலேகை
வின்றெனைவிடுப்பதேதமற்றிவ்வுலகளிப்பதென்றார்.

(இ-ள்.) வலியசௌரியத்தையுடைய பாண்டியராசன் இந்தப்பிரகாரஞ் சொன்னமாத்திரத்திலே திருவாதவூரர் தென்றிசையை இரக்ஷிக்கின்ற நீதியையுடைய அவ்வரசனைப்பார்த்துப் பின்னே பிரகாசிக்கின்ற சடையையுடைய கடவுள் நிலைபெற்றிருக்கின்ற திருப்பெருந்துறைக்குப் போகும்படி இன்று என்னை யனுப்புவதே எனக்கு இந்தவுலகத்தை யாளும்படிக்குக் கொடுப்பதென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௭௩)

தென்புலத்தலைவன்றானுஞ்சிந்தைநயிந்தொழுந்துமுன்னோ
னன்பருக்கரசர்வாழ்விலாசையிங்குளதோவென்று
மென்பதத்திறைஞ்சியையாவேண்டியசெய்கவென்று
தன்புகழ்நகூடனமூதூர்புகுந்தனன்றானைசூழ

(இ-ள்.) தென்றிசைமன்னனாகிய பாண்டியனும்அப்படிசொல்லக்கேட்டு மநதிலேநொந்துக்கொண்டு முன்னோனாகிய சிவனுடைய அடியாருக்கு இராசசம்பத்திலே ஆசையுண்டோவென்று சொல்லி மாணிக்கவாசகருடையமிருதுவாகிய பாதத்திலேவணங்கி ஐயரே மநதுக்குவேண்டியபடி செய்யக்கடவீரென்று செலவு கொடுத்துத் தன்னுடைய கீர்த்திமிகுந்த மதுராபுரியிற் புகுந்தான் சேனைகள்சூழ-எ-று. (௭௪)

சற்றவத்தொழில்செய்யாததானைமன்போனபின்ன
ரற்றவர்க்குற்றசோதியருட்பெருவாழ்வுவேண்டிக்

கொற்றவற்குற்றகோலங்குறையெனநீத்துமேலா
நற்றவக்கோலங்கொண்டார்நம்பருககள் புமிககார்.

(இ-ள்.) சற்றாகிலும் அவந்தொழிலைச் செய்யாத சேனைகளை யுடைய பாண்டியராஜன் போனபின்பு ஆசையற்றவர்களுக்கு அன்புடனிரக்ஷிக்குங் கடவுளுடையபேரின்பவாழ்வைவிரும்பி அவ்வரசனுக்காகக் கொண்டிருந்த வேடத்தைக் குறைவென்று நீக்கி மேலாகிய நல்லதவவேடங்கொண்டார் பரமசிவனுக் கன்புமிகுந்த மாணிக்கவாசகர்-எ-று. (௭௩)

அந்தணைபாலவாயிலண்ணலைவணங்கியந்த
மைந்திகழ்சோலைநீடுமதுரையம்பதியைநீங்கி
வித்தகர்தமையையாண்டமேனிகண்டிறைஞ்சவேண்டும்
பித்தனர்கடிதுசென்றார்பெருந்துறைபொருந்தவெண்ணி.

(இ-ள்.) அந்தணும்மதுரையிலிருக்குஞ் சொக்கநாதரை வணங்கி மேகங்கள்தவழ்கின்ற பிரகாசமிருந்த சோலைநீடிய அந்தமதுரைமாநகரைவிட்டுக் கடவுள் தம்மையாண்ட திருமேனியைக்கண்டு வணங்கவேண்டுமென்று திருப்பெருந்துறைக்குப் போகநினைத்துப் பித்தங்கொண்டவராய்ச் சீக்கிரத்திற்போனார் மாணிக்கவாசகர்-எ-று. (௭௪)

மிடைகெடவைத்தபாதவித்தகருறைநோக்கி
நடையிடுமெல்லைதன்னினன்மகவிரைவுங்காற்றுந்
தடைபடுகன்றைநாடுங்கபிலையுந்தம்மிசின்று
மடையினையுடைக்குநீருமாயினர்வாதவூரர்.

(இ-ள்.) அஞ்ஞானம் நீங்கத் திருவடிவைத்த கடவுளுடைய திருப்பெருந்துறையைப்பார்த்து நடைகொள்ளுஞ் சமயத்தில் மனோவேகமும் வாயுவேகமும்: தடைபட்டிருக்கின்ற இளங்கன்றை

நாடியோடுங் கபிலைப்பசுவும் நிறைந்துநின்று மடையையுடைக்கும் நீரும்போலாயினர் திருவாதவூரர்-எ-று. (எஎ)

கண்ணுழையாதகானும்பதிகளுங்கடிதுநீங்கி
யெண்ணருமுனிவர்மேவுமெழிற்பெருந்துறையிலெய்திப்
புண்ணியவினத்தர்சூழமுன்புபோலிருந்தபோதில் [ர்.
விண்ணவரதிபன்பொற்றாள்வீழ்ந்துதாழ்ந்துசொல்வா

(இ-ள்.) கண்களாலும் நுழையப்படாதகாடுகளும் ஊர்களுஞ் சீக்கிரத்திலே கடந்துபோய் அளவற்ற முனிவர்கள்வசிக்கின்ற அழகுநிறைந்ததிருப்பெருந் துறைக்குப்போய்ப்புண்ணியத்தை யுடைய முனிவர்கள்சூழ முன்புபோலிருந்தபோதில் தேவர்களுக்கதிபனாகிய பரமசிவனுடையதிருவடியின்மேல்வீழ்ந்துவணங்கி யிதைச்சொல்வார் மாணிக்கவாசகர்-எ-று. (எஅ)

தீண்டுதற்கரியமார்பிற்சேயிழைதனத்தினாலு
மீண்டொருமாற்றினாலுமெய்தியதழும்புபோற்றி
வேண்டியவடிவமாகிவெம்பரிமேற்கொண்டெம்மை
யாண்டருள்செய்யவந்தவண்ணலேபோற்றிபோற்றி.

(இ-ள்.) முன்னாலே சத்தபுரியிலும் விசேடமாகிய காஞ்சிமாநகரத்தில் கம்பையாற்றிற் காமாட்சிபூசைசெய்யும்போது அந்தப் பூசையின் உறுதியைச்சோதிக்க அந்நதியிலே சருவதீர்த்தங்களையும் வரச்செய்து அது ஆகாயமளாவிவருகிறபோது சிவபூசைக்கு விரோதமாய் வருகிறதென்றுபயந்து தழுவிக்கொள்ளுதலால் ஒருவராலுந் தீண்டுதற்கரியமார்பிலே அந்தக்காமாட்சியினுடைய தனபாரங்களாலும் இங்கே ஒருமாற்றினாலும் அடைந்த தழும்பையுடையவனே போற்றி வேண்டியவடிவங்கொள்பவனாகிய வெவ்விய குதிரையின்மே லேறிக்கொண்டு எங்களை அடிமைகொண்டு

அருள்செய்யவந்தஐயனே போற்றிபோற்றியென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (எக)

அண்டருக்கரியாய்போற்றியடியவர்க்கெளியாய்போற்றி
வண்டமிழ்ப்பாண்டிநாடுவாழமண்சுமந்தாய்போற்றி
கண்டனக்கினியமேனிகாட்டியென்சென்னிமீது
முண்டகத்திருத்தாளைவைத்தமுத்தனேபோற்றிபோற்றி

(இ-ள்.) தேவர்களுக்கரியவனே போற்றி அடியவர்களுக்கெளியவனேபோற்றி, வளத்தையுடைய தமிழ்மிகுந்த பாண்டியதேசம் வாழும்படி மணசுமந்தவனேபோற்றி, கண்ணுக்கு இனிய திருவுருவைக்காட்டி என்சிரசின்மேலே தாமரைமலாபோன்ற திருவடிகளைவைத்த முத்தனேபோற்றிபோற்றி யெனறார் மாணிக்கவாசகர்-எ-று. (அ௰)

போற்றியென்றின்னவாறுபுகன்றவர்முடிமேற்செங்கை
யேற்றியங்கினியகூறியெழுகெனவெழுந்தபின்னர்
நீற்றுறையுபுனைந்துஞானநிறையருட்பார்வைநல்கி
வீற்றிருந்தனபர்கூட்டம்விளங்கினார்களங்கமில்லார்.

(இ-ள்.) போற்றியென்று இந்தப்பிரகாரந்துதித்த மாணிக்கவாசகரது சிரசின்மேலே சிவந்தகையைவைத்து இன்சொற்சொலலி எழுந்திருவென்றுசொல்ல எழுந்தபின்பு விபூதியுந்தரித்து அறிவுநிறைந்த கிருபாநோக்கஞ்செய்து வீற்றிருந்து அன்பையுடைய அடியார்கள் கூட்டத்தில் விளங்கியிருந்தார்களங்கரகிதராகிய கடவுள்-எ-று. (அக)

அந்தமுமுதலுமில்லாவடியவர்தம்மைநாடி
வந்துளகருமமெல்லாமுடித்தனமகிழ்ச்சிகூர

நந்திகழ்வடிவங்காணவேண்டிநற்கயிலையுள்ளார்
சிந்தனைசெய்தார்வலலேயாண்மைநாஞ்சேறல்வேண்டும்.

(இ-ள்.) முடிவுமுதலுமில்லாத அடியவர்களைக் குறித்துவந்த காரியமெல்லாம் முடித்தனம் மகிழ்ச்சியுண்டாக நமமுடைய ஒளியையுடைய திருவுருவைத்தெரிசிக்கவேண்டுமென்று நல்ல கயிலாயகிரியி விருக்கின்றவர்கள் நினைவுகொண்டார்கள் சீக்கிரத்தில் அவ்விடத்திலே நாம்போகவேண்டுமென்றார் பரமசிவன்-எ-று. ()

வாழ்ந்திருமின்பின்யாமுமேகுவமென்னவந்து
சூழ்ந்தருளருவாமன்பர்தோத்திரம்பலவுஞ்சொல்லித்
தாழ்ந்தெதிரிறைஞ்சியையாதரிப்பரிதென்னமண்மேல்
வீழ்ந்தயர்ந்தழுதாரெம்மைவிடுதியோவென்றுநொந்தார்.

(இ-ள்.) நீங்களிங்கே இன்பமுடனே வாழ்ந்துகொண்டிருங்கோள் நாம்செல்குவோமென்று சொல்லவே அப்போதுவந்து சுற்றிக்கொண்டு கிருபாவடிவத்தையுடைய அடியவர்கள் அனேகந்துதிகள்சொல்லி வணங்கி ஐயமோ இனியாங்கள் தரிக்கிறது அருமையென்று பூமியில்வீழ்ந்து ஆயாசங்கொண்டு அழுதனர் எங்களை விட்டுவிடுகின்றையோவென்று நொந்தார்கள்-எ-று. (அ௩

பரிந்தழுமடியார்தம்மேற்பரமனுமன்புபூண்டு
வருந்துவதொழிமினிந்தமணமலிகுருந்தகீழ்ற்
பொருந்தியதெய்வபீடம்பொலிவொடுகுயிற்றிமீதே
திருந்தியமறையுந்தேடுநம்பதமாகச்செய்து.

(இ-ள்.) அன்புகொண்டு அழுகின்ற அடியார்மேற் பரமசிவனும் அன்புவைத்து வருத்தப்படுவதை நீக்குங்கள் இந்தவாசனைநிறைந்த குருந்தநிழலிலேபொருந்திய தெய்வபீடமொன்று பிரகாசத்து

டனேசெய்து அதன்மேல்திருந்தமாகிய வேதங்களுந் தேடுகின்ற நம்முடைய திருவடிகளைச்செய்து-எ-று. (அச)

தாங்கருமரந்தை நீங்கியாமெனுந் தன்மைகண்டு
நீங்கருமன்பினாலே நித்தலுநயந்திறைஞ்சி
ஈங்குநன்மனத் தெல்லாமமர்ந்திருமொருநாளிந்தத்
தீங்ககல்பொய்கையூடே செழுந்தழல்வந்துதோன்றும்.

(இ-ள்.) தாங்குதற்கரிய துன்பம்நீங்கி நாமென்கிற தன்மையையறிந்து நீங்குதற்கரிய அன்பினாலே நாள்தோறும்மகிழ்ந்து வணங்கி இவ்விடத்திலே கிருபையிருந்த மநதையுடைய அடியார்களெல்லாம் விரும்பியிருக்கோள், அப்படியிருக்குநாளில் ஒருநாள் இந்தத்தீங்கில்லாத பொய்கையினிடத்திலே செழுமையுள்ள அக்கினிவந்து தோன்றும்-எ-று. (அரு)

எழுந்தழல்விளைந்தபோதில் யாவருந்தடத்தினூடு
விழுந்துபின் னெய்திநம்பால் விடுத்துங்கவற்சியென்று
தொழுந்தவம்புரியுமன்பர் சூழ்ந்துபின்செல்லமெல்லச்
செழுந்திசழ்கயிலைநாடிச் சென்றனாதில்லைநாதர்.

(இ-ள்.) அக்கினியெழுந்து விளைந்தமாத்திரத்திலே எல்லாருந்தடாகத்தினிடத்திலே விழுந்துபின்பு நம்மிடத்திலேவந்து உங்களுடைய கவலையைவிடுகோளென்று வணங்கத்தக்க தவத்தைச் செய்யும் அன்பர்கள் சூழ்ந்துகொண்டு பின்னேவரமெள்ள செழுமையுள்ள பிரகாசத்தையுடைய கயிலாயத்தைநாடி எழுந்தருளினார் சிதம்பரத்திலிருக்கின்ற சபாநாதர்-எ-று. (அசா)

நீங்கருமன்பரெல்லாநில்லுமினென்றுகூற
வாங்கவரிறைஞ்சியெங்ஙனேயினிக் காண்பதென்று

தாங்கருமயக்கமெய்தித்தாயகன்மகவுபோலப்
பூங்கழல்வணங்கிநின்ருர்போயினர்மாயைவல்லார்.

(இ-ள்.) நீங்குதற்கரிய அன்பர்களெவரும் நில்லுங்கோளென்று சொல்ல அங்கே அவர்கள்வணங்கி இனிஎந்தநாளிலே ஐயரே, உம்மைக்காணபதென்று தாங்குதற்கரிய மயக்கமடைந்துதாயைநீங்கிய பிள்ளைகள்போல் தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கிநின்ருர்கள் மாயையிலேவல்ல பரமசிவன் எழுந்தருளிஞர்-எ-று. (அஎ)

இங்கிவர்நின்றபின்னுமின்னருள்வாதவூரர்
தங்கிளைவாழவந்ததலைவர்பின்சென்றபோதிற்
பொங்கிளமுலையாள்பாகர்புரிந்தவர்வரவுகாணு
வங்கொருகொன்றைநீழலிருந்தனரகந்தைநீக்க.

(இ-ள்.) இங்கே அடியார்கள் நின்றபின்னும் இனிய அருளையுடைய திருவாதவூரரானவர் தமதுசுத்தமெல்லாம் வாழும்படி குருமூர்த்தமா யெழுந்தருளி கடவுளுக்குப்பின்னே போனபோது பொலிவுபெற்ற இளமையுள்ள தனங்களையுடைய உமாதேவியினுடைய பாகராகிய அக்கடவுள் அன்புவைத்து இவர்வருதலைப்பார்த்து அங்கேயொருகொன்றைவிருட்ச நிழலிலேயிருந்தார் துன்பம்நீக்கும்படிக்கு-எ-று. (அஅ)

தன்புடைக்கவடுகொண்டோர்தடங்கிரிநிரந்தமாலைப்,பொன்படைத்தனையகொன்றைப் பொலிவுற விருந்தபோதின்,
மென்பதத்திறைஞ்சிக்கண்ணீர்விழவிழத்தொழுதுநிற்கு, மன்பரைப்பரிவாலையருகுவைத்தருளிச்செய்தார்.

(இ-ள்.) தன்பக்கத்திலே கிளைசளைக்கொண்டொருமலைவரிசை யாகிய பொன்மாலையைக் கொண்டிருப்பதையொத்த பூங்கொத்துகளுடனே கூடிக்கொன்றைநிழலிலே பொலிவுபொருந்த விருந்தபோதில் மெலலிய திருவடிகளிலேவணங்கிக் கணணீர்விழவிழுந்தொழுது நிற்கின்ற அன்பராகிய மாணிக்கவாசகரைப் பத்தியினாலே பரமசிவன் பக்கத்திலேவைத்து அருளிச்செய்தார்-எ-று.()

அவ்வியமிலலார்தங்கட்கருடாமுன்னுமன்னுந்
திவ்வியாலமாமிந்தச்சிறந்தாளகுருந்தநீழ
லெவ்வுலகெங்குமுள்ளேமாயினுமிங்குளோர்கள்
வெவ்வினையகற்றியாளவேண்டியீண்டுறைவோமென்றும்

(இ-ள்.) மநக்கோட்ட மில்லாதவர்க்கு கிருபைசெய்ய முன்னேநாமடைந்த திவ்வியக்ஷேத்திரமாகிய சிறப்புப்பெற்றுள்ள இந்தக் குருந்தநிழலிலே எந்தலோகத்திலும் எங்குமிருந்தேயாயினும் இங்கேயிருக்கின்றவர்களுடைய தீவினையை நீக்கி ஆளும்பொருட்டு இந்தத்தலத்திலே வசிப்போம்-எ-று. (௯௰)

பொங்கொளிச்சுழினைபூடபுலமபிசைக்குறியேயான
மங்கலச்சங்கமல்லால்வாய்ந்தபல்லியங்களியாவு
மிங்கெமக்காகாவோசையடங்கிடமாதலானு
நங்குலங்கவுரிகாணுநடனவிலாதலாலும்.

(இ-ள்.) மிகுந்த ஒளியையுடைய சுழிமுனை நாடியிடத்தில் சத்திக்கின்ற அடையாளமான மங்களகரத்தையுடைய சங்கவாத்தியமல்லாமல் மற்றவாத்தியங்களெல்லாம் இந்தத்தலந்திலே நமக்காகாவாம் அதேனெனில், சத்தநீங்கிய இடமாகையினாலும், நமது பாகத்திலிருக்கும் பார்வதிகாண நடனஞ்செய்யு மிடமாகையினாலும்-எ-று. (௯௧)

ஒழுங்குடனின்னவாறிங்குணாநதுநற்குருந்தநீழற்
செழுந்தவக்குழுவினீயுநங்கழலசேவைசெய்தே
செழுங்கனன்மடுவிறகாணிலயாவருமதனிற்சென்று
விழுமபொழுதுடன்வீழாமலிவ்வுழைவினாவினீங்கி.

(இ-ள்.) ஒழுங்காக இந்தப்பிரகாரம் அறிந்து நல்லகுருந்தமரநிழலிலே செழுமையுள்ள தபோதனர் கூட்டத்துடனே நீயும் நமமுடையபாதத்திற் சேவைசெய்து எழுகின்ற அக்கினியை மடுவிற்கண்டால் யாவரும அதிற்போய்விழுநதபோது உடனே வீழாமல் இந்த இடத்திலேயிருந்து சீக்கிரத்திலநீங்கி-எ-று. (௯௨)

உத்தரகோசமங்கையென்னுநமூரிற்சென்று
சித்தியங்கெலையுமெய்தித்தெய்விகலிங்கமேனி
வைத்தநம்பதிகடமயிலிவையிவைவணங்கிலங்கே
யித்திகழ்வடிவேகாணடிகாட்டுறுமெனநவின்றே.

(இ-ள்.) உத்தரகோசமங்கையென்னும் நம்முடைய தலத்துக்குப்போய் அஷ்டமாசித்திகளையும் அடைந்து தெய்வீகமாகிய இலிங்கவடிவாயிருக்கின்ற நம்முடைய தலங்களிலே இந்தத்தலங்களைவணங்கினல் அங்கங்கும் இந்தப்பிரகாசமுள்ள வடிவேகாண்பாய் அப்படியே காட்டுவோமென்றுசொல்லி-எ-று. (௯௩)

இந்நகர்வணங்கிநீங்கியெழுங்கழுக்குன்றமென்னு
மந்நெடும்பதியிறைஞ்சியாண்டுநின்றீண்டுபோந்து
பொன்னினமபலத்திலெய்திப்புத்தனைவாதிலவென்ற
பின்னரொம்பதமேயானபெரும்பதம்பெறுதியென்றார்.

(இ-ள்.) இந்தத்தலங்களை வணங்கி நீங்கிஉயர்ந்த திருக்கழுக்குன்றமென்னும் அந்தநெடிய தலத்தையும் வணங்கி அவ்விடத்தி

விருந்து இங்கேவந்து சிதம்பரத்திற்குப்போய்ப் புத்தரைவாதில் வென்றபின்பு எம்முடைய பதவியானசாயுச்சியத்தைப் பெறுவா யென்றார் பரமசிவன்-எ-று. (௬௪)

மன்னுமன்புடையார்தெய்வவாசகம்புகலுமாறும்
பன்னகப்பூணோன்மேவும்பதிபலவணங்குமாறும்
பொன்னினம்பலத்திலெய்திப்புத்தரைவென்றுமன்றன்
றன்னருங்கமலபாதஞ்சார்தலும்பகரலுற்றாம.

(இ-ள்.) நிலைபெற்ற அன்பையுடைய மாணிக்கவாசகர் தெய்வத்தன்மையையுடைய திருவாசகஞ் சொல்லியதும, சருப்பாபரணத்தைத்தரித்த பரமசிவனுடைய தலங்களைவணங்கியதும், சிதம்பரத்திற்குப்போய்ப் புத்தரைச்செயித்துச் சபாநாதருடைய திருவடிகளிற் சேர்ந்ததும், சொல்லத்தொடங்கினோம்-எ-று. (௬௫)

மண்சுமந்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம்-௬௪௯.




ஸ்வாமிதரிசனங்கொடுத்தது.

# திருவம்பலச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வரந்தரவிருந்தார்தமமைவாதவூரிறைவர்போற்றிப்
பெருந்துறைநகரிலன்றிப்பிஞ்ஞகர்புலியூர்மன்றிற் [னத்
பொருந்துறுமுத்தியென்று புகன்றதிங்கெவனோவென்
திருந்தியதவத்தாய்கேட்டியென்றவர்செப்பலுற்றார்.

(இ-ள்.) தமக்கு வரங்கொடுக்கவிருந்த கடவுளைத் திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் வணங்கிப் பரமசிவனே திருப்பெருந்துறையிலில்லாமல் புண்டரீகபுரமென்னும் பெயரினையுடைய சிதம்பரத்திற் பொருந்துதல் பரமமுத்தியென்று அருளிச்செய்தது என்னவென்று விண்ணப்பஞ்செய்ய திருத்தமாகியதவத்தையுடையவனே நீகேட்பாயாகவென்று சொல்லத்தொடங்கினார் கடவுள்.

இத்தலத்திடையேகீடமெடுத்துளவிடத்தலன்றி
வைத்துளவிடத்தேயந்தவேட்டுவன்வடிவங்கொள்ளும்
வித்தகவுனக்கிங்கன்பான்மெய்யுணர்வுரைத்தேமேன்மை
பொருந்திடுஞ்சிவானுபூதிமுத்தியம்பலத்திலுண்டாம்.

(இ-ள்.) புழுதனையெடுத்தவிடத்திலல்லாமல் கொண்டுபோய் வைத்தவிடத்திலே குளவிவடிவங்கொள்ளும் அதுபோல உன்னைக்கண்ட இந்தத்தலத்திலே அன்பினாலேயுண்மை அறிவையுபதேசம் பண்ணினோம் மேன்மை பொருந்திய சிவானுபூதியாகிய மோட்சம் சிதம்பரத்திலுண்டாம்-எ-று. (உ)

இடம்படுமுடம்பின்மூலத்தெழுந்தகற்சுழினைநாடி [ருய்
புடன்கிளரொளியேயாகவொளியிலஞ்செழுத்துமொன்

நெடுங்குழலோசையாகிநிலவுமவ்வோசைபோயங்
கடங்கியவிடமேயென்றுமாடுமம்பலமதாகும்

(இ-ள்.) விசாலமாகிய தேகத்திலே மூலாதாரத்தினின்றும் எழுந்த நல்லசுழிமுனைநாடியுடனே நிறைந்த ஒளியாய், அந்தவொளியிலே பஞ்சாக்கரமு மொன்றாய், நெடியகுழலோசையாய்ப் பிரகாசம் பொருந்தி அந்தவோசைநீங்கிய அடங்கியவிடமோ நாடோறும்நாம் ஆடுகின்ற சிதம்பரமாகும்-எ-று. (௧)

எண்டரும்பூதமைந்துமெய்தியநாடிமூன்று
மண்டலமூன்றுமாகியவ்வியபுணர்ப்பினாலே
பிண்டமுமண்டமாகும்பிரமனேயைவராகக்
கண்டவர்நின்றவாறுமிரண்டினுங்காணலாகும்.

(இ-ள்.) எண்ணிக்கையைத்தருகின்ற பிருதுவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயமென்று சொல்லப்பட்ட பூதங்களைந்தும் இடைபிங்கலைசுழிமுனையென்னும நாடிகள்மூன்றும அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம, சந்திரமண்டலம், என்றுமண்டலங்கள் மூன்றும ஆகி நிலைபெற்ற சம்பந்தத்தாலே பிண்டமுமண்டமுமாம் பிரமா-விஷ்ணு - உருத்திரன் - மகேச்சுரன் - சதாசிவனென்று சொல்லுகின்ற ஐந்துவடிவமாகக்கண்டவா நின்றவிதமும் இவ்விரண்டுவிதத்திலுங்காணலாம-எ-று. (௨)

ஆதலாலிந்தவண்டத்தறிவரும்பொருளாயென்றுந்
தீதிலாமூலநாடிற்றிகழ்சிவலிங்கமேனி
மீதிலாமந்தநாதவெளியின்மேலொளிமன்றங்குக்
காதலான்மடவாள்காணக்கருத்துறநிருத்தஞ்செய்வோம்.

(இ-ள்.) ஆகையினாலே இவ்வண்டத்திலே அறிதற்கரிய பொருளாகி ஒன்றுங்குற்றமில்லாத மூலத்தைநாடிப்பார்த்தால், பிரகா

சியாநின்ற சிவலிங்க மேனியாயிருக்கு மேலாகிய அந்தநாதவெளியின்மேல் ஒளியாயிருக்கின்றதுசபை அங்கே ஆகையால் உமாதேவிகாண மகம்பொருந்த நிருத்தஞ்செய்வோம்-எ-று. (௫)

அந்தநன்னடமேதென்னிலைந்தொழினடத்தலாகும
பந்தமதகற்றுமிந்தப்படிவமுமதுவேயாகும
வந்துலகத்தியாருங்காண்பரேலவருவாமுத்தி
தந்தருளளிக்குந்தெய்வத்தலமுமந்தலமேயாகும்.

(இ-ள்.) அந்தநடனம் ஏதென்றால், சிருஷ்டி ஸ்திதி-சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியத்தை நடத்துவதாகும் பாசத்தளையையறுக்கின்ற இந்தவடிவமும் அதுவேயாகும், உலகத்திலேயிருக்கின்றவர்கள் யாவர்வந்துதெரிசித்தாலும் பரமமுத்தியைக்கொடுத்து கிருபையைத் தருகின்ற தெய்வத்தலமும் அந்தச்சிதம்பரமேயாகும்-எ-று. (௬)

தாவரும்பணிலநேமிதரிப்பவர்பிரமனென்போ
ரியாவரும்புலிபாம்பென்றுமிருவரும்புரத்திலுண்டா
மூவருந்தெய்வமூவாயிரவருமுனிவர்தாமுந்
தேவருந்தொழுதுபோற்றுமெல்லையத்தில்லைமூதூர்.

(இ-ள்.) தாவுதற்கரிய சங்குசக்கரந்தரிப்பவராகிய மகாவிஷ்ணுவும் பிரமதேவரும் பதஞ்சலி வியாக்கிரமபாதரும் திரிபுராதிகளும் தெய்வத்தன்மையுள்ள தில்லைமூவாயிரவரும நாற்பத்தெண்ணாயிரமுனிவரும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் போற்றும் எல்லையையுடையது அந்தத்தில்லைமாநகர்-எ-று. (௭)

மற்றினைச்செனியாயென்றுபணிந்தெதிர்வணங்கிநிற்பார்
நெற்றியினீறுசாத்திநிற்றியென்றகலகில்லார்

த்தைத்தருகின்ற சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகள்செய்து வணங்கி அங்கிருந்தார் இருந்தநாளிலே நடந்தகாரியத்தைச் சொல்லத்தொடங்குகிறோம்-எ-று. (௰)

வெண்பிறைமுடித்தவேணிவிண்ணவரன்பிலாத
பண்பினரொனினுந்தனைப்பாடினர்க்கிரங்குமென்றே
யெண்பெறுநமச்சிவாயவாழ்கவென்றெடுத்துநாதன்
வண்பதம்புகழ்ந்துஞானவாசகமபுகலலுற்றார்.

(இ-ள்.) வெள்ளிய மூன்றாம் பிறையைத்தரித்த சடாபாரத்தையுடைய கடவுளானவர் அன்பில்லாதவர்களே யானாலும் தன்னைப்பாடினவர்களிடத்தில் இரக்கஞ்செய்வாரொன்று நினைத்து எல்லோருந்தலைபெற்ற நமச்சிவாயவாழ்கவென்றெடுத்து நாதனாகிய கடவுளது வளத்தையுடைய திருவடியைப்புகழ்ந்து ஞானவாசகமாகிய திருவாசகஞ்சொல்லத தொடஙகினார்-எ-று. (௰௧)

சொற்பதங்கடந்துநின்றசோதிவந்தருளைநல்கு
மற்புதமறியேனென்றுமதிசயங்கண்டாமென்று [ன்றுஞ்
மெய்யொளிசடையாய்நெஞ்சங்குழைத்தனையென்னையெ
சிற்பரன்றனதுபாதஞ்சென்னியின்மன்னுமென்றும்.

(இ-ள்.) சொல்லுகின்றபதங்களைக்கடந்துநிற்கின்ற கடவுளானவர்வந்து கிருபையைத்தருகின்ற அற்புதமறியேனே யென்றும் அதிசயங் கண்டாமேயென்றும் ஒளிவிளங்குகின்ற சடையையுடைய கடவுளே, யென்னைமநங்குழைத்தாயென்றும் பரமசிவனுடைய பாதஞ்சென்னியில் மன்னுமெனறும்-எ-று. (௰௨)

ஐயனேநின்னைக்காணவாசைப்பட்டேனென்று, மூய்கி லேன்வாழேனென்று முனக்கடைக்கலமேயென்றுஞ், செய்

யுமாறறியேனந்தோ செத்திலேனென்றும்பொய்யாய், பொய்யனேநின்பொற்பாதமபுணருநாளெனறோவென்றும்.

(இ-ள்.) ஐயனே நினைக்காசை ஆசைப்பட்டேனென்றும் பிழையேனைவாழ்கிலேனென்றும உனக்கடைக்கலமென்றும் செய்யுமாறறியேன் ஐயோசெத்திலேனென்றும், பொய்யர்க்குபபொய்யனே, நின்பாதம புணருநாளென்றோவென்றும்-எ-று. (௰௩)

ஆதரித்தழைத்திலிடிகேயெந்துவென்றருளாயென்று
போதமிக்குடையபாடலிவையிவைபுகன்றபின்னர்
மாதிரத்தெவருமபோற்றவருந்திருவார்த்தையென்றுந
தீதறச்சிறந்தவெண்பாதிரமெழுநான்குமோதி.

(இ-ள்) ஆதரித்தழைக்கில், அதெந்துவேயென்றருளாயென்றருட்பத்தும் ஞானமிகவுடைய பாடல்கள் இவைகளிவைகள் அருளியபின்பு எட்டுத்திக்கிலுள்ளவர்களும் வணங்குகின்ற திருவார்த்தையும் எண்ணப்பத்துங்குற்றமற்றசிறந்த வெண்பா இருபத்தெட்டும் விளங்கச்சொல்லி-எ-று. (௰௪)

இயல்புடன்மொழியும்பள்ளியெழுச்சிகோசறவுநெஞ்சத
தயர்வறவுனாக்குமின்னேரனையபூங்கழல்களென்று
முயிருண்ணியெனுநற்செய்யுள்பிரார்த்தனையோங்குநீதி
வியனெடுங்கூடற்பாண்டிவிருத்தமெய்த்தமிழுங்கூறி.

(இ-ள்.) இயல்புடனே சொல்லுகின்ற திருப்பள்ளியெழுச்சியும் திருவேசறவும மனததின்வருத்தம் நீங்கச்சொல்லுகின்ற மின்னேரனைய பூங்கழல்களென்ற நற்றமாலையும், உயிருண்ணிப்பத்தும், பிரார்த்தனைபபத்தும, யதார்த்தநீதியாகிய அதிசயமுள்ள நெடியமதுரையினுடைய திருப்பாண்டி விருத்தமென்னும் தமிழ்ப்பாடலும்சொல்லி-எ-று. (௰௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருவுந்தொண்டருடன்கூடி வைகிச்சிலநாட்செல்லமுதற்,
பரமன்சொல்லும்படியேபின்பயிலும்பொய்கைத்தழல்கண்
டு, கருதுந்திருவஞ்செழுத்தோதிககாணக்கிளருங்கனன்மீது,
விரவும்பேரன்புடையார்களெல்லாஞ் சென்றுவீழ்ந்தார்கள்.

(இ-ள்.) தங்கியிருக்கப்பட்ட அடியார்களுடனே வாசஞ்செய்து சிலநாள்செல்ல அதற்குமுன்னே பரமசிவனனுக்கிரகித்தபடியே பின்புபயிலுகின்ற தடாகத்திலே அக்கினியைக்கண்டு நினைக்கின்ற அழகியபஞ்சாக்கரத்தைச் செபித்துக்காணும்படிப் பிரகாசியாநின்ற அக்கினியிலேகலந்திருக்கின்ற மிகுந்த அன்பையுடைய அடியாரகளெல்லாம்போய் மூழ்கினார்கள்-எ-று. (௰௬)

வீழ்ந்தபோதிற்புலியூரர் விடைமேற்றோன்றிக்கவுரியுடன், சூழ்ந்தங்கிமையோரமலர்சிந்தத் தொழவிண்ணிடையே தோன்றுதலு, மாழ்ந்ததடத்துட்கனன் மூழ்குமன்பரடங்கத்துயர்நீங்கி, வாழ்ந்துவணங்கிக்கணநாதர் வடிவாய்த்திருமுன்வந்தார்கள்.

(இ-ள்.) வீழ்ந்துமுழுகினபோது நடேசமூர்த்தியானவர் இடபவாகனத்தின்மேலேறி உமாதேவியுடனே முப்பத்துமுக்கோடிதேவர்களுஞ் சூழ்ந்துகொண்டு அவ்விடத்திலே மலரைத்தூவி வணங்க ஆகாயத்திலெழுந்தருளிய மாத்திரத்தில், ஆழம்பொருந்திய தடாகத்திலிருக்கின்ற அக்கினியிலமூழ்கிய அன்பர்கள் தங்கள்துக்கமெல்லாம் நீங்கிவாழ்ந்து வணக்கஞ்செய்து சிவகணநாதர்களாய் வடிவுகொண்டு பரமசிவனெதிராக வந்தார்கள்-எ-று. ()

சூரியத்தலையிற்பயில்வாருந் தொழுதங்கெழுவார்முகநாடி, யொருசொற்றகலாதவர் நீரிங்கொழியத்தனிநாமெய்திய

துங், கரையிற்றிரைபோய்விழவீசுங் கழுநீர்வாசங்கமழ்வா
வி, யெரியிற்புகுவீரென்றதுவும யாதோவெளியிங்கிதுவா
கும்.

(இ-ள்.) துரியத்தின முடிவின்விளங்கிய கடவுளும்வணங்கியெழுகின்ற அடியார்களுடைய ஏகாக்ரதையைபபார்த்தும் கொஞ்சநேரமாகிலும் நீங்காதவராகிய நீரிங்கே சேர்ந்தது தனியேநாம் போனதுங் கரையிலே அலைகள்போய் மோதும்படி வீசுகின்ற செங்கழுநீர்வாசங்கமழுகின்ற திருக்குளத்திலே அக்கினியிலே முழுகுவீரென்றுசொல்லியதும என்னகாரணமோவென்று கேட்டால இதுவாகுமென்றார்-எ-று. (௰௨)

இதுவுமது-வேறு.

உத்தமனென்னுந்திருவாதவூரனைமன்னும்புலியூரிற், புத்
தனைவெல்லும்படிநாமிப்புவியிலிசைவைத்தோமியாமேகிற், சி
த்தமயக்கேதுயாகூறுஞ் செயதியறுமென்பதுதோரா, வித்
தலமீதேசிலநாளிங்கெமுடன்வாராதிருமென்றேம.

(இ-ள்.) உத்தமனென்கிற திருவாதவூரனை நிலைபெற்றசிதம்பரத்திலே புத்தனைவாதில்வெல்லும்படி நாமிந்தப பூமியினமேல் வைத்தோம் நாமநீங்கினால் மயக்கொண்டு துன்பமடைவானென்பதுதெரிந்து உங்களையும இந்தத்தலத்திலே சிலநாள் எம்முடன் வாராதிருப்பீரென்று சொனனேம-எ-று. (௰௩)

மலமகல்பவருற்புலியூர்தேமானிடவடிவந்தனையெய்திச்
சிலபகலென்னிலும்பயில்காலைச் சேர்ந்தருமலவாணனையென்
பலமலர்கமழுந்தடமீதிற்பரவருங்கனல்சோதித் [றே
திலதெனநீடுஞ்சடம்வேவித்திவ்வுடலீந்தோமிந்நாளில.

(இ-ள்.) ஆணவம்-மாயை-காமியமென்னும் மலநீங்கினவர்களும் பூமியின்மேலே மானிடவடிவங்கொண்டு சிலநாளாயினும் இருக்குங்காலத்தில் மறுபடியு மலவாசனைசேருமென்று அனேக மலர்கள்வசிக்கின்ற தடாகத்திலே சொல்லுதற்கரிய ஞானாக்கினியைச்சேர்வித்துப் பொய்யாய்த்தோன்றிய மாயாதேகத்தை வேவச்செய்து இந்தத்தேகத்தை இந்நாளிலேகொடுத்தோமென்றார் பரமசிவன்-எ-று. (உ௰)

என்றுவிளம்பிக்கணநாதரெங்கணுமகலப்புலியூரின், மன்
றுவிளங்கப்பயில்வாருநம்வானின்மறைந்தாரவ்வெல்லைத், து
ன்றியஞானச்சிவநாமச்சொற்றமிழ்சொல்வார்வேறாகச், செ
ன்றொருகொன்றைச்செழுநீழற்றிகழவிருந்தார்சிவயோகம்.

(இ-ள்.) இப்படியென்று அருளிச்செய்து கணநாதர்கள் எவ்விடத்திலுநெருங்கிச் சிதம்பரத்திலே கனகசபைவிளங்கத்திருநடஞ் செய்கின்ற சபாநாதரும், ஆகாயத்தில் மறைந்துவிட்டார் அப்போது நிறைந்த அறிவைத்தருகின்ற சிவநாமத்தையுடைய திருவாசகத்தமிழ் சொல்வாராகிய மாணிக்கவாசகர் வேறாகப்போய்ச் செழுமையுள்ள ஒருகொன்றைமர நிழலிலே பிரகாசத்துடனே சிவயோகஞ்செய்திருந்தார்-எ-று (உ௧)

அன்பரழற்கேபுகுமாறுமையர்விடைக்கேவருமாறு,முன்
புதமக்காமுறுவெய்திமுன்னவனற்றுடொழுமாறும், பொன்
பொதுவிற்கேயன்பாளர் புகுவதுமெல்லாமொருகாலத், தி
ன்புறுமெய்ப்போதகயோகத்தியல் பொடுகண்டாமோன்செ
ய்தார்.

(இ-ள்.) அடியார்கள் அக்கினியிலேபுகுந்த விதமும் கடவுள் இடபவாகனத்தின்மேல்வந்த விதமும் முன்னேதமக்குவேண்டிய

வடிவங்கொண்டு கடவுளினுடைய திருவடியை வணங்கினவித மும் இனிக்கனகசபையிலே தான்போயடைவதும் ஆகிய இவையெல்லாம ஒருகாலத்திலே இன்பமிகுந்த உண்மைஞானத்தைத் தருகின்ற சிவயோகத்திலே சுபாவத்துடனே மாணிக்கவாசகா அறிந்துகொண்டாா மிலமெனசெயதாரோவென்னில்-எ-று. ()

செங்கைகுவித்தார்விழிநீரைச் சிந்தினரெந்தாய்வந்தாய்பி
ன, ரெங்கொளித்தாயெனமாலுற்றெய்தினர்பொய்கைக்
கரையீதி,ற, கங்கைமுடித்தாவிடையேறிக்கண்ணுறநண்ணு
நதலமோவெனு, றங்கணிலத்தேபோய்வீழ்வுற்றழுதழுதந
தோவெனவெந்தார்.

(இ-ள்.) சிவந்தகைகயைக்குவித்தார் கண்களாலே ஆநந்தபாஷ்பங்களைச்சொரிந்தார எமதுபிதாவாகிய கடவுளேவந்து பின்னெங்கே யொளித்தாயென்று மயக்கமடைந்து பொய்கைக்கரைமீதிலேவந்து கங்கையைததரித்த பரமனே இடபவாகனத்திலேறிக் கணணெதிரேஎழுந்தருளிய தலமோவென்று அழகிய இடத்தையுடைய பூமியிலேபோய் விழுந்து அழுதழுது ஐயோவெனவெந்தார் மாணிக்கவாசகா-எ-று. (உங)

கலித்துறை.

அன்னைநிகர்பவரென்னையொழித்தேயன்பாளர்
பொனனடிபெற்றேபொங்கையழற்கேபுகலாமோ
பின்னுநவத்தீர்நும்மருள்கூடாவினையேனுக்
கின்னலளித்தீரெங்கொளித்தீரெனவெந்தார்.

(இ-ள்.) தாய்க்குச் சமானமானவரே என்னைநீக்கித் தமதடியாரகள் பொன்போன்ற பாதத்தைப்பெற்றுத் திருப்பொய்கையிலே யுண்டாகிய அக்கினியிலேழுழகலாமா பிரகாசிக்கின்ற வடி

வையுடையவரோ உமதுகிருபையைச் சேருதலில்லாத தீவினையுடையேனாகிய அடியேனுக்குத் துன்பத்தைக்கொடுத்து எங்கே ஒளித்தீரென்று நொந்தார்மாணிக்கவாசகர்-எ-று. (௨௪)

(இஃதைஞ்சீரடிநான்காய்வந்தசெய்யுள்.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அந்நிலைதெளிந்துபொய்கையகன்றுயர்குருந்தக்கீழ்ப்
பன்னருமறைகள்காணாப்பதமலர்பற்றிவீழ்ந்து
மன்னியதலத்திலுள்ளோர்வல்வினைப்பிறவியாள [னார்
வின்னருட்சதகமெய்யானநம்பியென்றெடுத்துச்சொன்

(இ-ள்.) அந்தநிலையைத்தெளிந்து திருப்பொய்கையைவிட்டு நீங்கி உயர்ந்ததிருக்குருந்தநிழலிலே பன்னுதற்கரியவேதங்கள் காணாததிருவடிமலரைப்பற்றி விழுந்து நிலைபெற்ற பூமியிலுள்ளவர்களுடைய தீவினைக்குக்காரணமாகிய பிறவிமாளும்படி இனிய அருளையுடைய திருச்சதகம் மெய்தானநம்பியென் றெடுத்துச்சொன்னார் மாணிக்கவாசகர்-எ-று. (௨௫)

இத்திறங்கூறியாங்கேபுலம்பிநின்றிரங்குமெல்லை
நித்தனன்றுரைத்தநீர்மைநெஞ்சினுணினைந்துபின்ன
ரத்தலத்திறைஞ்சியெங்கோனருட்பெருவிடைபெற்றே
யுத்தரகோசமங்கையூரினிற்சென்றுபுக்கார். [கி

(இ-ள்.) இந்தப்பிரகாரஞ்சொல்லி அங்கேபுலம்பிநின்று இரங்குஞ்சமயத்தில கடவுளன்றருளிச்செய்ததை மநதிலே நினைந்து பின்பு அந்தத்தலத்திலேவணங்கிக் கடவுளுடைய செலவுபெற்றுக்கொண்டுபோய்த் திருவுத்தரகோசமங்கையென்னும தலத்துக்கெழுந்தருளினார் மாணிக்கவாசகர்-எ-று. (௨௬)

சடையவர்கோயிலெய்தித் தமமைவந்தடிமைகொண்ட
வடிவதுகாணூராகிமயங்கிமெய்துயிர்ந்துவீழ்ந்து
விடுதிகொலென்னையென்றுநீத்தல்விண்ணப்பமென்னுந்
தொடைசெழுபாடலோதக்காட்டினர்தொல்லைமேனி.

(இ-ள்.) திருவுத்தரகோசமங்கையிலே சடாபாரத்தையுடைய பரமசிவனெழுந்தருளி யிருக்கின்ற கோயிலுக்குப்போய்த் தம்மைவந்தடிமைகொண்ட திருவுருவைக்காணூதவராய் மயக்கமடைந்து பெருமூச்சுவிட்டுக் கீழேவிழுந்து என்னை விட்டுவிடுகின்றாயோவென்று நீத்தல்விண்ணப்பமென்னும்பாடலசொல்லப் பழைய திருவுருவைக்காண்பித்தார்-எ-று. (உஎ)

கன்னலைபமுதைபங்கேகண்டுகொண்டிறைஞ்சிச்சின்னாள
நகரிருந்துகடவுளானநண்மொழிப்படியேசென்று
தன்னிகரில்லாததெய்வத்தலம்பலவணங்கிநீங்கி [ர்.
சென்னிநன்னாட்டிலெய்திததிருவிடைமருதூர்ச்சேர்ந்தா

(இ-ள்) கரும்பையும் அமிர்தத்தையுமொத்த கடவுளை அங்கே கண்டுகொண்டு வணங்கிச்சிலநாள் அந்தத்தலத்திலிருந்து தமதுகடவுள்சொற்படியேபோய்த் தனக்குநிகரற்ற அநேகம் தெய்வத்தலங்களைவணங்கி நீங்கிச் சோழநாட்டுக்குப்போய்த் திருவிடைமருதூரிற்சேர்ந்தார் மாணிக்கவாசகர்-எ-று. (உஅ)

அப்பதிதொழுதபின்னரன்புடனாரூரெய்திச்
செப்பருமலர்த்தாள்போற்றித்திகழ்திருப்புலம்பலோதி
யெய்ப்பறவிறைஞ்சியண்ணலியம்பியபதிகளெல்லாந்
தப்பறவணங்கிநீங்கித்தடமதிற்புகலிசேர்ந்தார்.

(இ-ள்.) அந்தத்தலத்தைவணங்கினபின்பு அன்புடனே திருவாரூருக்குப்போய்ச் சொல்லுதற்கரிய தியாகராயருடைய திருவ

டித்தாமரைகளைத் துதித்துப் பிரகாசிக்கின்ற திருப்பூவம்பலென்னும் பாடல்களைச்சொல்லித் தமது இளைப்புநீங்கவணங்கிப் பரமசிவனால் அனுக்கிரகம் பண்ணப்பட்ட தலங்களெல்லாந் தப்பாமல் வணங்கிநீங்கி விசாலம்பொருந்திய மதில்சூழ்ந்த சீர்காழியிற் சேர்ந்தார்-எ-று. (௨௧)

குன்றெனவயங்குகோயிற்கோபுரவாயினீங்கிச்
சென்றுயர்கயிலையானசெய்திகண்டிரங்குமெல்லை
மன்றிடைநடித்தபாதமலரடிபிடித்துக்கொண்டு [தார்.
பின்றிகழ்சடையோன்முன்னர்ப்பிடித்தபத்தருளிச்செய்

(இ-ள்.) மலையென்றுசொல்லும்படிப் பிரகாசிக்கின்ற ஆலயத்தினுடைய திருக்கோபுரவாயிலைக்கடந்து நீங்கிப்போய் அதுகயிலாயமாகிய செய்தியைக்கண்டு வணங்கும்பொழுது சிற்சபையிலே நிருத்தஞ்செய்த திருவடித்தாமரையைப் பிடித்துக்கொண்டு பின்புறத்திற் பிரகாசிக்கின்ற சடாபாரத்தையுடைய கடவுளின் முன்னே பிடித்தபத்தென்பதை அருளிச்செய்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௩௰)

தொல்வினைப்பகைமையுள்ளாரியாவருந்தொழுதாலிங்கு
வெல்வரப்பகையையென்றுவிருப்புடன்சிலநாள்வைகி
மல்குமந்தலத்தைநீங்கிவண்கழுக்குன்றிலன்பாற்
செல்வதற்கிசைந்துதில்லைததிசைகுறித்திறைஞ்சியேகி.

(இ-ள்.) பழைவினைப்பகையுள்ளவர்கள் வணங்ினால்யாவரும் அதனைவெல்வார்களென்று அந்தத்தலத்திலே விருப்புடனேசிலநாள் வாசஞ்செய்து அந்தத்தலத்தைவிட்டு வளத்தையுடைய திருக்கழுக்குன்றத்தில் அன்பாய்ச்செல்வதற்குச் சம்மதித்துத் தில்லைநகரத்திசையைக்குறித்து வணங்கிப்போய்-எ-று. (௩௧)

கலிவிருத்தம்.

உத்தரநெடுந்திசையிலேகியொருகுன்று
முத்தநதிசூழ் முதுகுன்றினைவணங்கி
வத்தலமகன்றுயரருட்டுறையிசென்றே
மெய்த்தவர்களெண்ணியுறைவெண்ணெயிலடைந்தார்.

(இ-ள்.) நெடிய வடக்குத்திசையிலேவந்து பிரகாசங்குறையாத மணிமுத்தாறுசூழ்ந்த விருத்தாசலத்தைவணங்கிப்பின்பு உயர்ந்த திருவருட்டுறையென்று பெரியோர்கள் நினைந்துவசிக்கின்ற திருவெண்ணெய் நல்லூரிற்சேர்ந்தார் மாணிக்கவாசகர்-எ-று. ()

அந்நகர்வணங்கியபினன்புடனகன்றே
நன்னர்வழிசென்றுநடுநாடுமுயர்காடுங்
கொன்னிபமடங்கலுறைகுன்றமுமிகந்தே
மன்னுமருணாபுரிமருங்கணையவந்தார்.

(இ-ள்.) அந்தத்தலத்தை வணங்கியபின்பு அன்புடனேநீங்கி நல்லவழியிலேபோய் நடுநாட்டையும்உயர்ந்த காட்டையும்அச்சத்தைத் தருகின்ற யானையும்சிங்கமும் வசிக்கின்ற மலைகளையும்கடந்து நிலைபெற்ற திருவண்ணாமலைக்குச் சமீபத்தில்வந்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௬)

மாடமொடுகோபுரமுமன்றுமணிமுத்தஞ்
சூடுமதிலும்பெரியதோரணமுமப்பு
நீடுகமுகாடவிநெருங்கியுளதண்கா
வூடுயர்தல்கண்டுவகைகொண்டுதொழுதுய்ந்தார்.

(இ-ள்.) உபரிகைகளும், கோபுரங்களும், நிலைபெற்ற இரத்தினங்களும், முத்துக்களும், பதித்தமதில்களும், பெரியதோரண

ங்களையுடைய முகப்பும், நீடியகமுகஞ்சாடுசளும் நெருங்கியுள்ளகுளிர்ந்தசோலைகளினுடைய கிளைகள் உயர்ந்திருத்தல்கண்டு மகிழ்ச்சிகொண்டு வணங்கிபபிழைத்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௪)

அன்றிருவர்தேடவழலானதொருவெற்பாய்
நின்றவடிவோமருநிறைந்தபெருவாழ்வோ
வென்றுமலையண்ணலையிறைஞ்சியருள்கொண்டே
சென்றருணையாகியசெழும்பதிபுகுந்தார்.

(இ-ள்.) அன்றுபிரமா விஷ்ணுக்கள்தேட அக்கினிமலையாய் நின்றவடிவோ, அல்லதுமருவிலேநிறைந்த பெரியவாழ்வோவென்று அண்ணாமலையைவணங்கிக் கிருபைகொண்டு செழுமையுள்ள திருவருணைமாநகரத்திற்புகுந்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சோலையுமதிலும்பல்பூந்தோரணமறுகுந்தெய்வச்
சாலைகள்பலவுநீங்கிச்சந்நிதிமறுகிற்சென்று
மாலையும்பாமபுந்திங்கண்மத்தமுமுடியில்வைத்தோ
னாலயமிறைஞ்சிக்கண்டார்தம்மையன்றாண்டமேனி.

(இ-ள்.) சோலைகளும், மதிலும், பசியபூந் தோரணங்களையுடைய வீதியும், அனேகதெய்வத்தன்மையுள்ள சாலைகளும் நீங்கிச் சந்நிதி வீதியிற்போய் மலர்மாலையும், மூன்றாம்பிறையும், சருப்பமும், ஊமத்தமலரும், திருமுடியின்மேல்வைத்த அண்ணாமலையாருடைய ஆலயத்தைவணங்கித் தம்மையன்றுவந்தாண்ட திருவுருவைக்கண்டார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௬)

மாலுடன்பிரமன்றேவர்வந்தனக்கடிமையென்றன்
றேவிநிபொழுதிலாலமுண்டிருள்கண்டபோற்றி
மேவிடும்பவநோய்தீரவிண்ணவர்மண்ணோர்பச்சைப்
பாலுடன்கலந்துட்கொள்ளும்பனிமலைமருந்தேபோற்றி.

(இ-ள்.) மகாவிஷ்ணுவும பிரமதேவனும் தேவர்களும் வந்து உனக்கடைக்கலமென்ற முறையிடும்போதில் ஆலகாலமுண்டிருண்ட கண்டத்தையுடையவனேபோற்றி, அதிகரிக்கின்ற பிறவிநோய் நீங்கத்தேவரும் மனிதரும் பசும்பாலுடன் அல்லதுஉமாதேவிபாகத்துடனே கலந்துட்கொள்ளுகின்ற குளிர்ச்சியுள்ள மலைமருந்தேபோற்றி-எ-று. (௯௭)

நெடியவன்கேழலாகிநீணிலமகிழ்ந்துங்காணு, வடிகளென்றலைமேல்வைத்தவருட்பெருங்கடலேபோற்றி, படியிடம்புரக்குமுண்ணுமுலையெனும்பசசைமேனிக், கொடியிடங்கொண்டசெம்பொற்குன்றமேபோற்றிபோற்றி.

(இ-ள்.) மகாவிஷ்ணு வராகமாய்நீண்ட பூமியைப்பிளந்துங் காணுத திருவடிகளை என்றலைமேல்வைத்த பெரிய கிருபாசமுத்திரமேபோற்றி, பூவுலகத்தை இரட்சிக்கின்ற உண்ணுமுலை யென்னும் பச்சைமேனியையுடைய கொடியை இடதுபாகத்திற்கொண்ட சிவந்தபொன்மலையேபோற்றிபோற்றி-எ-று. (௯௮)

வென்றிடுங்கன்னிமேதிச்சென்னிவிக்கிரமன்றன்னைக்
கொன்றதன்பாவந்தீரக்குறித்திடவருள்வாய்போற்றி
யன்றுவந்தென்னையாளுமணியண்ணுமலையாய்போற்றி
யென்றுதம்பரிவாலேத்தியிறைஞ்சியங்குறையுநாளில.

(இ-ள்.) வெல்லுதல்செய்த துர்க்கையானவள் மகிடாசுரனைக்கொன்ற பாவந்தீரவினைத்துப்போற்ற அருள்செய்பவனே போற்றி அன்றெழுந்தருளிவந்து என்னை அடிமைகொண்ட அணியண்ணு மலையானேபோற்றியென்று அன்பினுலேஏத்தி வணங்கி அங் கேவசிக்கின்றநாளில்-எ-று. (௯௯)

மாதர்கொண்மாதவொல்லாமார்கழித்திங்கடன்னி
லாதிரைமுன்னீனாந்தேயாகியதினங்களெல்லா

மேதகுமனைகடோறுமழைத்திருள்விடியுங்காலை
போதிவர்தமமிறகூடிப்புனறறடமாடச்செய்வார்.

(இ-ள்.) அழகினைக்கொண்ட எழுவகைப்பருவ மங்கையர்க ளெல்லாம மார்கழிமாதத்தில் திருவாதிரைக்குமுனனே பத்துத் தினங்களிலெல்லாம் மேன்மைபொருந்திய வீடுகடோறும போய் அழைத்துக்கொண்டு விடியற்காலத்தில இவாகளெல்லாங் கூடித்தீர்த்தத்திலபோய் ஸ்நானஞ்செய்வாாகள்-எ-று. (௬௰)

அன்னவரியல்புகண்டாரங்கவர்புகன்றதாக
மன்னிபதிருவெம்பாவைவாசகம்பேசிபின்னர்க்
கன்னியர்பாடியாடுங்கவின்கொளம்மனைகண்டன்றோர்
பன்னியபாடலாகவம்மனைபாடல்செய்தார்.

(இ-ள்.) அவர்களுடைய இயற்கையைக்கண்ட மாணிக்கவாசகர் மங்கையாகள சொன்னதாக நிலைபெற்ற திருவெம்பாவை சொன்னபின்பு மங்கையாகள் பாடியாடுகின்ற அழகினைக்கொண்ட அம்மனையைக்கண்ட மாணிக்கவாசகர் அவர்கள்சொன்னபாடலாகத் திருவம்மானை பாடினார்--எ-று. (௬௧)

விரவுமன்புடையாரங்கமேதகுதலத்தைநீங்கிப்
பரிவுடன்கச்சியேகாம்பரங்கனிற்பரனையேத்தித்
தெரிவருங்காமக்கோட்டிச்சீறடிவணங்கித்தேவர்
வரநினைந்திறைஞ்சுந்தெய்வவண்கழுக்குன்றிற்சென்றார்.

(இ-ள்.) கலந்த அன்பையுடையவராகிய மாணிக்கவாசகர் மேன்மைபொருந்திய அந்தத திருவண்ணாமலையைநீங்கி அன்புடனே காஞ்சிமாநகரிலவந்து ஏகாம்பரநாதி லேகம்பனை வணங்கித் தெரிதற்கரிய திருக்காமக்கோட்டத்தில காமாட்சியினுடைய சிறிய இரண்டு திருவடிகளையும்வணங்கித் தேவர்கள்வரங்களைக் குறித்து

வணங்குகின்ற தெய்வீகமுள்ள வளத்தையுடைய திருக்கழுக்குன் றத்துக் கெழுந்தருளினார் மாணிக்கவாசகர்-எ-று. (௪௨)

கோட்டிசழ்ங்கமழுங்கொன்றைச் சென்னியங்குலவுமன்ப
ர், சூட்டியமலர்த்தாள்போற்றித் துணைவநின்செய்யமேனி,
காட்டினைகலங்காவண்ணமிக்கழுக்குன்றிலென்று, பாட்டினை
ப்பொழிந்துசின்னாள்பயின்றுபின்பணிந்துபோநதாா.

(இ-ள்.) கொமபுகளிலே யிதழுவிக்கின்ற கொன்றைமாலி கைதரித்த சிரசையுடைய கடவுளுக்கு அன்பராகிய மாணிக்கவா சகர் தன்முடியிலேசூட்டியதாமரைமலாபோன்ற பாதத்தைவண ங்கித் துணையானவனே, யான்கலங்காதபடி சிவந்தமேனியைககா ட்டினாய் கழுக்குன்றிலேயென்று பாட்டினைச்சொல்லிச் சிலநாள் வசித்துப்பின்பு பணிந்து எழுந்தருளினா-எ-று. (௪௩)

அத்தலமுதலாநாப்பணைடைந்துளநதியுங்காறு
மைத்தடங்கிரியுங்காவுமவாவிகள்பலவுநீங்கிப
பைத்தவெம்பாமபோடாடிநரியெலாமபரிகளாக்குஞ்
சித்தர்தென்றில்லைமூன்றுகாவதமென்னச்சென்றா.

(இ-ள்.) அந்தத்தலமுதல் மத்தியப்பிரதேசத்திலே யிருந்து ள்ள ஸ்தலங்களும், காடுகளும், கரியவிசாலமாகிய மலைகளும, சோலைகளும், தடாகங்களும, நதிகளும, கடந்துபடத்தையுடைய வெய்யசருப்பத்தோடு விளையாடி நரிகளையெல்லாம் குதிரையாக் கிய சித்தராகியகடவுளது .ழகியதில்லைமாநகா மூன்றுகாதவழி யென்றுசொல்ல, எழுந்தருளினார் மாணிக்கவாசகர்-எ-று. (௪௪)

கலிநிலைத்துறை.

தூமூரன்மடப்பாவையாகேகாளாசையிலாளா
யாழுகாநபிட்டுண்டெயிாவாழாதவர்தாமுங்

தீமூள்கரவரன்மேலருள்செய்யாதவர்பலரும்
போமூர்வழிபோகாதவர்புலியூர்வழிபோனார்.

(இ-ள்) பரிசுத்தமாகிய தந்தவரிசைகளையுடைய மங்கையர்கள் தோளாசையிலாட்படுகின்ற ஆண்மைகளும் இட்டுண்டு உயிர்வாழாதவர்களும் அக்கினிமூளுகின்ற திருக்கரத்தையுடைய கடவுள்மேல் அன்புசெய்யாதவர்களும் போகப்பட்ட நரகவழியிலேபோகாத மாணிக்கவாசகர் புலியூராகிய சிதம்பரத்தின்வழியாகப் போயினார்-எ-று. (சரு)

செல்லுஞ்சுரமிருபாலொளிதிகழ்கொன்றைநன்மலரா
வெல்லொன்றியவிமையோருலகெனநின்றனவெங்கும்
புல்லுஞ்சிவநாமந்தமிழ்போல்வண்டிசைபாடச்
சொல்லும்பொருள்வல்லார்தங்கைபோன்றனதோன்றி.

(இ-ள்.) இப்படிச்செல்லுகின்ற மார்க்கத்தி னிரண்டுபக்கத்திலும் ஒளிவிளங்குகின்ற கொன்றைகள்மலர்ந்து எங்கும்பிரகாசமபொருந்திய தேவர்களுடைய பொன்னுலகம்போல் நின்றன, சிவநாமத்தைத்தழுவுகின்ற தமிழ்போல் வண்டுகளிசைபாட அதற்குப்பொருள் சொல்ல வல்லவித்துவான்கள் அபிநயங்காட்டுங் கைகள்போல் மலர்ந்திருந்தன காந்தள்-எ-று. (சசு)

தெள்ளுஞ்சிவஞானஞ்சிறிதில்லார்தவவேடங்
கொள்ளுஞ்செயலெனவொண்மலர்குலவுங்கவிரெல்லாம்
பள்ளம்படர்புனல்போற்புலன்வழியேபயில்சிறியோ
ருள்ளந்தனையொக்குந்திகழ்மைக்கொண்டொளிர்காயா.

(இ-ள்.) தெளிந்தறிகின்ற சிவஞானம் சிறிதுமில்லாதவர்கள் தவசிகள்வேடங் கொள்வதுபோல முருக்குகளெல்லாம் வாசனையில்லாத ஒளியையுடைய மலர்களைமலர்ந்திருந்தன பள்ளத்திற்

ங்கும்பலாவும் கொத்தாரந்தசெழுமையுள்ள மந்தாரமும் ஆகியமரங்கள்நெருங்கிய பூஞ்சோலையைக்கடந்து சிதம்பரத்தைக்கண்டார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௰)

சேணொன்றியமதிலும்பணிதிகழ்கோபுரநிரையுஞ்
சோணங்கருகும்பங்கிளர்துணைமாளிகைபலவுங்
காணுந்தொறுமெழில்செய்வதுகண்டஞ்சலிகொண்டே
பூணுந்திருவருளன்பர்புகழ்ந்தாருண்மகிழ்ந்தார்.

(இ-ள்.) உயர்ச்சிபொருந்தியமதிலும், சிற்பத்தொழிலின் மிகுந்த கோபுரவரிசைகளும், சிவந்தகும்பங்கள் பிரகாசிக்கின்ற அநேக உப்பரிகைகளும, பார்க்குந்தோறும், அழகினைச்செய்வது கண்டு அஞ்சலியாஸ்தராய்ப்புகழ்ச்சிசெய்து மகிழ்ச்சிகொண்டார் திருவருள்பூண்ட அன்பராகிய மாணிக்கவாசகர்-எ-று. (௬௧)

வேதந்தருமொலியுந்தொழும்விண்ணோர்தமதொலியும்
கீதந்தருமொலியுங்கிளர்முழவங்களினொலியும
போதந்தருசிவஞானிகள்புகலாகமவொலியு
மோதுந்தமிழொலியுங்கடலொலிசெய்தனபுலியூர்.

(இ-ள்.) பின்னும் அந்தச்சிதம்பரத்திலே வேதமோதுகின்ற சத்தமும் வணங்குந்தேவர்கள்சத்தமும பாடுகின்ற கீதங்களின சத்தமும பிரகாசிக்கின்றபேரிகைகளின சத்தமும் அறிவினைத்தருகின்ற சிவஞானிகள்சொல்லுகின்ற ஆகமங்களின்சத்தமும், ஓதுகின்ற தமிழின்சத்தமும், கடலபோலச்சத்தித்தன-எ-று. (௬௨)

நிரையொன்றியமணிமாளிகைநெடுவீதிகளகலா
வரையொன்றியவுயர்கோபுரமணிவாயில்புகுந்தே
யுரையொன்றியசிவஞானமுணர்க்குஞ்சிவனன்னூல
கரைகண்டவர்மணிமன்றெதிர்கண்டாரருள்கொண்டார்.

(இ-ள்.) வரிசைபொருந்திய அழகிய உப்பரிகைகளையுடைய நெடியவீதிகளைக்கடந்து மலைபோற் பொருந்திய உயர்ந்தகோபுர வாயல்வழியாகப்புகுந்து பொருந்திய சொல்லையுடைய சிவஞானத்தை விளக்குகின்ற சிவாகமங்களைக்கலைகண்ட மாணிக்கவாசகர் சிற்சபையை எதிரேகண்டு அருள்பெற்றார்-எ-று. (௫௩)

பொன்னார்பொதுவினின்றாடியபுனிதன்றனதாளிணைமுடிமே
லந்நாளடிவைத்தருமபரனாகுப்பாடிகண்டார்
மன்னாவுயிரன்னையமணிமன்றுளசரணென்றே
சொன்னார்பலகாலனுதொழுதாரமிகவழுதார்.

(இ-ள்.) பொன்னம்பலத்திலேநின்று திருக்கூத்தாடிய கடவுளைத் தம்முடையசிரசிலே அந்நாளிலே திருவடிகளைச்சூட்டிய குருவுருவமாகக்கண்டு இந்தச்சகத்துக்கெல்லாம் அரசனே உயிர்க்கொப்பானவனேசபாநாயகனே உனக்கு அடைக்கலமென்றுசொல்லிப் பலதரம் அன்புடனேதொழுதுமிகவும அழுதார் மாணிக்கவாசகர்-எ-று. (௫௪)

விண்டேயிருகண்ணீர்விழவீழ்ந்திணையடிமுடிமேற்
கொண்டேயெழுந்தன்பொடுகுறையாவருணிறையா
வண்டோர்குழலுமைபங்கனைவண்டில்லையுளின்றே
கண்டேனெனநற்பாடல்கருத்தாரவுரைத்தார்.

(இ-ள்.) இரண்டுகண்களும ஆனந்தபாஷ்பம்பொழிய நமஸ்காரம்பண்ணித் திருவடிகளை முடியிற்சூட்டிக்கொண்டு பின்பு எழுந்து அன்புடனேகுறைவில்லாத திருவருள்நிறைந்து வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகனாகிய கடவுளை வளத்தையுடைய தில்லைமாநகரிலே இப்பொழுதே கண்டேனென்று நல்லபாடல்களாகிய கண்டபத்து மனங்கொள்ள உரைத்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௫௫)

குன்றாவநன்மூலந்திகழ்குறியாகியசுடரு
மன்றுடையவெளியூடுமகிழ்ந்தாடியவொளியு
மொன்றாகியவநுபூதியிலுற்றார்செயலற்றார்
நின்றாரசைவில்லாவொருசிலையோவியமானார்.

(இ-ள்.) குறைவில்லாத கிருபையையுடைய திருமூல ஸ்தானத்திலிருக்கும் சிவலிங்கமாகிய சோதியும், பொற்சபையாகிய சிதாகாசத்திலே மகிழ்ந்து நிருத்தஞ்செய்கின்ற சோதியும், ஒன்றென்றுசொல்லும் அநுபூதியிலிருந்து ஒருசெயலுமில்லாதவராய் அசைவற்ற ஒருசித்திரம்போலானார் மாணிக்கவாசகர்-எ-று. (ருசு)

மைகொள்குழலுமைபங்கினன்வழிபாடுமறந்தே
கைகாலசைவில்லாயினகண்ணுஞ்சிறிதிமையாச்
செய்காரியமென்றேயிதுதெருளாமருளென்றே
மெய்காவலர்பணிமன்றைவிடப்போமினியென்றார்.

(இ-ள்.) அப்போது கருமையைவிரிக்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகராகிய சபாநாதனை வழிபடுவதுமறந்து கையுங்காலும் அசைவில்லாமலிருக்கின்றன கண்ணுங்கொஞ்சமாயினும் இமைக்கவில்லை செய்யுங்காரியம் என்றே இதுதெளியாத மயக்கமாயிருக்கின்றதென்று மாணிக்கவாசகனை இனிஅழகியசபையை விட்டுப் போமென்றார் மெய்காவற்காரர்-எ-று. (ருஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூண்டருள்கொண்டகாவல்புரிபவருரைத்தல்கேளாத்
தாண்டவநிகழுஞானத்தன்மையின்றன்மைநாடி
காண்டகுதுரியாதீதக்கழிபரத்தொளியின்மூழ்கி
நீண்டதோர்தம்பமாகிநின்றனர்நெடிதுபோது.

திருந்தியமறையோர்வாழுந்தில்லையம்பலஞ்சூழ்வீதிப்
பொருந்துழியமிர்தமானவாசகம்புகலலுற்றார்.

(இ-ள்.) வேண்டியவரங்களைத்தருதற்கு எழுந்தருளியஅந்தக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி அதற்கருகே திருநாகீச்சரத்திலிருந்த பரமசிவனுடைய பாதங்களை வணங்கிநீங்கித் திருத்தமாகிய தில்லைமூவாயிரவர் வாழ்கின்ற சிதம்பரத்தைச்சூழ்ந்த வீதியிற்போகும்போது அமிர்தமாகிய திருவாசகஞ் சொல்லத்தொடங்கினார் மாணிக்கவாசகர்-எ-று. (௯௧)

ஆடுமிக்குலாநற்றில்லையாண்டவன்றனைக்கொண்டென்று
பாடலைப்புகன்றுகோயிலிருவகைபபதிகங்கூறி [ம
நாடுமச்சிவபுராணமொழிந்தநல்லகவன்மூன்று
நீடுமெய்த்தமிழுமன்பாலோதினார்நீதிமிக்கார்.

(இ-ள்.) ஆடுங்குலாத்தில்லை யாண்டானைக்கொண்டென்னும் குலாப்பத்துப்பாடிக் கோயிற்றிருப்பதிகமும் கோயின்மூத்த திருப்பதிகமும் பாடிக்கீர்த்தித்திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல், ஆகிய மூன்றகவலும்அன்பினலேபாடினார் நீதியின்மிக்கவராகிய மாணிக்கவாசகர்-எ-று. (௯௨)

கைவளைச்சிலம்பச்செம்பொற்கிண்கிணிகறங்கச்சூழ்ந்து
மைவளர்குழன்மேல்வண்டுமருண்டிசைதிரண்டுபாட
மெய்வியர்வரும்பவெம்போர்விழிக்கயல்புரட்டிஞாங்க
ரிவ்வகைநின்றுசுண்ணமிடித்தனாமடந்தைநல்லார்.

(இ-ள்.) கைகளிலேயிருக்கின்ற சங்கவளையல்கள் சத்திக்கச் செம்பொன்னாற்செய்த கிங்கிணிகள்சத்திக்க மயிர்ச்சாந்து பூசிய கரியகூந்தலின்மேல் வண்டுகள்மயங்கி இசையைப்பாடத் தேகத்திலே வியர்வையுண்டாக வெவ்வியபோர்செய்கின்ற கண்ணாகிய

கயல்களைப் புரட்டிப்பக்கங்களிலே யிருக்கவைக்கின்ற மாதர்களெல்லாந் திருப்பொற்சுண்ணமிடித்தார்கள்-எ-று. (௬௩)

அத்திருவனையார்பாடல்கேட்டவரிசைத்ததாக
மெய்த்தமிழ்ஞானிநன்குமிகுதிருச்சுண்ணமோதி
மைத்திகழ்காவினூடுவருதலுமங்கேபோய்த்தம்
தத்தமின்முயலுங்காதற்சிறுமியர்தமைக்கண்டார்.

(இ-ள்.) இந்தமாதர்களுடைய பாடல்களைக்கேட்டு அவர்கள் சொல்லியதாக மெய்யாகிய தமிழினாலுநன்மைமிகுந்த திருப்பொற்சுண்ணம்பாடி மேகங்கள்பிரகாசிக்கின்ற சோலையிடத்தே வருமளவில் அங்கே தங்கள்தங்களுக்குள்ளேவிளையாடுகின்ற பெண்பிள்ளைகளைப்பார்த்தார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௪)

கண்டபின்வறிதுகூறுங்கட்டுரைசிறிதுமற்றெம்
பெண்டிரையுமையினீரொன்றவரவருரைத்ததாக [க்கம்
வெண்டருதருமென்சோலைத்திருவுந்தியெழிற்றோணோ
பணைபுகழ்திருப்பூவல்லிபாடல்பொன்னூசல்சொன்னார்

(இ-ள்.) பார்த்தபின்பு வீண்பேச்சுச்சிறிதுமில்லாமல் எமது கடவுளையே சொல்லுங்கள் நீங்களென்று அவரவர்கள் சொல்லிய தாகத் திருத்தெள்ளேணம் திருவுந்தியார் திருத்தோணோக்கம் பணைகள் விளங்குகின்ற திருப்பூவல்லி திருப்பொன்னூசல்பாடினார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௫)

அங்கொருசிறுமிநன்பின்னையைநோக்கிக்கூறுந்
தாமகிழ்மொழியேயாகத்தருமலையினைந்தோதி
ஞாங்கரின்முரலுந்தும்பிகன்னையுமயங்குமாதன்
பூங்கழல்வழுத்துகென்றுபுனிதர்கோத்தும்பிசொன்னார்.

(இ-ள்.) அங்கே ஒருபெண் பிறந்தனளென்று தாயைப்பார்த்துச் சொல்லும் தாங்கப்பெற்ற இசையையுடைய சொல்லெனத்தக்க அன்னைப்பத்துப்பாடிப் பின்பு கனிந்து பாடுகின்ற தும்பியைவிரும்பிப்பார்த்துக் கடவுளுடைய திருவடியைத் துதிசெய்யென்று திருக்கோத்தும்பிசொன்னார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௬)

பொங்கரினிடையே வாழும் பொற்பினங் குயிலே கூவி
யிங்கெழுமெம்பிரானையென்பதுங் கிளியைநோக்கித்[றும
திங்களஞ்சடையோன் பாதஞ் செப்பெனத் தசாங்கமென்
றங்கிசைத் தருளிப்பூந்த சொன்னாற் கின்னிகரொருவரில்லார்.

(இ-ள்.) சோலையின்மத்தியத்திலே வாழ்கின்ற குயிலைப்பார்த்து அழகிய இளங்குயிலே இங்கே எமதுகடவுளைக் கூவியழை யென்பதாகிய குயிற்பத்தும் கிளியைப்பார்த்து சந்திரனைத்தரித்த கடவுளைச்சொல்லென்றும் திருத்தசாங்கமும்பாடினார் தனக்குநிகரொருவருமில்லாத மாணிக்கவாசகர்-எ-று. (௬௭)

மண்ணிடைத் தம்மையாண்டவழி யினையன்றிமற்றோ
ரண்ணலைக்கடவுளென்பாரஞ்சுது வினையேனென்றும்
பண்ணுறச்சிறந்தசெய்யுள் பகர்ந்துநற்பன்னசாலை
யொண்ணகர்ப்புறம்புசெய்தங்கிருந்தனர் உண்மைமிக்கார்.

(இ-ள்.) பூமியிலே தம்மையடிமைகொண்ட கடவுளையல்லாமல் வேறொருவரைத் தெய்வமென்பதற்கு அஞ்சுகின்றேன் வினையையுடையே னென்னும் சிறந்தபண்ணையுடைய அச்சப்பத்துப் பாடியபின்பு அந்நகர்ப்புறத்திலே ஒருபன்னசாலைசெய்து அங்கிருந்தார் உண்மையிலே மிக்கமாணிக்கவாசகர்-எ-று. (௬௮)

பரம்பரப்பொருளாமித்தப்பைந்தமிழோதினவையும்
பெரும்பிறப்பகலவாகுதிறந்தனர் செய்தியெல்லா

யிருந்தநற்றெருவீதிதோறுமியம்பிநன்மகிழ்ச்சியெய்தி
யரும்புகழ்த்தில்லையுள்ளாரியாவருமதிசயித்தார்.

(இ-ள்.) உலகமானது வேதாந்தப்பொருளாகிய இந்தத் திருவாசகத்தமிழைச்சொல்லிப் பெரியபிறப்பினின்று நீங்கவந்து திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடைய செய்தியனைத்தும் அரியபுகழையுடைய தில்லையிலுள்ளயாவரும் தங்கள்கூட்டங்கள்தோறுஞ்சொல்லி நல்லமகிழ்ச்சிபெற்று அதிசயித்தார்-எ-று. (௬௯)

தத்துவமுடிவிலாடுந்தாண்டவந்தம்முட்கண்டு
நித்தலுஞ்சென்றுமன்றினிமலனையன்பாலேத்தி
யித்திறமையர்தில்லையெல்லையில்வைகவிப்பாற்
புத்தரைவாதில்வென்றபுகழினையுரைத்தல்செய்வாம்.

(இ-ள்.) முப்பந்தாறு தத்துவத்தின் முடிவிலே செய்கின்ற சபாநாயகரது நிருத்தத்தைத் தமக்குள்ளேகண்டு நித்தியம்போய் அந்தக்கடவுளைப் பத்தியினாலேவணங்கி யிந்தப்பிரகாரம் மாணிக்கவாசகர் தில்லைமாநகரத்து எல்லையிற்செய்த பன்னகசாலையிலெழுந்தருளியிருக்க, இப்பால் அவர்புத்தரை வாதிலேசெயித்த கீர்த்தியைச்சொல்லுவாம்-எ-று. (௭௰)

## திருவம்பலச்சருக்கம்

### முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௱௰௯.



புத்தரைவாதில்வென்றது.



ஊமைப்பெண்ணைப்பேசவைத்தது. ௯.௪.௪.

திருச்சிற்றம்பலம்.

# புத்தரைவாதில்வென்றசருக்கம்.

மட்டுவிருத்தம்.

தாழுநீடுவேணியண்ணலுள்விடாவோர்மாதவ
ஞழிஞாலவண்மையுண்மையாயுநேயநெஞ்சினன்
சோழனாடுகண்டுதில்லைதொழுதுபின்புபழுதிலா
வீழநாடுதன்னைநாடவெண்ணியங்குநண்ணினர்.

(இ-ள்.) தாழ்ந்துநீடிய சடாபாரத்தை யுடைய பரமசிவனு டைய இரணடுபாதங்களையும் விடாத ஒருதவசியானவர் சமுத்திர ஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவளத்தை ஆயந்தக்க இச்சையுள்ள மநமு டையவராய்ச் சோழநாட்டைக்கண்டு தில்லைமாநகரை வணங்கிப் பின்பு குற்றமில்லாத ஈழதேசத்தைப் பார்க்கவேண்டுமென்று நி னைத்து அஙகேபோயினார்-எ-று. (க)

(இச்செய்யுளெழுசீர்க்கழிநெடிலென்னினுமாம்.)

நண்ணுமாதிமாதவனலங்கொளீழநாடனூ
மண்ணனூனிருந்தவூரடைந்துசேரிடந்தொறு
மெண்ணிலாதகாலமவாழிதில்லைமன்றமென்றுகூ
ருண்ணிலாவுமன்பினூலுரைக்கவேதொடங்கினர்.

(இ-ள்.) அப்படிப்போன தவசியானவர் முதன்மை பெற்ற நன்மையைக்கொண்ட ஈழநாட்டரசன்இருந்த வூரைச்சேர்ந்து மி குந்த உள்ளன்பினாலே தானிருக்குமிடந்தோறுஞ் சிதம்பரம் அள வில்லாதகாலம் வாழ்கவென்றுசொல்லத் தொடங்கினா-எ-று. ()

சென்றுசேரிடந்தொறுஞ்சிறந்தசெம்பொனம்பல
மென்றுகூறிவைகுநாளிலீழநாடன்முன்புபோய்
நன்றிலாதமூடர்தாமயாதிசைஞ்சமன்னனே
யொன்றியாமுரைத்துமென்றுவந்திவ்வாறுகூறினார்.

(இ-ள்.) தான்போய்ச் சேருமிடந்தோறுஞ் சிறக்கப்பெற்ற பொன்னம்பலம் வாழ்கவென்றுசொல்லி யிருக்குநாளில் அங்கே யிருக்கும் தன்மையில்லாத மூடராகிய புத்தர்ஈழதேசத் திராஜாவுக்கெதிரேபோய் நயப்புடன்வணங்கி அரசனே ஒன்றுகேள் நாம் சொல்லுகிறோமென்று மகிழ்ச்சியுடன் இந்தப்படிசொன்னார்கள்.

ஒறுகையில்திறத்தனொருத்தனிந்நகர்க்குளா
னற்கலன்களக்குமாலைநாளுமூண்பணைதயுமே
நிற்கினுமிருக்கினுநிலாவுசெம்பொன்மன்றெனுஞ்
சொற்கிளர்ந்துரைக்குமென்றுசொல்லிமுன்வணங்கினார்.

(இ-ள்.) குறைவில்லாத திறமையுடையவனொருவனொருத்தன் இந்நகரிலேயிருக்கின்றான்" அவனுக்காபரணம் உருத்திராட்சமாலிகை அவன்நாள்தோறும் புசிப்பதுபிட்சை நின்றாலும் இருந்தாலும் பிரகாசத்தையுடைய பொன்னம்பலமென்னுஞ் சொல்லைச் சொல்லுகிறானென்று சொல்லி முன்னேவணங்கினார்கள்-எ-று.()

தரவுகொச்சகக்கலிப்பா.

இன்றிங்கவனைக்கொணர்வீரென்றிசைத்தானிருபனுங்கவருஞ், சென்றன்புடையாய்வருகவுனையழைத்தான் றிறன்மன்னவனென்ன, நன்றென்பதுவுந்தீதுமிலாநாளும்பலி பெற்றுண்பதொழிக், தென்றுங்கருதாருடன்கருமமுளதோவேந்தற்கெனவுரைத்தான்.

(இ-ள்.) அவ்வரசனானவன் இன்று இங்கே அவனைக்கொண்டுவாருங்களென்று சொன்னான், அவருமபோய் அன்புடையவரே உம்மையரசனழைக்கின்றான் வாருமென்றார் அதற்குஅவர் சொல்லுவார் நாள்தோறும் நன்மையுந் தீமையுமில்லாத பிச்சையெடுத்து உண்பதல்லாமல் ஒன்றும் நினையாதவர்களிடத்தும் அரசனுக்குக் காரியமுண்டோவென்றார்-எ-று. (௫)

ஊரிற்பலிகொண்டுண்கினுமற்றொன்றுங் கருமமிலதெனினும், பாரிற்பயிலுவாருயிர்புரத்தல பாரம்நிருபர்க்காதலினால், வேரிற்கமழ்தாரெம்மரசன்றன்பால்வருதல்வேண்டுமெனச், சீரிற்றிகழ்மேவற்றாதருடன்சென்றானொன்றுந் தீமையிலான்.

(இ-ள்.) ஊரிலே பிச்சையெடுத்துண்டாலும் காரியம் ஒன்றுமில்லையானாலும் பூமியிலேயிருக்கின்றவர்களுடைய உயிரையிரட்சித்தல் அரசர்களுக்குப்பாரமாகும் ஆதலினால் கமழ்கின்ற வேராற்செய்த மாலையையுடைய எங்களரசனிடத்திலே வரல்வேண்டுமென்றுசொல்ல நல்லதென்று சிறப்புவிளங்கிய வேலையுடைய தூதருடனேபோனார் தீங்கொன்றுமில்லாத தவசியானவர்-எ-று.

மூன்றும்பிடகமூன்றுணர்ந்துசெயிர்நான்கொழிந்துமுநுசீல, மைந்தும்புனைந்துபார்மிசையாறைந்தடக்குமியல்புடையோன், கந்தங்கெடுதனமுத்தியெனக் காட்டுஞ்சூரவணிருப்பவுடன், சங்கஞ்சிறந்தபுயநிருபனிருந்தானுனையுடைசூழ.

(இ-ள்.) ஆதியாகியபிடகநூன்மூன்றுமறிந்து நான்குகுற்றமுநீங்கிச் சீலமைந்துந்தரித்துக்காமாதியாறும் பஞ்சேந்திரியங்களும் அடக்கப்பட்ட இயல்பையுடையவனைப் பஞ்சகந்தமுங் கெடுவது முத்தியென்று காட்டுகின்றபௌத்தாசாரியன் தன்னுடனே யிருக்

கச்சேலைகள்புடைசூழ அழகுசிறந்தபுயத்தையுடைய புத்தராசனு மிருந்தான்-எ-று. (எ)

உடுக்குந்தனிவெண்கோவணமுமொளிர் பொக்கணமுமா த்திரையு, மெடுக்குஞ்சதங்கைநெடும்பிரம்புமிலகுந் திலதத் திருமுகமு,மடுக்குஞ்சிறுபுன்முறுவலுநின் றசைசெயுஞ்சடையு ங்கண்டரசன், றிடுக்கங்கொளவந்தருகாகவிருந்தான றிருவ ம்பலமென்று.

(இ-ள்.) அப்போது தவசியானவர் உடுக்கப்பட்ட ஒருவெள் ளைக்கோவணமும் பிரகாசிக்கப்பட்டகபாலமும், சதங்கைகட்டிய நெடியபிரம்பும் திலதப்பொட்டணிந்த திருமுகமும், சிறியபுன்சி ரிப்பும், அசைகின்றசடையும்பார்த்து அரசன்திடுக்கிடவந்து அரு கேயிருந்தார் திருவம்பலமென்றுசொலலி-எ-று. (அ)

இருக்குங்கலைவன் றனைநோக்கிப்போதிருவம்பலமென்றி ங், குரைக்குந்தகைமையெவன்கொலென வுலகாள்பவனுக் கவனுரைப்பான், பெருக்குப்புகழாற்றிகழ்வளவன்பிரியாவி ருகட்பேரருளாற், புரக்குந்திருநாட்டறந்தழைக்கும் புலியூ ரென்பதொன்றுளதால்.

(இ-ள்.) இப்படியிருந்த தபோதனனைப்பார்த்து இப்போது நீர்திருவம்பலமென்று இங்கேசொல்லும் தன்மையென்னவென்று வினவ, அவ்வரசனுக்கு அவர்சொல்வார் செல்வத்தை அதிகரிக்க ச்செய்யுங் கீர்த்தியினாலே பிரகாசிக்கின்ற சோழராஜாவானவன் பிரியாத தன்னுடைய கிருபாநோக்கங்களாலே யிரட்சிக்கின்ற சோழநாட்டிலே சிதம்பரமென்றொரு ஸ்தலமுண்டு-எ-று. (௯)

அந்தப்பதிமுன்றில்லைவனமஃதேபுவனமனைத்தினுக்குமு ந்தக்கிளருந்தெய்வதலமதனுண்மூலதானமதா,மிந்தப்புவிக்கு

(இ-ள்.) பொருந்தியபிறவியைநீக்கி ஆன்மகோடிகளுக்கு நன்மையான மோட்சத்தைக்கொடுப்பதற்கு நினைக்கின்ற அனேக சமயதெய்வங்களில் யானேவல்லவனென்று திருவடிமேல் அழகு விளங்கிய பொன்னினாற்செய்த வீரக்கழலை யணிந்து வலிமையுடைய கொடியுங்கட்டி அந்தக்கருவத்தால் அருட்சத்தியாகியஉமாதேவிகாண நடனஞ்செய்தான்-எ-று. (ωஉ)

தேக்குஞ்சடிலமுடிககடவுளிருதாள்கருதாத்தீமநமும்,வாக்குஞ்செயலுங்கொடியாருமொருகாற் பொன்னமபலமென்னி, லாக்கந்தருமஞ்செழுந்திருபத்தோராயிரத்தோடறுநூறு, நாக்கொண்டுரைக்கு மதற்குநிகரொன்றுன் குன்றாநற்புகழான்.

(இ-ள்.) நிறையப்பெற்ற சடாமுடியையுடைய பரமசிவனுடைய இரண்டுபாதத்தை வணங்காத தியமநமும், வாக்கும்செய்கையுமுடைய கொடியவர்களும், ஒருதரம் நிலைபெற்ற பொன்னம்பலமென்று சொன்னால் செல்வத்தைத்தருகின்ற பஞ்சாக்கரத்தை இருபத்தோராயிரத்தறுநூறுதரம் நாவைக்கொண்டு சொல்வதற்கு நிகரல்லவாவென்றார் குறையாதநல்ல கீர்த்தியையுடைய தவசியானவர்-எ-று. (ωங)

நீறுந்திருவஞ்செழுத்துமிலா நிருபர்திருவம்பலமென்று, கூறும்பொருளிங்கிதுவாகுமென்றான் குன்றாமெனுங்குணத்தான், றேறும்பிடகமுன்றுமுனாசெய்யுந் தலைவனல்லாது, வேறுங்கடவுளொன்றுளதோ வென்றேபுத்தன் வெகுண்டுரைப்பான்.

(இ-ள்.) மலையென்றுசொல்லுங் குணத்தையுடைய தவசியானவர் விபூதிபஞ்சாக்கரமில்லாத அரசனே திருவம்பலமென்று கா

ம்சொன்னதற்குப்பொருள் இதுவாகுமென்றார் அப்போது தேறுகின்ற பிடகாகமமூன்றும் சொன்னதலைவனல்லாமல் வேறே ஒரு தெய்வமுண்டோவென்று கோபித்துப் பின்னையுஞ்சொல்வான் புத்தகுருவானவன்-எ-று (௰௪)

சென்றேதில்லையெனும்பதியிற் சேர்வேன்வாதுசெய்தவன்று, னின்றேநடிக்குங்கழலீடு நீடுங்கொடியுமீங்கறுப்பே, னொன்றேகட்வுள் புத்தனெனவுலகோரறியவுரைத்தந்த, மன்றேபோதிநிழற்பெருமாள் பள்ளியென்ன வழங்குவிப்பேன்.

(இ-ள்.) அப்படியானால் தில்லைமாநகருக்குப் போய்வாதுசெய்து அவரிருந்து திருத்தஞ்செய்கின்ற பாதத்திலிடுகின்ற வீரக்கழலையும் பிடிக்கின்றகொடியையும், அறுத்துப்போடுவேன்புத்தனொருவனேதவிர வேறுதெய்வமில்லையென்று அந்தச்சபையை அரசமரநிழலி லிருக்கும் புத்தன்கோயிலென்று சொல்லும்படி வைப்பேனென்றான் புத்தகுருவானவன்-எ-று. (௰௫)

இந்தக்கருமத்தினமூன்றிலியானே முடிப்பனெனவெழுந்து, சந்தச்சிவிகைமேற்கொண்டு தன்றாள்வணங்குங்கணஞ்சூழ, நந்தக்கிளருந்திரைக்கடலுநாடுங்காடுமகன்றேகிப், புந்தித்துயரங்கொண்டொல்லைசென்றான்புத்தன்புலியூரில்.

(இ-ள்.) இந்தக்காரியத்தை மூன்றுதினத்தில் யானேமுடிப்பேனென்று அழகியசிவிகையின்மீதிலேறிக்கொண்டு தன்னுடைய பாதத்தைவணங்குகின்ற பௌத்தக்கூட்டங்கள்சூழ மிகவும்பிரகாசிக்கின்ற அலையையுடைய கடலும்நாடுங்காடும்நீங்கிப் புத்தியிலே வியசனங்கொண்டு சீக்கிரத்திலே புத்தகுருவானவன் சிதம்பரத்துக்குப்போயினன்-எ-று. (௰௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னனுந்தனதுசெல்வமகட்குளமூகைநீங்கிப்
பொன்னினம்பலநதிலேகவெண்பது பொருந்தவுன்னித்
தன்னெடுந்தானைசூழத்தனிபபெருஞ்சிவிகையேறிச்
சென்னிநன்னாடுசேர்ந்துதில்லையினெல்லைபுக்கான்.

(இ-ள்.) புத்தராசனுந் தன்னுடைய செல்வம்போன்ற புத்திரிக்கு முன்னமேயுண்டான ஊமைத்தன்மைநீங்கச் சிதம்பரத்திற்குப் போகவேண்டுமென்பதை நினைந்துந் தன்னுடைய சேனைகள்சூழ ஒப்பற்றபெரியசிவிகையிலேறிகொண்டு சோழநாட்டில் வந்து தில்லைமாநகரத்துக்கு வந்தான்-எ-று. (௰௭)

இங்கிவன்செல்லுமுன்னமெய்தியபுத்தனங்கி, செங்கரன் றில்லையெல்லைச் சிவிகையினிழிந்துசென்று, பொங்குதண் புனல்சேர்சென்னிப்புலீச்சரவான்பொற்கோயிற், றங்குசெங்கனகசாலந்தயங்குமண்டபத்திலானான்.

(இ-ள்.) இந்தப்புத்தராசன் வருவதற்கு முன்னேவந்த புத்தகுருவானவன் அக்கினியைத்தரித்த சிவந்தகையையுடைய பரமசி[illegible]னுடைய தில்லைமாநகரத்து எல்லையின்முன்னே சிவிகையைவிட்டிறங்கி மிகுந்தகுளிர்ச்சிபொருந்திய கங்கையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனது ஆலயத்திலே பொன்னினாற்செய்த மண்டபத்தில் வந்து சேர்ந்தான்-எ-று. (௰௮)

ஆங்கவனிருப்பச்சென்றவரசனுமிறைஞ்சியேத்தி
யோங்கியமகிழ்ச்சியெய்தியமர்ந்துழியுரகராசி
தாங்கியசடிலன்கோயிறன்னிலுட்கருமஞ்செய்வா
ரீங்கிவர்வரவுகண்டேயாவருமொருங்குசேர்ந்தார்.

(இ-ள்.) அங்கேயிருந்த புத்தகுருவைப் புத்தராசன் வணங்கித் துதிசெய்து உயர்ந்தமகிழ்ச்சியடைந் திருந்தபோது சருப்பக்கூட்டத்தைமுடித்த சடையையுடைய பரமசிவனது கோயிலிலே பணிவிடைசெய்பவர்கள் இவர்கள்வருதலைக்கண்டு எல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்தார்கள்-எ-று. (௰௯)

கலிவிருத்தம்.

சுத்தமநநொந்துகனன்றெனவெகுண்டே
சித்தமயர்வெய்தும்வகைசின்மொழிகள்கூறி
மத்தனுறைதில்லைநகரெல்லையையகன்றே
புத்தகடிதேகிதுபொறேமெனவுரைத்தார்.

(இ-ள்.) அப்படிச்சேர்ந்தவர்கள் தங்கள்தங்கள் மநநொந்து அக்கினியைப்போற் கோபித்து அவர்களாயாசங் கொள்ளும்படி சிலவார்த்தைகளைப்பேசிக் கடவுளிருக்கின்ற தில்லைமாநகரினெல்லையைவிட்டுப புத்தனே, சீக்கிரத்திலோடிப்போ இது நாங்கள் பொறுக்கமாட்டோமென்று சொன்னார்கள்-எ-று. (௨௰)

தார்வளவன்முன்னருயர்தர்க்கவுரைகொண்டே
நீர்பரவுசைவநிலையன்றெனமொழிந்தே
சீர்மருவுபுத்தனுயர்தெய்வமெனவிப்போ
தேர்பெறவுரைப்பதலதேகுவதிலென்றான்.

(இ-ள்.) வெற்றிமாலையையணிந்த சோழன்முன்னே உயர்ந்த தருக்கம்பேசி நீங்கள்போற்றப்பட்ட சைவமார்க்கம் நிலையன்றென்றுசொல்லிச் சிறப்புப்பொருந்திய புத்தனே உயர்ந்ததெய்வமென்று அழகுபொருந்திய இப்போது சொல்வதல்லாமற் போவதில்லையென்றான்-எ-று. (௨௧)

புத்தனவனிவ்வுரைபுகன்றபினவர்க்கு
மித்திறமுரைக்குவமெனக்கடிதகன்றே

மெய்த்தவர்கள்வேதமுதலோர்பரிகலத்தோர்
தத்தமனைதோறுமிதுசாற்றினர்களன்றோர்.

(இ-ள்.) புத்தகுருவானவன் இந்தவார்த்தையைச் சொன்ன பின்பு யாவர்க்கும் இதைச்சொல்லுவோமென்று சீக்கிரத்திலே உண்மையாகிய தபோதனர்களுக்கும், தில்லைமூவாயிரவர்களுக்கும், பரிகலத்தார்களுக்கும், அவரவர்கள் வீடுகள்தோறும் போய்ச் சொன்னார்கள்-எ-று. (உஉ)

புண்ணுழையுமவேனிகர்புகன்றமொழிகேளா
வண்ணலுறைகோயிலிடையாவருமடைந்தே
வண்ணமணிமண்டபமதெய்திவருபுத்த
னெண்ணமதுகேட்குவமெனக்கடிதுசென்றார்.

(இ-ள்.) புண்ணிலே வேல்நுழைந்ததுபோல இவர்களெல்லாஞ்சொன்ன சொல்லைக்கேட்டுச் சபாநாயகரெழுந்தருளி யிருக்கின்ற கோயிலிலே எல்லோரும்போய் அழகியரத்தினம் பதித்த மண்டபத்தி லிருக்கின்ற புத்தகுருவினுடைய நினைப்பென்னவென்று கேட்போமென்று சீக்கிரத்திற்போனார்கள்-எ-று. (உ௩)

தெய்வநரரானவர்கள்செல்லவெதிர்வாரா
மெய்யுணர்வில்புத்தனைவெகுண்டுபலசொல்லா
வுய்வதறியாதவொருபயமிலாதே
யிவ்வகையிருந்தமதியாமையெதுவென்றார்.

(இ-ள்.) தெய்வத்தன்மையை யுடைய தில்லை மூவாயிரவர் போக எதிர்கொண்டுவாராத உண்மையுணர்வில்லாத புத்தனைக் கோபித்துப் பலபேச்சுகள்பேசிப் பிழைக்கும்வகையறியாதபடியினாலே அஞ்சுதலில்லாமல் மதியாமலிருந்த தன்மை யென்னென்று கேட்டார்கள்-எ-று. (உ௪)

அங்கமறையாகமபுராணமவையாலே
துங்கடவுளேகடவுளென்றுநவில்வீரே
லெங்கடவுளேகடவுளென்றுநவில்வேன்யா
னிங்கெனெதிர்கூறுமெனவேயவனுரைத்தான்.

(இ-ள்.) ஆறுசாத்திரமும், நான்குவேதமும், இருபத்தெட்டாகமமும், பதினெண்புராணமும் ஆகிய அவைகளாலே உங்களுடைய தெய்வமேதெய்வமென்று சொல்வீர்களானால், எங்கள்தெய்வமே தெய்வமென்று யான்சொல்லுவேன், இங்கேயென்னெதிரேசொல்லுமென்று சொன்னான புத்தகுரு-எ-று- (உரு)

போற்றுமறையந்தணர்கள்புத்தனைவெகுண்டே
தோற்றனையெனக்கலைஞர்சொல்லவுனைவெல்வோ
மாற்றமினியுன்னுடனுரைக்குமதுமற்றோர்
சேற்றினெதிர்கல்லெறிதல்செய்வதலதுண்டோ.

(இ-ள்.) யாவராலுந் துதிக்கப்பட்ட தில்லை மூவாயிரவர்கள் இதுசொன்ன புத்தகுருவைப்பார்த்துக் கோபித்து உன்னைவித்துவான்கள் தோற்றாயென்றுசொல்லும்படி செயிப்போம் இனிஉன்னுடனே பேசுவது சேற்றின்மேல் கல்லெறிவதுபோலல்லாமல், வேறுண்டோவென்றார்கள்-எ-று. (உசு)

நன்றிதருவாருமொருநூனிகுனசெய்தா
னின்றதன்வெகுட்சியைநிறுத்தல்கடனுமா
மின்றிழியநின்னுடனிகழ்ச்சியெனினுஞ்சீ
ரொன்றுமிலையானவுனையோருரையில்வெல்வோம்.

(இ-ள்.) ஒருத்தருக்கு நன்மையைச்செய்யப்பட்ட பெரியோர்களும்; ஒருகாயானது குலைத்தால், அங்கேநின்று அதன்கோபத்தை ஆற்றுவது முறைமையாகுமென்பார் ஆதலால், இன்று இழி

வினையுடைய உன்னோடுபேசுகிறது நமக்குத்தகாதகாரிய மானாலும், சிறப்பொன்றுமில்லாத வுன்னைஒருசொல்லிலே செயிப்போமென்றார்கள் தில்லைமூவாயிரவர்-எ-று. (உஎ)

மிக்கதிறன்மன்னவருமெய்யுணர்வினோருந்
தொக்கசபைமுன்னர்நமதர்க்கவுரைசொன்னாற்
றக்கதெனலாமிதுதகாதகிதுவென்று
லெக்கலகமும்பிலையிதேகருமமாமால்.

(இ-ள்.) மிகுந்த திறலையுடைய அரசர்களும், மெய்யுணர்வினையுடைய பெரியோர்களுங் கூடியிருக்கின்ற சபையெதிரே நம்முடைய தருக்கவார்த்தையைச்சொன்னால் அது தக்கது; இதுதகாதென்று அவர்கள் சொல்லுவார்களானால் எந்தக்கலகமுமில்லை, இதுவே காரியமாகுமென்றார் தில்லைமூவாயிரவர்-எ-று. (உஅ)

உத்தரமுரைக்கவறியாதுபுலியூரார்
புத்தனைமுனிந்தனர்புடைத்தனர்களென்றே
யித்தலமுரைத்துவிடுமென்றுவளவன்பான்
மெய்த்தவருரைத்தெழுதுமோலையைவிடுத்தார்.

(இ-ள்.) உத்தரஞ்சொல்ல மாட்டாமல், தில்லைமூவாயிரவர் புத்தகுருவைக் கோபித்தார்கள் அடித்தார்களென்று இந்தவுலகஞ் சொல்லுமென்று சோழராசாவை வரும்படி ஒருஓலை யெழுதிவிட்டார்கள் இவர்களெல்லாம்-எ-று. (உகூ)

அந்தணர்பெருந்தவருங்கலையுணர்ந்தோர்
வந்தணுகுநாளைமணிமன்றுதொழவென்றே
புந்திமகிழோலைபலபோக்கியபின்வெய்யோன்
முந்துறவொளித்தனன்முளைத்தனனிராவோன்.

(இ-ள்.) பிராமணர்களும் பெரியதபோதனர்களும் அரியகலை க்கியானத்தில் வல்லவரும் நாளைச்சிதம்பரத்தைத் தெரிசிக்க வந்து சேருமென்று புந்திமகிழும்படியாகிய பலவோலைக ளெழுதிவிட் டார்கள் அப்போது சூரியன்மறைந்தான் சந்திரனுதயமானன்-எ-

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துங்கவானென்னுமாதின்சுடர்நுதற்றிலதமென்னக்
கங்குலாமடந்தைபார்க்குங்கவின்கொள்கண்ணடியென்ன
சங்கவார்குழைபாரிட்டதரளவெண்கவிகையென்னத் [ச்
திங்கண்மாகடவுட்போன்றச்சிறந்ததுஞாலமெல்லாம்.

(இ-ள்.) உயர்ந்த ஆகாயமாகிய மங்கையினுடைய ஒளிவிள க்குகின்ற நெற்றியிலணிந்த திலதப்பொட்டுப்போலும், இரவாகி யமங்கையானவள் பார்க்கும் அழகுபொருந்திய கண்ணடிபோலு ம், நெடியசங்கக் குழையுடைய பரமசிவனுக்கிட்ட ஒருவெள் ளிய முத்துக்குடைபோலும், சந்திரன்றோன்ற உலகமெங்குஞ் சிறப்புப்பெற்றது. (௯௧)

இன்றொருதினமுந்தேராவிங்கிருநாளையாங்க
ளுன்றனதுயர்ச்சியின்மைகாட்டுவோமுலகிற்கென்று
நன்றிகொண்மனையிற்சென்றேயாருநல்லுணவுமார்ந்தி
யன்றிருண்மேன்மையாளருந்துயில்பயிலுங்காலை.

(இ-ள்.) இன்றொரு பொழுதுமாத்திரம் புத்தனே இங்கிருப் பாய் யாங்கள் நாளை உன்னுடைய தாழ்வைஉலகத்திற்குக் காட்டு வோமென்று நன்மையைக்கொண்ட வீட்டிற்குப்போய் அறுசு வையும் நிறைந்த நல்லஉணவையுண்டு அன்றிராத்திரி மேன்மை பொருந்தியவர்களெல்லாம் நித்திரைசெய்யும்போது-எ-று. (௯௨)

அழகுறமன்றிலாடுமையர்கைப்பிரம்பு தாங்கித்
தழைசடைமுடியுமேனிசாத்தியநீறுமாகி
விழைதருவடிவங்கொண்டுவெளிப்படக்கனவில்வெய்யோ
னெழுவதன்முன்னமெய்தியாவர்க்குமிதுபுகன்றான்.

(இ-ள்.) அழகுபொருந்திய பொன்னம்பலத்தில் நிருத்தஞ்செய்கின்ற சபாநாயகரானவர் கையிற்பிரம்புக்கொண்டு தழைந்த சடைமுடியும் திருநீறணிந்த திருமேனியும் உடையவராய் எல்லோரும் விரும்புகின்ற திருவடிவங்கொண்டு சூரிய உதயமாகுமுன்னேவந்து கனவிலேஎல்லோர்க்கும் இது சொன்னார்-எ-று. ()

வருந்துவதொழிமினம்மூரெல்லையில்வைகியென்பா
லிருந்தனன்வாதவூரனிவ்வுரைகேட்டபோதிற்
பொருந்தியதருக்கநூலாற்புத்தரைவெல்வானின்னே
யருந்தவமுடையநீர்போயழைத்திடுமவனையென்றார்.

(இ-ள்.) வருந்துவதையொழியுங்கள் நம்முடைய தில்லைமாநகரத்து எல்லையில் திருவாதவூரனாகிய மாணிக்கவாசகனிருக்கின்றான் இந்தச்செய்தியைக்கேட்டால் பொருந்திய தருக்கசாத்திரத்தைக்கொண்டு புத்தரைவாதுசெய்துவெல்வான், ஆதலாலிப்பொழுதே அரியதவத்தையுடைய தில்லைமூவாயிரவரே நீங்கள்போய் அவனையழையுங்களென்றார் சபாநாயகர்-எ-று. (௯௪)

கண்டனர்கனவுதன்னில்விழித்தனர்கனகமன்றி
லொண்டொடிபாகனன்பாலுரைத்ததுகருத்திலாய்ந்து[ன்
கொண்டனர்மகிழ்ச்சிசெங்கைகுவித்தனர்முடியிற்கோயி
மண்டபமிசையிலெல்லாமாந்தரும்வந்துதொக்கார்.

(இ-ள்.) இப்படிச் சொப்பனத்திலேகண்டார்கள் பின்புவிழித்தார்கள் பொன்னம்பலத்திலே உமாதேவிபாகராகிய சபாநாயக

ர் அன்பினாலேசொல்லியதைக் கருத்திலாராய்ந்து மகிழ்ச்சிகொ ண்டார்கள் சிரசின்பேரிலே சிவந்தகையைக்குவித்தார்கள் கோயி ன்மண்டபத்திலே எல்லாரும்வந்து சேர்ந்தார்கள்-எ-று. (௬௫)

புல்லறிவுடையபுத்தன்புகன்றதற்கிரங்கிப்பின்ன
ரெல்லையில்கருணையான்வந்திருங்கனவதனிலெய்திச்
சொல்லியமொழியினாலேசோதிசேர்முகத்தராகி
வல்லிருட்கிடைந்துவெய்யோன்வரவிரிகமலமொத்தார்.

(இ-ள்.) அற்பவறிவையுடைய புத்தகுருசொன்ன பேச்சுக்கு இரக்கமுற்றுப்பின்பு அளவில்லாதகிருபையினாலே கடவுள்கனவி லேவந்துசொல்லிய சொல்லினாலே முகமலர்ச்சியுடையவராய்இ ருளுக்கு ஒதுங்கிப்பின்பு சூரியன்வரவிரிந்த தாமரைமலரை யொ த்தார் தில்லைமூவாயிரவர்-எ-று. (௬௬)

தெய்வீகமானமன்றிற்றிருநடம்புரியுநாதன்
றைவருநீறுஞ்செய்யசடையுநற்பிரம்புமாக
மைவிரிகங்குற்காலைவந்துநன்மகிழ்ச்சியெய்த
விவ்வகைமொழிந்தாரென்றேயாவருங்கனவுசொன்னார்.

(இ-ள்.) தெய்வீகமான சபையிலே திருநடனஞ்செய்யுஞ் ச பாநாயகர் விபூதிபூசிக்கொண்டு சிவந்தசடையும் நல்லபிரம்பையு முடையவராகக் கரியநிறத்தையுடைய இராத்திரியில் எழுந்தருளி நல்லமகிழ்ச்சியடைய இப்படி அநுக்கிரகஞ்செய்தாரென்று யாவ ருந் தாங்கள் கண்டகனவைச்சொன்னார்கள்-எ-று. (௬௭)

அத்தனைமன்றுளாடுமையனைவியந்துகூறித்
தத்தமிலன்புகூர்ந்துதனித்துளம்வருத்தநீங்கி
மெய்த்தவவாதவூரர்மேவிடத்தணுகுவோமென்
றுத்தமபன்னசாலைபொல்லையிற்குறுகினார்கள்.

(இ-ள்.) அந்தணனாகியும், சிற்சபையிலே நிருத்தஞ்செய்கின்ற ஐயனாகியும், இருக்கின்ற சபாநாயகனை அதிசயித்துச்சொல்லித் தங்கள் தங்களுக்குள்ளே அன்பமிகுந்து தனித்து மனவருத்தநீங்கி மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர் இருக்கின்ற இடத்திற்குப்போவோமென்று உத்தமமாகிய பன்னகசாலையிற் சீக்கிரத்திற் போனார்கள் தில்லைமூவாயிரவர்-எ-று. (௯௮)

கூடினார்பன்னசாலைகூர்நட்குன்றையன்பா
னாடினர்நயந்துகண்டார்நளினவாசனத்திருந்திப்
பீடினாரிருந்தயோகம்பெயர்ந்தனர்வியந்துமன்றி
லாடினருரைத்தவெல்லாமாங்கவர்க்கியம்பினார்கள்.

(இ-ள்.) அப்படிப்போனவர்கள் பன்னகசாலையி லிருக்கின்ற சிறந்த திருப்பாமாலையாகிய மாணிக்கவாசகனை அன்பினாலேதேடி நயப்புடனே கண்டார்களப்போது அவர் பதுமாசனத்தின்மேலிருந்த யோகம்நீங்கினார் அதுகண்டுசபாநாயகனவனிடத்திலேவந்தநுக்கிரகஞ்செய்ததையெல்லாம் அவருக்குச் சொன்னார்கள் தில்லைமூவாயிரவர்-எ-று. (௯௯)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அந்தமொழியன்பினர்செவிப்புலனிலங்குதலு மன்றிறைபணித்தருளைநா, வந்தவருடன் கடிதுசென்றுதிருமன்றனைவணங்கியருள்பெற்றுமயலாஞ், சிந்தையிருந்தமணிமண்டபமதெய்தியவர் தீயமுககாடிவிடவோ, நந்துமெனவேயெழினிகொண்டுமறைவித்தெதிரிருந்தனர்நலங்கொளணைமேல்.

(இ-ள்.) அந்தத்திருவார்த்தையானது மாணிக்கவாசகர் செவியினிடத்திலே சேர்ந்தமாத்திரத்தில் முன்னமே கடவுள்சொல்லியிருப்பதை நினைத்துவந்த தில்லைமூவாயிரவருடனே சீக்கிரம்போ

ய் அழகிய சபாநாயகரைவணங்கிக் கிருபையைப்பெற்றுப் பௌத்தர்களிருந்த மண்டபத்திற்குப்போய் அவர்கள் தீமையுள்ள முகத்தைப்பார்த்தால துன்பமுண்டாகுமென்று திரைபோட்டுக் கொண்டு ஆசனத்திலே யெழுந்தருளியிருந்தார்-எ-று. (௬௰)

மன்னுமறையந்தணர் புராணிகரருங்கலைகள் வல்லவர்நல்லோர்களுடனே, சென்னிவளவன்கடிதுவந்துதிருமன்றமணைந்திர்சென்று தொழுதங்கணகலா, மின்னுமணிமண்டபமதெய்தியருளன்பரைவியந்தடிவணங்கியருகா, நன்னரணையின்புறமிருந்தனன் விரிந்தகலைநாணிறைவுகொண்டமதிபோல்.

(இ-ள்.) நிலைபெற்ற வேதப்பிராமணர்கள் புராணிகர் கலைஞானவல்லவர்கள் பெரியோர்களுடனே சோழராசா சீக்கிரத்தில் வந்து அழகியசபாநாயகரைத் தரிசனமபண்ணிக்கொண்டு அதைவிட்டுப் பிரகாசம்பொருந்திய இரத்தினமிட்டிழைத்த மண்டபத்திற்குவந்து கிருபைமிகுந்த மாணிக்கவாசகர் திருவடியைவணங்கி அவருக்குப் பக்கத்திலே சந்திரன்போல ஆசனத்திலிருந்தான்-எ-

ஈழவளநாடனுமெழுந்தடிபணிந்து திறையிட்டகுறைநல்கியிறைவா, வாழிமிகவாழியெனநின்றபொழுதங்கவனைமன்னர்பெருமானுமகிழா, வேழமிவைநல்லவிலையில்லையிமணிக்கென வியந்தருகிருத்தியவருஞ், சூழுமவைதங்குமுழியங்கயலிருந்தனர்கள் சூழ்ந்துகரிசொல்லுமயலோர்.

(இ-ள்.) ஈழதேசத் திராசனும் எழுந்து சோழராசாவைப்பணிந்து குறையாகவிருந்த திறையையுங்கொடுத்து அரசனே மிகவும் வாழக்கடவாயென்று துதித்தபோது அந்தஅரசனை அரசர்க்கரசனுகிய சோழராசாவும் சந்தோஷித்து நீகொடுத்தயானை மெத்தவும் நல்லதாயின நீகொடுத்தஇரத்தினத்துக்கு விலையில்லையென்று

அதிசயித்து பக்கத்திலிருக்கச்சொல்லி எல்லோருஞ் சூழ்ந்திருக்குஞ்சபையினிடத்திலே பக்கத்திலிருந்தார்கள், ஆலோசித்துசாட்சி சொல்பவர்கள்-எ-று. (௪௨)

தில்லைநகரந்தணர்தபோதனர் சிறந்தினிதிருந்துழிவிரிந்த சிவனூல், வல்லவரிழிந்தகுணபுத்தனுடன்வாதுசெயுமன்னு சபைகாணவருவோர், தொல்லைமறைதந்தவன்முகுந்தன் முநிவோரொழுவர் சூழுமிருநான்குதிசைமே, லெல்லையினிருப்பவருருத்திரர்கள் விஞ்சையரிராப்பகலிலங்குகதிரோர்.

(இ-ள்.) தில்லை மூவாயிரவர்களும், முநிவர்களும் சிறப்பாக விருந்தமாதிரத்திலே மாணிக்கவாசகர் இழிவுபெற்ற குணத்தையுடைய புத்தனுடனே வாதுசெய்யும்நிலைபெற்ற சபையைக்காணவருபவர்கள்யாவரென்றால், பிரமதேவன்- மகாவிஷ்ணு-சத்தமுநிவர்கள் அட்டதிக்குப்பாலகர்கள் உருத்திரர்கள் விஞ்சையர்கள்இரவும்பகலும் விளங்குகின்ற சந்திரசூரியர்கள்-எ-று. (௪௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தன்பெருந்தானைசூழவிருந்ததண்பொன்னிநாடன்
றென்பெருந்துறையூர்நாடன்றிருவடிவணங்கிநின்று
நின்*பரஞ்சைவஞானநிலைமையைநிறுத்தல்பின்னை
யென்பரம்புத்தர்தம்மையிங்குயிர்செகுப்பதென்றான்.

இ-ள்.) தன்னுடைய சேனைகளெல்லாஞ் சூழும்படியிருந்த சோழன் மாணிக்கவாசகர் திருவடிகளைவணங்கிநின்று சுவாமி உம்முடையபாரம் சிவஞானநிலைமையை உலகத்திலே நிறுத்துவது என்பாரம் புத்தனைஉயிர்போக்குவ தென்றான்-எ-று. (௪௪)

வளவனிவ்வகையிற்கூறவந்தபொய்ப்புத்தரெல்லா
முளமயர்வெய்தவாதவூரருண்மகிழ்ச்சியெய்திக்

* பாரம பரமெனவிகாரப்பட்டது.

களவுனைபகர்வாய்வந்தகாரணமுனைநீயென்னக் [வான்.
கிளர்செவிநுழைவேல்போலக்கேட்டவனிதனைச்சொல்

(இ-ள்.) இப்படிசோழராசன் சொல்லவந்திருக்கின்ற அபத்தம்பேசும் புத்தர்களெல்லாம் மநவருத்தமடைய மாணிக்கவாசகர் மகிழ்ச்சியடைந்து புத்தனைப்பார்த்துத் திருட்டுவார்த்தை சொல்லப்பட்டவனே, நீவந்தகாரணத்தை சொலவெலன்றுகேட்க வேலாயுதஞ் செவியிலேநுழைந்ததுபோல அவ்வுனைகேட்ட புத்தனைவன் இதைச்சொலவான்-எ-று. (௬௫)

மன்னுமெங்கடவுளல்லான்மற்றிலைகடவுளென்றே
யிங்கெடுப்பதியிலெய்தியியம்பியிங்கெவருங்காணப் [டி
பொன்னினம்பலத்தேயெங்கள்புத்தனைவைத்தல்வேண்
டென்னல்வந்திருந்தேனென்குவேறிலைநினைத்ததென்றான்.

(இ-ள்.) நிலைபெற்றயெங்கள் தெய்வமல்லாமல் வேறேதெய்வமில்லையென்று இந்தவூரில்வந்து சொல்லி இங்கேயெல்லோருங்காணப் பொன்னமபலத்திலே எங்கள் புத்தனைவைக்கவிரும்பிநேற்றே வந்திருக்கின்றேன் இதல்லாமல்யானினைத்தது வேறொன்றுமில்லையென்றான் புத்தகுரு-எ-று. (௬௬)

என்றலும்வாதவூரெம்பிறைவர்புன்முறுவலெய்தி
முன்றவமொன்றுமில்லாய்முயலிபமாவதுண்டோ
நன்றதுநிற்கவுன்றனற்பெருங்கடவுடானுஞ்
சென்றவனடியிற்சேருஞ்செய்தியுங்கூறுகென்றார்.

(இ-ள்.) இப்படியென்று சொல்லியவளவில் மாணிக்கவாசகர் புன்னகைகொண்டு முன்பிறப்பிலே தவமொன்றுமில்லாதவனே முயல்யானையாவதுண்டோ அல்லது அதுநிற்க, உன்னுடைய நல்லபெரியதெய்வமும் ஆன்மாக்களவனடியிற்சேருஞ் செய்தியுஞ் சொல்லென்றுகேட்டான்-எ-று. (௬௭)

அண்ணலாருரைத்தபோதிலாங்கவன்வெகுட்சியெய்திக்
கண்ணிலாதவர்க்குவெய்யோன் கதிரொளிகாட்டலாமோ
நண்ணலாவெங்கடாதனற்புகழுரைக்கினன்று
வெண்ணிலாயிரங்கள்வேண்டுமென்றுபினிதுபகன்றான்.

(இ-ள்.) இப்படி மாணிக்கவாசகர்சொன்ன வளவில் அந்தப் புத்தகுருவானவன் கோபமடைந்து கண்ணில்லாதவனுக்குச் சூரியகிரணத்தி னொளியைக்காட்டக்கூடுமோ, பொருந்துவதற்கரிதாகிய எங்கள்புத்ததேவனுடைய நல்லகீர்த்தியைச் சொல்லவேண்டுமானால் நல்லகாவானவைகள் பல்லாயிரம் வேண்டுமென்று பின்பு இதுசொன்னான்-எ-று. (௪௮)

அறந்திகழ்பிடகநன்னூலோதியன்புடையனாகிப்
பிறங்குபல்யோனிதோறும்பிறந்துயிர்க்குறுதிசெய்து
மறந்தருகோறலாதிநால்வகையொழிந்துமேன்மை
சிறந்துளபோதிநீழற்சேர்வனெம்மிறைவனாவான்.

(இ-ள்.) தருமம்விளங்குகின்ற நல்லபிடகாகமமுஞ்சொல்லி அன்பையுடையவனாய்ப் பிரகாசிக்கின்ற அனேகயோனிகள் தோறும்பிறந்து ஆன்மகோடிகளுக்கு உறுதிசெய்து பொல்லாங்கைத் தருகின்ற கொலை-களவு-பொய்கள்ளுண்ணல்-என்னும் நான்கு குற்றங்களையும் நீக்கிமேன்மைசிறந்திருக்கின்ற அரசமரநிழலிலே சேர்ந்திருப்பானெமதுகடவுள்-எ-று. (௪௯)

மேவியகருவிற்சேருமுருவம்வேதனைகுறிப்புப்
பாவனையுடன்விஞ்ஞானம்பஞ்சகந்தங்கள்கூடி
யோவில்பல்லுணர்வுண்டாக்கியொழிவதுபிறவித்துன்ப
மாவதுபொன்றக்கேடாயழிவதுமுத்தியென்றான்.

(இ-ள்.) பொருந்தியகருப்பத்திற் சேருகின்ற உருவம் வேதனைக்குறிப்புப் பாவனைவிஞ்ஞானம்ஆகிய பஞ்சகந்தங்களுங் கூடி

ஒழிவில்லாத அனேகஅறிவுண்டாகி நீக்குவது பிறவித்துன்பமாம், அதுநீக்கக் கேடாயழிவது மோட்சமென்முன்-எ-று. (௫௰)

வாசவூரண்ணலாரும்வண்புனற்பொன்னிநாடன்
றீதிலாமுகத்தினூடுசிறந்தருட்பார்வைநல்கிப்
பேதையாயறிவிலாமல்பித்துனைபகரும்புத்தற்
கேதியாமின்றுசொல்வதென்றுபினிதுபுகன்முர்.

(இ-ள்.) அப்போது மாணிக்கவாசகரும் நீர்வளமிகுந்த காவிரிசூழ்ந்த நாடானகிய சோழராஜாவினது களங்கமற்ற முகத்தைப் பார்த்துக் கிருபாநோக்கஞ்செய்து அறியாமையினல் மயங்கிக்கொண்டு பயித்தியவார்த்தைசொல்லும் புத்தனுக்கு இன்றுயாமென்ன சொல்வதென்று பின்பு இதுசொன்ஞர்-எ-று. (௫௧)

தருமமுண்டென்றுநன்னூற்சாற்றினன்றலேவனென்னை
மருவியவுணர்வுண்டாகிமறைந்திடுங்கணத்திலென்னை
பொருளுடனுனைநீதேடிப்புகலுமுனுணர்வுபோனு
லிருடருநின்னூல்சொல்வதெப்படிகூறல்வேண்டும்.

(இ-ள்.) தருமமுண்டென்று புத்தனைவன் பிடகநூல்சொன்னுனென்றாய் பொருந்திய அறிவுதோன்றிக் கணநேரத்தில்மறைந்துபோமென்றாய் சொல்லும்பொருளும் நீதேடிச் சொல்லுமுன்னே உணர்வுகெட்டால் அஞ்ஞானத்தைத்தருகின்ற உன்னூல்சொல்வது எப்படிசொல்லென்முர் மாணிக்கவாசகர்-எ-று. (௫௨)

ஆதலாலறநூலென்பதுனக்கிலேயுயிர்கட்காகப்
பேதமாம்யோனிதோறும்பிறந்தனனிறைவனென்றாய்
தீதுசேரொருவர்மாலேதீர்க்கவர்தவர்கடாமும்
போதமால்கொள்ளிலம்மால்போதவங்குள்ளதாமோ.

(இ-ள்.) ஆகையினலே தருமசாத்திரமென்பது உனக்கில்லே, ஆத்மாக்களுக்காகஅனேகம் யோனிகள்தோறும் உன்கடவுள்போ

ய்ப் பிறந்தானென்றாய் குற்றம்பொருந்திய ஒருவர்மயக்கத்தைத் தீர்க்கவந்தவர்களும் அதிகமயக்கத்தைக்கொண்டால் அந்தமயக்கம் போருமோவென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (நிங)

கொல்வதுகருதானெங்கள்கோவெனவுரைத்தாய்முன்னம்
பல்வகையோனிதோறும்பார்மிசைப்பிறக்குநாளில்
வெல்புலிநரியேயாகிவெம்பசியுற்றான்மற்றிப்
புல்லொடுதழையேயோதின்பானின்பெரும்போதிநாதன்.

(இ-ள்.) எங்கள்கடவுள் கொல்லவினையானென்று சொன்னாய், முன்னமே அநேகயோனிகள்தோறும் பூமியின்மேற் பிறக்குங் காலத்தில் வெல்லுகின்ற புலிகளாயும், நரிகளாயும், பிறக்கும்போது வெவ்வியபசிவந்தால் புல்லுந்தழையுந் தின்பானோ; அரசமரநிழலிலிருக்கும் உன்னுடையகடவுள்-எ-று. (நிச)

கரவெனுமுன்றனாவிற்கந்தமைந்துடனேகூடி
யுருவமுமழியுமென்றாயுன்னிறைகுருவுமெங்கே
விரவியயோனிதோறுமுயிர்க்கருள்செய்யவேண்டி
மருவொருவடிவங்கொண்டானென்பதேமதியிலாதாய்.

(இ-ள்.) பொய்யாகிய உன்னுகமத்தில்ஐந்துகந்தங்களுடனே கூடத் தேகமுமழியுமென்று சொன்னாய், அப்போது உன்கடவுளுக்கு உருவெங்கே, அநேகயோனிகளி லான்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு ஒருவடிவங்கொண்டு வந்தானென்பதென்ன புத்தியில்லாதவனே யென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (நிரு)

காரணவுயிரிற்கூடுங்காரியவுருவின்றேனுஞ்
சீரணிபோதிக்கீழ்றகோரிறைக்குருவுமில்லை
பூரணஞானமில்லைப்பொன்றுகைமுத்தியென்னும்
பேருணர்வில்லாவுன்றன்பிடகமுமல்லவர்சொன்னார்.

(இ-ள்.) காரணமாகிய ஆன்மாவோடே கூடுகின்றகாரியமாகிய வடிவில்லாதிருந்தால் உன்னுடைய சிறப்புப்பெற்ற அரசமர நிழலிலே யிருக்குந்தெய்வத்துக்கு வடிவில்லை நிறைந்த அறிவில்லாதவனே, பஞ்சகந்தமுங்கெடுவது முத்தியென்று சொல்லும்பேரறிவில்லாத உன்பிடகாகமத்தை யார்சொன்னார்-எ-று. (ருசு)

இருபதிற்றொருவராகவெண்ணும்முன் புத்தரெல்லாம்
வருவதுசிறந்ததாயார்வயிற்றினைப்பீறியென்னை
பரிவொடுசுமந்துபெற்றாருயிர்கெடப்பழுதுசெய்தே
யருநரகத்தில்வீழுமவர்களோகடவுளாவார்.

(இ-ள்.) இருபத் தொருவரொன் றெண்ணப்பட்ட உன்னுடைய புத்தர்களெல்லாம் பிறப்பது சிறப்புப்பெற்ற தாயார்வயிற்றைப் பீறியென்றுசொன்னாய் அன்புடனேசுமந்துபெற்ற தாய்மாருடைய உயிர்நாசத்தை யடையக்குற்றஞ்செய்து அரியநரகத்திலே வீழ்பவர்களோ தெய்வமாவார்கள்-எ-று. (ருஎ)

காரவுடைப்பூதநான்கின்கலப்பினிற்பேதமல்லா [வி
தருவினுக்குயிர்வேறில்லையென்னைநின்பொய்ம்மைநூ
னிரவினுற்றுயிலுங்காலுன்முகத்துடனேறிப்போகு
மரவினைப்பூதபேதமறிந்ததோவறிவிலாதாய்.

(இ-ள்.) ஒளிப்பினையுடைய நான்கு பூதத்தையுடைய கலப்பிலே பேதமேயல்லாமல் தோன்றியவடிவுக்கு உயிரொன்று வேறில்லையென்பாய் நீசொல்லிய அபத்தசாத்திரத்தில் இராத்திரியிலே நித்திரைசெய்யும்போது உன்முகத்திலேயேறிப்போகும் சருப்பத்தை யிந்தப்பூதங்களறிந்ததோ, வறிவில்லாதவனே-எ-று. (ருஅ)

உருவமுமுயிருங்கூடுமுணர்வுனக்கில்லையித்த
வுருவமிங்கிறந்தகாலையுயிர்கடிதகன்றுபோகு

முருவமுமுயிருங்கூடிப்பிறக்குமேலதனாலன்ற
னுருவமுமுயிரும்வேறாமென்றுரையுன்றன்வாயால்.

(இ-ள்.) உருவும்-உயிரும்-ஒன்றாய்க்கூடும் அறிவுஉனக்கில்லை யென்றாய், இந்தவுருவம் நீங்கினகாலத்தில் உயிரும் சீக்கிரத்தில் நீங்கிப்போகும் உருவமும் உயிரும் ஒன்றாய்க் கூடப்பிறக்குமானால் அதனால் உன்னுடைய உருவும் உயிரும் வேறாகுமென்று உன் வாயாற் சொல்வாயென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௫௯)

வானமுமில்லைவானத்தோசையுமில்லைவான
மானதில்வழக்கதாமென்றரைத்துவையுன்றனாவிற்
கானிலம்புனறீநான்குங்கலப்பதற்கிடமதாகு
நீநவிலோசைவானினிகழ்ந்துளசெய்தியென்பாய்.

(இ-ள்.) ஆகாயமுமில்லை அதனிடத்தே சத்தமுமில்லை, அந்த ஆகாயம்இல்வழக்காமென்று சொன்னாய், உன்னாகமத்தில் பிருதுவு-அப்பு-தேயு-வாயு-நான்குபூதமும் இருப்பதற்கு இடம் ஆகாயமல்லவோ நீசொல்லப்பட்ட சொல்லினோசை ஆகாயத்திலுண்டாகியதென்று சொல்லுவாயென்றார் மாணிக்கவாசகர்-எ-று. ()

இடைமிருந்திசைதானென்பதில்வழக்கென்றுநீயே
வடநெடுந்திசையிற்போதிமரமெனவணக்கஞ்செய்வை
புடவியிலறிவிலாரும்பித்தரும்பொய்ம்மையோரு
முடனிகழவையிற்கூறிலொக்குநீயுரைப்பவெல்லாம்.

(இ-ள்.) இடமிருந்த திசையென்று சொல்வது இல்வழக்கென்று சொல்வாய், இப்படிச்சொல்லுநீயே நெடியவடதிசையிலே அரசமரமிருக்கின்றதென்று வணக்கஞ்செய்வாய், பூமியிலே அறிவில்லாதவர்களும், பயித்தியங் கொண்டவர்களும், அபத்தம்பேசுகிறவர்களும், இருக்கின்ற சபையிலே உன்சொல்லெல்லாம் பொருந்துமென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (௬௧)

மரமுயிரல்லவென்னைபமன் னுமைம்பூதமான
வுருவினர்போலநன்னீருணவினு ரிலைகொண்டோங்குஞ்
சருகெழுமுணவின்றுகிலாதலூற்சனபேதத்
தருவினையருத்தவெங்கோனுருயிர்க்கமைத்ததெ[illegible]ாய்.

(இ-ள்.) மரங்கள் உயிரல்லவென்று சொல்வாய், நிலைபெற்ற பஞ்சபூதத்தினலுண்டாகியதேகத்தையுடையவர்கள்போல நல்லநீரை உண்கையினலே இலைகள்தளிர்ந்து வளர்ந்திருக்கும், அஃதில்லாவிட்டால் சருகாகும் ஆகையினலே சனபேதத்தில்கன்ம[illegible]ளைப்புசிப்பிக்க எமதுகடவுள் உயிர்களுக்கு அமைத்தவடிவாகுமெ[illegible]ன்று சொல்வார்-எ-று. (சு[illegible])

வன்பெரும்பழுதுகோறன்மண்மிசைத்தானெசத்த, பு
ன்புலைதின்னனன்றென் றுரைப்பைநின்பொய்ம்மைநூலிற்
றின்மையென்றுனக்குநல்லூனுடலுயிர்செகுத்தேயூட்டி, யு
ன்பசிதணிப்பார்பாவமெய்துவதுனக்குநன்றோ

(இ-ள்.) ஒரு உயிரைக்கொல்வதுபழுது பூமியிலேதானேசெத்தமாமிசத்தைத்தின்பது நன்றென்றுசொல்வாய், உன்பொய்யாகமத்திலே தின்றென்று உனக்குநல்ல உயிரைக்கொன்று மாமிசத்தை உண்பித்து உன்பசியைத்தணிப்பார்க்குப் பாவமடைவது உனக்குநல்லதோ-எ-று. (சுஅ)

காரணமிற்கவென்றுங்காரியங்கெடுதல்வீடென்
றுரணம்பரவுமெங்கோனுகம்புகல்வார்சொல்வார்
போரணங்குயிருஞ்சேரப் பொன்றுதன்முத்தியென்னும்
பேரணங்குற்றநீயேபிரிவீறியாதுசொல்வாய்.

(இ-ள்.) காரணமிருக்க எப்போதுங் காரியங்கெடுவதேமோட்சமென்று வேதங்கள் பரவுகின்ற எங்களுடைய கோனுகிய சிவ

னுடைய ஆகமஞ்சொல்லப்பட்டவர் சொல்லுவார்கள் பேரால்வ ருந்தும் உயிருங்கூடக் கெடுவது முத்தியென்கிற பெரியவருத்தங் கொண்ட நீயே பிரிவையறியாமற்சொல்வாய்-எ-று. (சுச)

அழிந்திடினைந்துகந்தமுத்தியென் றுரைத்தாயைந்து
மழிந்திடின்முத்திபெற்றாரானவினவும்போதி
லழிந்திடுமைந்தி னுண்டாமுணர்வெனவுரைக்கிலைந்து
மழிந்தனவிலையாமுத்தியாவதுமில்லையென்றார்.

(இ-ள்.) பஞ்சகந்தமும் அழிந்தால்முத்தியென்று சொன்னாய், பஞ்சகந்தமும் அழிந்தால் முத்திபெற்றவர் யாவரென்றுவினவும் போதில் அழிந்தஐந்திலும் உண்டான அறிவென்றுசொன்னால் அப்போது பஞ்சகந்தமும் அழியவுமில்லை மோட்சமுமில்லையாமென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (சுரு)

கலிவிருத்தம்.

பொங்குபுகழ்மங்கியுளபுத்தனும்வெகுண்டே
யெங்கடவுளேதுபெறுமுத்தியில்லையென்றீ
ருங்கடவுள்யாதுமதுமுத்தியேதுவென்னத்
தங்குசிவஞானமுணர்சைவரிதுசொல்வார்.

(இ-ள்.) மிகுந்தகீர்த்தியானது மயங்கியிருந்த புத்தனுங்கோபித்து எங்களுக்குத் தெய்வமுமில்லை மோட்சமுமில்லையென்று சொன்னீர் உம்முடைய தெய்வமாவதேது, நீங்களடையுமோக்ஷமேதுவென்று கேட்கச் சிவஞானத்தையறிந்த சைவராகிய மாணிக்கவாசகர் இதுசொல்வார்-எ-று. (சுசு)

ஆலமணிமேலிருந்தறமுரைக்குங்
கோலமதுகண்டுபலர்கும்பிடநடிப்பான்

மேலணியுநீறணுமைகூறனருண்மேவுஞ்
சீலனவனற்பெருமைசெப்பவெளிதாமோ.

(இ-ள்.) அழகிய கல்லாலினிழலிலிருந்து தருமஞ்சொல்லுகின்ற வடிவைக்கண்டு அனேகம்போதரிசிக்க திருத்தஞ்செய்வான் விபூதிதரித்த திருமேனியையுடையவன் உமாதேவியை யொருபாகத்தி லுடையவன் கிருபையையுடையவன் இப்படிப்பட்ட கடவுளது பெருமைசொல்வதற்கு எளிதோ-எ-று. (௬௭)

தில்லைமணிமன்றிலுறைதிங்களணியெங்கோ
னெல்லையுளனோமொழியவென்றருள்புரிந்தே
சொல்லுமளவிற்பலதொடுத்துமுயலாதே
நில்லுமிதுகூறுமெனநீசனிதுரைத்தான்.

(இ-ள்.) தில்லைமாநகரில் அழகியபொன்னம்பலத்தி லிருக்கின்ற சந்திரனையணிந்த எமதுகடவுளானவர் ஒருமுடிவுஉண்டானவரோ சொல்லுதற்கென்றுசொன்னார், சொல்லுமளவில் பலபேச்சுகள் சொல்லமுயலவேண்டுவதில்லை நில்லும் நான்கேட்டதைச் சொல்லுமென்று நீசனாகிய புத்தனிதுசொன்னான்-எ-று. (௬௮)

முன்னர்வடநீழலிலிருந்தறமொழிந்தா
னென்னிறைவனென்னுமுரையென்னெதிருரைத்தீர்
மன்னுசெபமாலைகொடிருக்குமதுமற்றோ
ருன்னரியநற்கடவுளுண்டெனநினைந்தோ.

(இ-ள்.) முன்னேகல்லாலின் கீழிருந்து தருமஞ்சொன்னான் எங்களுடைய கடவுளென்று என்னெதிரேசொன்னீர், கையிலே நிலைபெற்ற செபமாலைகொண்டிருப்பது வேறொருநினைத்தற்கரிய நல்லதெய்வமுண்டென்று நினைத்தோம்-எ-று. (௬௯)

மல்லலுலகத்தவர்வணங்கிடவடிப்பன்
றில்லையிறையென்னவுரைசெப்பினிர்முனிப்போ

நல்லறிவினோர்கள்சிலர்நாடுமெவருண்டா
யல்லதுதமிச்சைதனிலாடுமெவருண்டோ

(இ-ள்.) வளம்பொருந்திய வுலகத்தார்வணங்கும்படிச் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்வான் எமதுகடவுளென்று சொன்னீர் நினைந்துபோகப்பட்ட நல்லறிவையுடைய சிலர்பார்க்கஆடுவதல்லது தமதிச்சையினாலே, ஆடுவோருமுண்டோ வென்றான் புத்தகுரு.

வையமுழுதுய்யமணிமன்றினுணடிப்போன்
மெய்யணியுநீறனெனமேன்மைகொடுத்தீர்
செய்யவொளிதங்குதிருமேனிதனினீறே
துய்யதெனவோதுமதுதொல்விறைபுனைந்தான்.

(இ-ள்.) உலகமெல்லாம்பிழைக்க அழகிய பொன்னம்பலத்திலே நிருத்தஞ்செய்யும் எமதுகடவுள் திருமேனியிலே விபூதிதரித்திருக்கின்றானென்று மேன்மைகொண்டு சொன்னீர் சிவந்த பிரகாசந்தங்கிய திருமேனியிலே விபூதியரிசுத்தமானதென்றோ, உமதுகடவுள் தரித்தானென்றான் புத்தகுரு-எ-று. (௭௧)

மங்கையொருபங்கனெனவண்மைமொடுரைத்தீர்
பங்குபடுபெண்வடிவுபார்மிசையிலுண்டோ
வங்கமொருபாதிமடமாதினுருவாரு
முங்களிறைநீர்துறவிலுற்றதவமென்னே.

(இ-ள்.) உமாதேவியை யொருபாகத்திலே யுடையவனென்று பெருமைகொண்டு சொன்னீர், பாதிதேகம் பெண்வடிவாயிருப்பது பூமியிலேயுண்டோ அப்படிப்பாதிதேகம் பெண்ணுருவாயுமதுகடவுளிருந்தால் நீர் துறவியிலிருக்குந்தவமென்ன-எ-று. (௭௨)

என்றவன்மொழிந்தபினிகழ்ச்சிநகைசெய்தே
மன்றனடியார்கள்பெருவாழ்வுபெறவந்தார்

நன்றியுபதேசமிதுநற்றவமிலாதா
யுன்றனெதிர்சொல்வதலவென்றிதுரைசெய்வார்.

(இ-ள்.) இப்படியென்று அந்தபுத்தகுரு சொன்னதற்கு இகழ்ந்துநகைசெய்து எமதுகடவுளுடைய அடியார்கள் பெரியவாழ்வைப்பெறவந்தவர்கள் நல்லஉபதேசமாகிய விதனை நல்லதவமொன்றில்லாத உன்னெதிரே சொல்வதல்லவென்று இதுசொல்வார் மாணிக்கவாசகர்-எ-று. (எகூ)

ஓங்குசெபமாலைகொடிருத்தலுலகெல்லா
மீங்குயிர்தவங்கள்செயவென்றவெதனவெண்ணாய்
தாங்கியபடைத்தொழில்கள்சார்பொடுபழக்கம்
பாங்குளபணிக்கர்கரபத்திரமதாகும்.

(இ-ள்.) உயர்ந்த செபமாலிகையைக் கையிலே வைத்திருப்பது உலகத்தாரெல்லாம் இங்கேஉயர்ந்ததவங்கள் செய்தற்கென்ற நினையாய் தாங்கப்பெற்ற ஆயுதத்தொழில்களைச் சார்புடனேபழக்குகின்ற பக்குவமுள்ள ஆசிரியருடைய கையிலே கொள்ளும் ஆயுதம்போலாகுமென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (எச)

ஈட்டியதவப்பயனிலாதவர்கள்போலூ
னாட்டமுடையாரெதிர்நடித்திடுவனென்றாய்
காட்டவனல்போலுடல்கலந்துயிரையெல்லா
மாட்டுமொருநட்டுவனெம்மண்ணலெனவெண்ணாய்.

(இ-ள்.) தவப்பயனைச் சம்பாதியாதவர்களைப்போல ஊனக்கண்ணையுடையவராகிய உலகத்தார்காண எதிரேகூத்தாடுவானென்றாய் விறகிலேயிருக்குந் தீயைப்போலத் தேகத்திலேவந்து உயிரையெல்லாம் ஆட்டுவிக்கும் ஒருநட்டுவன் எமதுகடவுளென்று எண்ணிக்கொள்வாயென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (எரு)

நீற்றினையணிந்ததுவெனின்னிறைவனென்றே
சாற்றினையுயிர்க்கிடர்தணிப்பவெனவெண்ணாய்
தோற்றியுளதம்புதல்வர்துன்பமுறுமங்கோய்
மாற்றும்வகையன்னையராருந்தியமருந்தாம்.

(இ-ள்.) உம்முடைய கடவுள் விபூதியையணிந்தது என்ன வென்றுகேட்டாய் அது ஆன்மாக்களுக்குத் துன்பத்தைத்தணிப்ப தென் றெண்ணிக்கொள்வாய் பிறந்திருக்கின்ற தம்முடைய பிள் ளைகளடைந்த நோயைநீக்கும்படி தாய்மார்சாப்பிட்ட மருந்தாகு மென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (எகூ)

புல்லறிவுகொண்டுபலபொத்துமொழிபுத்தா
நில்லவனலாலொருவர்நீறணிவதுண்டோ
நல்லதிருநீற்றினுளநன்குமறைதானே
சொல்லுமதலாலொருவர்சொல்லவெளிதாமோ.

(இ-ள்.) புல்லறிவைக்கொண்டு அனேகம் வீண்வார்த்தைகள் பேசுகின்ற புத்தனே, நிற்பாய் அவனையல்லாமல், ஒருவர் நீற்றை தரிப்பதுண்டோ நல்லதிருநீற்றிலுள்ள சுகம்வேதஞ்சொல்லுவத ல்லாமல், மற்றொருவராற் சொல்வதற்கெளிதோ-எ-று. (எஎ)

பாகமதிலுத்தமியைவைத்தல்பழுதென்றாய்
போகமுலகுக்கருள்புரிந்தருளவென்றே
மாகமுகிலொத்தகுழன்மங்கையொடிருந்தான்
யோகமுயிர்கட்குதவயோகவுருவானுன்.

(இ-ள்.) ஒருபாகத்திலே உமாதேவியைவைப்பது குற்றமெ ன்றுசொன்னாய், உலகத்தாருக்குப் போகத்தைத் தரல்வேண்டுமெ ன்றுநினைத்து ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற மேகத்தையொத்த கூந் தலையுடைய பார்வதியை யொருபாகங்கொண்டிருந்தார் அல்லாம

னும், உயிர்கட்கு யோகத்தைக்கொடுக்கும்பொருட்டு யோகவுருவங்கொண்டிருந்தார் எமதுகடவுள்-எ-று. (எஅ)

அந்தர்கரமுற்றதடியன்றியறியார்போ
லிந்தமொழிகற்றனையினிப்பிறிதுதேராய்
மைந்துபுனைசந்தவிடையான்மலரின்மன்னுங்
கந்தமெனநின்றநிலைகண்டிலைகணில்லாய்.

(இ-ள்.) குருடர் கையிலிருக்கின்ற தடியையல்லாமல், வேறொன்றுமறியாத விதம்போல இந்தப் பேச்சுமாத்திரங் கற்றாயல்லாமல், வேறொன்றுமறியமாட்டாய் வலிமைபெற்ற அழகியஇடபவாகனத்தையுடைய பரமசிவன் பூவிலிருக்கு மணம்போல ஆன்மாக்களிடத்தில் கலந்துநின்ற நிலைமையைப்பார்த்தாயில்லை கண்ணில்லாதவனே, யென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (எக)

ஆதிசிவயோகமிகுபோகியருவாகுஞ்
சோதிவெகுரூபிசுகவாரிதுயரில்லா
நீதிமணிமன்றதனினின்றநிலையல்லா
லியாதுமுடியாதுபதம்யாரறிவரென்றார்.

(இ-ள்.) ஆதியாகியுஞ் சிவயோகியாகியும், மிகுந்தபோகியாகியும் அருபியாகியும் சோதியாகியும் வெகுரூபியாகியும் இன்பக்கடலாகியும், இருக்கின்றகடவுள் துன்பமில்லாத நீதநிறைந்த பொற்சபையிலேநின்ற நிலையையல்லாமல், எதுசிரசு-எதுபாதம்-யார் அவரையறிவார்கள்-எ-று. (அ௦)

மைந்தர்மடவார்தமதுவாக்கிறைவிநீயே
யிந்தவகைபொய்ம்மொழியியம்புவதெனென்றே
யந்தமிலவாகியவருங்கலைகள்வல்லார்
மூந்துகலைமாதினைமுனிந்திதுமொழிந்தார்.

(இ-ள்.) அளவற்ற கலைகளில்வல்லவராகிய மாணிக்கவாசகர் மைந்தர்கள் மங்கையர்கள் ஆகியஇவர்கள வாக்கிலிருக்கின்ற சரஸ்வதி நீயேபொய்வார்த்தை பேசுவதென்று ஆதியாகிய கலைவாணியைக் கோபித்து இதுசொன்னார்-எ-று. (அக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நொக்கநான்மறைசொல்லுநீயிவைசொல்வதென் கலைமடந்தாய்,தக்கன்வேள்வியிலுன்றனாசிகடிந்ததின்றுமறப்பதே,
முக்கணாதருளில்லையென்றிடுமூகர்நாவையகன்றுநீ, நககனார்
திருவாணையேகெனநாமடந்தையுமஞ்சினாள்.

(இ-ள்.) நான்குவேதங்களையுஞ் சொல்லிய நீதானே யிந்தப் பொய்யைச் சொல்லவேண்டியதென்ன சரஸ்வதி தக்கன்யாகத்தில், உன்மூக்கையறுத்ததை மறந்துவிடலாமா திரிநேத்திரத்தையுடைய பரமசிவனது அருளில்லையென்று சொல்லும் மூடருடையநாவைவிட்டு நீசிவனுடைய ஆக்கினைப்படிபோவென்று சொல்லச் சரஸ்வதியும் பயந்தாள்-எ-று. (அஉ)

அஞ்சிவஞ்சகர்நாவினின்றுமகன்றபின்பவர்தாமெலா
நஞ்சருந்தினர்போலொடுங்கிநடுங்கிமூகர்களாயினார்
நெஞ்சநொந்துபினீழநாடனிறைநதிடுஞ்சிவஞாநநூ
லெஞ்சலின்றியசெல்வர்பாதமிறைஞ்சிநின்றிதுகூறினான்

(இ-ள்.) சரஸ்வதி பயந்து வஞ்சகருடைய நாவினின்றும் நீங்கினபின்பு அவர்களெல்லாம் விஷஞ்சாப்பிட்டவர்கள்போல ஒடுங்கி நடுங்கி ஊமைகளானார்கள் அதுகண்டு மனநொந்து ஈழதேசத்து ராசன் சிவஞானநூல்களிற் குறைவில்லாத மாணிக்கவாசகர் பாதத்தை வணங்கி நின்று இதுசொன்னான்-எ-று. (கூஅ)

சொல்லவல்லவர்மூகையாயினர் சொல்லிலாவொருமூகை
யாம், வல்லியென்புதல்விக்குமூகைமறந்துநல்லுரைகூடினா,
னல்லதொண்டனுமக்குநானெனநாயனாரவடன்னைநீ, யொ
ல்லையிங்கழையென்னவந்தவளுண்மைசேரவைநண்ணினாள்.

(இ-ள்.) பேசத்தக்கவர்களூமையாயினார்கள் பேச்சில்லாத ஊமையாகிய என்புத்திரிக்கு ஊமைநீங்கி நல்லவார்த்தை பேசவந்தால்; நானுமக்குநல்ல அடியனாவேனென்றுசொல்ல, மாணிக்கவாசகர் சீக்கிரத்திலே அழைத்துக்கொண்டுவாவென்று சொல்ல அவளும் உண்மைபொருந்திய சபைக்குவந்தாள்-எ-று. (௮௪)

நண்ணியங்குமுனின்றகன்னியை நன்மையாளருநாடியே,
கண்ணிநின்றருள்செய்து பின்னர்கனைத்து முன்னிருத்தி
யே, யுண்ணடுங்கியிருந்தபுத்தனுரைத்ததர்க்கமவைக்கெலா
ந், தண்ணறுங்குழல்வல்லிநல்லுரை சாற்றுகென்றுவிளம்பி
னார்.

(இ-ள்.) சபையிலேவந்துநின்ற கன்னிகையை மாணிக்கவாசகர்பார்த்து கிருபாநோக்கஞ்செய்து பின்பு அழைத்து எதிரிலிருக்கவைத்து உள்ளம்நடுங்கி அங்கிருந்த புத்தன்சொல்லிய தருக்கத்துக்கெல்லாம் குளிர்ந்தவாசனை பொருந்திய கூந்தலையுடைய பெண்ணே நீயுத்தரஞ்சொல்லென்றார்-எ-று. (௮௫)

பற்றுநன்குணராதபுத்தர்பகர்ந்ததர்க்கமவைக்கெலாங்
கற்றறிந்தவர்போலமன்னியகன்னிமாறுரைகூறினாள்
மற்றுமங்கையர்சாழலாம்விளையாடலாகமகிழ்ச்சியா
லுற்றதன்பொருடன்னைவாசகமாகவுண்மையரோதினார்.

(இ-ள்.) பத்தியைநன்றாயறியாத புத்தரானவர்கள் சொல்லியதருக்கவார்த்தைக்கெல்லாம் படித்தறிந்தவர்போலஇந்தப்பெண்

ஞானவள் உத்தரஞ்சொன்னாள் அதைமங்கையர்செய்யுந் திருச்சாழல் விளையாட்டாகமகிழ்ச்சியினாலே அந்தப்பொருளை யெடுத்துப் பாடலாகச்சொன்னார் மாணிக்கவாசகர்-எ-று. (௮௯)

ஈழமன்னனுமஞ்செழுத்துமியம்பிநீறுபுனைந்தபின், றாழநின்றடிமைத்திறந்தவறாததொண்டினனாயினான், சோழனும்
புலியூரின்மன்னியதொன்மையாளருமம்பலம், வாழ்கவென்
றுதுதித்துநின்றெழில்வாதவூரரையேத்தினார்.

(இ-ள்.) ஈழராசனும் அஞ்செழுத்துஞ்சொல்லி விபூதிதரித்த பின்பு தாழநின்று அடிமைத்திறத்திலே தவறில்லாத அடியனாகினான் சோழராசனும், தில்லைமூவாயிரவரும் அம்பலம் வாழ்கவென்று துதித்து அழகியமாணிக்கவாசகரை யேத்தினார்கள்-எ-று. ()

தக்கசீர்பயிலீழமன்னுபர்சைவனாயெதிர்நின்றுநின்
றக்கமாலைபுனைந்துநீறுமணிந்துதொண்டினனாகவே
துக்கமாகியசீவரத்துவராடைமூடுமுடம்பினார்
மிக்ககாதரமூகைதீர்ந்திடல்வேண்டுமென்றுவணங்கினார்.

(இ-ள்.) தக்கதாகிய சிறப்புள்ள ஈழராசனும் மாணிக்கவாசகரெதிரே நின்று உருத்திராட்சமணிந்து விபூதிதரித்து அடிமைத்திறமுடையவனாகவே துக்கத்தைத்தருகின்ற சிவந்த சீவரவஸ்திரத்தால், மூடுமுடம்பையுடைய புத்தர்மிகுந்த ஊமைத்தன்மைதங்களுக்கு நீங்கவேண்டுமென்று வணங்கினார்கள்-எ-று. (௮௮)

இன்னவாறருள்செய்குவாயினியெம்பிரானெனவன்புடன்
பொன்னிசூழ்வளநாடனும்புலியூரனாருமிறைஞ்சினார்
மன்னுசீர்புனைவாதவூரர்மகிழ்ந்துபார்வையைநல்கவே
முன்னதாகவணங்கியேயவர்மூகைதீர்ந்துதுகூறினார்.

(இ-ள்.) இந்தப்படி அருள்செய்வாய் எமதுகடவுளேயென்று அன்புடனே சோழராசனுந்தில்லைமூவாயிரவரும் மற்றவரும்வணங்கினுர்கள் நிலைபெற்ற சிறப்பினையுடைய மாணிக்கவாசகர் மகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்ய வுடனே அவர்களெல்லா நமஸ்கரித்து ஊமைத்தன்மைநீங்கி இதுசொன்னுர்கள்-எ-று. (அக)

மாசிலாதமநத்தினுய்முனமன்னு தீவினைசெய்தலா
லாசிலாதநன்னீறணிந்துநலஞ்செழுத்துரைசெய்திலேம்
பூசலாகியசீறுடன்புனையக்கமாலைகள்காவியாந்
தூசுதாதுவராடையைச்சுடுவென்றுதுன்றிவணங்கினர்.

(இ-ள்.) களங்கரகிதமானமநமுள்ள பெரியவரே முன்பிறப்பிலே நிலைபெற்ற தீவினைச்செய்தபடியால் குற்றமற்ற விபூதிதரித்து நல்லபஞ்சாக்கரத்தை உச்சரியாமலிருந்தோம் பூசுவதாகிய திருநீறுந் தரிக்கப்பட்ட உருத்திராட்சமும் காவிவஸ்திரமும் ஆகிய இவைகளெல்லாங் கொடுப்பீரிந்தச் சிவப்புவஸ்திரத்தைச் சுடுவீரென்று வணங்கினுர்கள்-எ-று. (கூ0)

கோட்டமின்றியவுண்மையார்வகை கோட்டுகின்றமுகத்தரா, யீட்டுமுன்செய்தவத்தினுரிவரென்றுசிந்தையிலெண்ணியே, வாட்டருந்திருநீறணிந்துவயங்குருத்திரசாதனம், பூட்டியங்கவர்சீவரங்கிளர்பொங்குதீக்கிரையாககினுர்.

(இ-ள்.) அழுக்காறில்லாத மாணிக்கவாசகர் புன்சிரிப்புடைய முகத்தினராய்ப் பூருவசன்மத்திலிவர்கள் தவஞ்செய்தவர்களென்றுமநத்திலே நினைத்துக்கெடுதல்செய்யாத விபூதிதரித்துப் பிரகாசங்கொண்ட உருத்திராட்சமும் அணிவித்துஅவர்களுடைய சீவரமாகிய வஸ்திரங்களைக் காந்தியையுடைய நெருப்புக்கு இரையாக்கினுர்-எ-று. (கக)

பொய்யிலாவருளைய நம்புலியூருளார்களுமுன்புசேர்
மையலாகியவேடமின்றிவயங்குநீறணிவார்களும்
துய்யகாவிரிநாடனுந்துகடீருமீழர்தமன்னனுஞ்
செய்யமாமணிமன்றுளார்திருமுன்புசென்றுவணங்கினார்

(இ-ள்.) பொய்ம்மையில்லாத கிருபையையுடைய மாணிக்கவாசகரும் தில்லைமூவாயிரவரும், முன்புசேர்ந்தமயக்கமாகியவேஷமில்லாமல் பிரகாசம்பொருந்திய விபூதிதரித்தவர்களும் பரிசுத்தமாகிய காவேரிநாட்டையாளுகின்ற சோழராசனும் குற்றநீங்கிய ஈழதேயத்தரசனும் சிவந்தரத்தின மிட்டிழைத்த கனகசபையிலிருக்கும் சபாநாயகரைநேராகவந்து தரிசித்தார்கள்-எ-று. (கூஉ)

பொன்றுகின்றதுமுத்தியென்றுபுகன்றுநின்றுழல்புத்தர்தா, மன்றுகண்டுவணங்கியன்புடன் மாபெருந்தவராவதே, யின்றிதன்பொருளாவதென்பலவாறுடன்கடன்மீதிலே, சென்றதண்புனலல்லவோவுயர்தில்லையெல்லையினண்ணினார்.

(இ-ள்.) இறக்கின்றதே மோட்சமென்று சொல்லிநின்றுஉழலுகின்ற பௌத்தர்கள் பொன்னம்பலத்திலே சபாநாயகரைக்கண்டுவணங்கி அன்புமிகுந்த பெரியதபோதனர்களாவது என்னஅதிசயம் இன்று இதனதுபொருளானது என்னவெனில், பலநதிகளுடனே கடலிலேபோன குளிர்ந்தநீரல்லவா உயர்ந்த தில்லைமாநகரத்தில் வந்தவர்கள்-எ-று. (கூங)

மன்றகன்றபின்யாவருஞ்செலவாதவூருறையெந்தையார்
சென்றிலங்குதிருப்புலீசர்சிறந்தபாதம்வணங்கியே
நன்றிதுன்றியவங்கண்வைகினர்நல்லதில்லையுளாரெலா
மென்றுமிங்கிருமையர்சீரினியென்றுதம்மனையேகினார்.

(இ-ள்.) சபையைவிட்டு நீங்கியபின்பு எல்லாருந்தங்களிடத்திற்குச்செல்ல மாணிக்கவாசகர் திருப்புலீச்சரத்திலிருக்கும் கடவு

ளுடைய சிறந்ததிருவடிகளைவணங்கி அங்கேயிருந்தனர் நன்மை பொருந்திய தில்லைமாநகரத்தாரெல்லாம் எந்நாளும் ஐயரே, நீர் இங்கே இருமென்றுவேண்டிக்கொண்டு தங்கள்கிரகத்துக்குப்போனார்கள்-எ-று. (௧௪)

பொன்னிநாடனுமீழநாடுபுரந்தமன்னனுமுன்புசேர்
மன்னுதீவினைதீரமன்றுவணங்கிநீறணிவார்களு [ய்
முன்னதாகவிறைஞ்சிஞானமுதிர்ந்தகோவையகன்றுபோ
மின்னுமாமணிமாடமாளிகைதன்னிலன்புடன்மேவினார்.

(இ-ள்.) காவேரிநாட்டையாளுகின்ற சோழராஜனுமீழதேயத்து ராஜாவும் வந்தராஜாக்களும முன்புசேர்ந்திருந்த தீவினைகளெல்லாம் நீங்கிச் சபையைவணங்கி விபூதிதரித்த புத்தர்களும்முன்னதாக வணங்கி மாணிக்கவாசகரை நீங்கிப்போய் மின்னுகின்ற இரத்தினங்கள்பதித்த உப்பரிகையில் அன்புடனே சேர்ந்தார்-எ-

புன்மைவேடமகன்றுநீறுபுனைந்துளார்களுமன்னனுந்
தொன்மையார்திருவாதவூரர்துலங்குபாதம்வணங்கியே
நன்மையாமணிமன்றிறைஞ்சிநயந்துநெஞ்சினில்வஞ்சமாம்
வன்மையானதொழிந்துதில்லைதமன்னுமூரெனவைகினார்.

(இ-ள்.) இழிவானவேடங்கள்நீங்கி விபூதியைத்தரித்தபுத்தர்களும் ராஜாவும் பழைமையாயுள்ள திருவாதவூரராகிய அழகிய திருச்சிற்றம்பலத்தை வணங்கிநயப்புடனே நெஞ்சிலே யிருக்கும் வஞ்சகநீங்கிச் சிதம்பரமே தங்களுக்கு நிலைபெற்றபதியாக விருந்தார்கள்-எ-று. (௧௫)

புத்தனைவாதில்வென்றசருக்கம்
முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௫௱௪௧.

[illegible]

# திருவடிபெற்றசருக்கம்.

அறுசீரடிக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உடன்படப்பொய்யைமெய்யாவுரைத்திடுஞ்சமயமென்னு
கடங்கயத்திரளைவெல்லுமொப்பில்பெருமடங்கலன்னார் [ங்
நெடுந்தவப்பெருமையாலேநினைப்பருஞ்சைவஞான
திடம்படப்புகலுமாணிக்கவாசகன்பின்னடைந்தசெய்திசொல்வாம்.

(இ-ள்.) உடன்படும்படி பொய்யைமெய்யாகச் சொல்லியபரசமயங்களென்னும் யானைக்கூட்டங்களை வெல்லுகின்ற ஒப்பற்ற பெரியசிங்க வேற்றுக்கொப்பாகியவரும், நெடியதவத்தின் பெருமையாலே நினைத்தற்கரிய சைவஞானத்தைவிரித்துச் சொல்லப்பட்டவருமாகிய மாணிக்கவாசகர் பின்பு அடைந்தசெய்தியைச் சொல்லுவாம்-எ-று. (க)

ஆடல்வெம்படையாட்சி யெழுச்சியோடச்சோவென்
பாடலுந்தெய்வலோகயாத்திரைப்பத்துமோதித் [னும்
தேடலுந்திகைப்புநீத்துத்தெளிதலுஞ்சிறுமைகொண்டு
நாடலுங்களிப்புமில்லாநற்பெருவாழ்விலானார்.

(இ-ள்.) ஆடலையுடைய திருப்படையாட்சியும், திருப்படையெழுச்சியும், அச்சோபதமும், தெய்வலோகயாத்திரைப்பத்தும் பாடி ஒன்றையுந்தேடுதலும், திகைத்தலும், பின்புதெளிதலும், சிறுமைகொண்டு வாடுதலும், களித்தலுமில்லாத பெரியவாழ்வுபெற்றிருந்தனர் மாணிக்கவாசகர்-எ-று. (உ)

னுடைய சிறந்ததிருவடிகளைவணங்கி அங்கேயிருந்தனர் நன்மை பொருந்திய தில்லைமாநகரத்தாரெல்லாம் எங்களும் ஐயரே, நீர் இங்கே இருமென்றுவேண்டிக்கொண்டு தங்கள்கிரகத்துக்குப்போனார்கள்-எ-று. (௧௪)

பொன்னிநாட்டனுமீழநாடுபுரந்தமன்னனுமுன்புசேர்
மன்னுதீவினைதீரமன்றுவணங்கிநீறணிவார்களு [ம்
முன்னதாகவிறைஞ்சினாரமுதிர்ந்தகோவையகன்றுபோ
மின்னுமாமணிமாடமாளிகைதன்னிலன்புடன்மேவினார்.

(இ-ள்.) காவேரிநாட்டையாளுகின்ற சோழராஜனும்ஈழதேசத்துராஜாவும் வந்தராஜாக்களும முன்புசேர்ந்திருந்த தீவினைகளெல்லாம் நீங்கிச் சபையைவணங்கி விபூதிதரித்த புத்தர்களும்முன்னதாக வணங்கி மாணிக்கவாசகரை நீங்கிப்போய் மின்னுகின்ற இரத்தினங்கள்பதித்த உப்பரிகையில அன்புடனே சேர்ந்தார்-எ-

புன்மைவேடமகன்றுநீறுபுனைந்துளார்களுமன்னனுந்
தொன்மையார்திருவாதவூரர்துலங்குபாதமவணங்கியே
நன்மையாமணிமன்றிறைஞ்சிநயந்துநெஞ்சினில்வஞ்சமாம்
வன்மையானதொழிந்துதில்லைதமன்னுமூரெனவைகினார்.

(இ-ள்.) இழிவானவேடங்கள்நீங்கி விபூதியைத்தரித்தபுத்தர்களும் ராஜாவும பழைமையாயுள்ள திருவாதவூரராகிய அழகிய திருச்சிற்றம்பலத்தை வணங்கிநயப்புடனே நெஞ்சிலே யிருக்கும் வஞ்சகநீங்கிச் சிதம்பரமே தங்களுக்கு நிலைபெற்றபதியாக விருந்தார்கள்-எ-று. (௧௫)

புத்தரைவாதில்வென்றசருக்கம்

முற்றிற்று.

ஆ-திருவிருத்தம் - ௫௱௧.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவடிபெற்றசருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உடன்படாப்பொய்யைமெய்யாவுரைத்திடுஞ்சமயமென்னு
கடங்கயத்திரளைவெல்லுந்தனிப்பெருமடங்கலன்னார் [ங்
நெடுந்தவப்பெருமையாலேநினைப்பருஞ்சைவஞான
மிடம்படப்புகல்வார்பின்னரெய்தியசெய்திசொல்வாம்.

(இ-ள்.) உடன்படும்படி பொய்யைமெய்யாகச் சொல்லியபரசமயங்களென்னும் யானைக்கூட்டத்தைவெல்லுகின்ற ஒப்பற்ற பெரியசிங்க வேற்றுக்கொப்பாகியவரும், நெடியதவத்தின் பெருமையாலே நினைத்தற்கரிய சிவஞானத்தைவிரித்துச் சொல்லப்பட்டவருமாகிய மாணிக்கவாசகர் பின்பு அடைந்தசெய்தியைச் சொலலுவாம்-எ-று. (க)

ஆடல்வெம்படையினாட்சி யெழுச்சியோடச்சோவென்
பாடலுந்தெய்வலோகயாத்திரைப்பத்துமோதித் [னும்
தேடலுந்திகைப்புமீளத்தெளிதலுஞ்சிறுமைகொண்டு
நாடலுங்களிப்புமில்லாதபெருவாழ்விலானார்,

(இ-ள்.) ஆடலையுடைய திருப்படையாட்சியும், திருப்படையெழுச்சியும், அச்சோப்பத்தும், தெய்வலோகயாத்திரைப்பத்தும் பாடி ஒன்றைத்தேடுதலும், திகைத்தலும், பின்புதெளிதலும், சிறுமைகொண்டு வாடுதலும், களித்தலுமில்லாத பெரியவாழ்வுபெற்றிருந்தார் மாணிக்கவாசகர்-எ-று. (உ)

போற்றுமஞ்செழுத்துநீறுமபுவிமிசைவிளங்கத்துன்ப
மாற்றிடுஞ்சைவஞானவாசகம்புகலவந்தார்
சீற்றமில்புலியும்பாம்புஞ்சீர்பெறவிளங்குமன்றி
லேற்றினன்புலியூர்மேலைச்சிவபதமென்றுகண்டார்.

(இ-ள்.) யாவரும்போற்றுகின்ற பஞ்சாக்கரமும், விபூதியும், பூமியிலே விளங்கத்துன்பத்தை நீக்குகின்ற சிவஞானத்தைவிதிக்கும் திருவாசகஞ்சொல்லவந்த மாணிக்கவாசகர் கோபமில்லாத வியாக்கிரபாதரும், பதஞ்சலியாரும், சிறப்புப்பெற விளங்குகின்ற பொற்சபையிலாடும், இடபவாகனத்தை யுடைய சபாபதியினது சிதம்பரம்மேலான சிவபதமென்று கண்டார்-எ-று. (௩)

ஐயரங்குறைபுநாளிலாடகமன்றிலாடு
மெய்யர்தங்கருணையாலேவேதியவடிவங்கொண்டு
துய்யமுப்புரிநூன்மார்புந்துலங்குபுத்தகமுந்தோன்றச்
செய்யமென்பாதநோவச்சென்றுமுன்னாகநின்றார்.

(இ-ள்.) மாணிக்கவாசகர் அந்தச்சிதம்பரத்தில் வசிக்கின்றநாளிலே பொற்சபையிலாடுகின்ற சபாபதியானவர் தமதுகிருபையினாலே பிராமணவடிவங்கொண்டு பரிசுத்தமாகிய முப்புரிநூலணிந்த மார்பும், விளங்குகின்ற புத்தகமுந்தெரியச் சிவந்ததிருவடிகளுநோக எழுந்தருளி எதிராகநின்றார்-எ-று. (௪)

முன்புறநின்றவேதமுதல்வனைமுகத்துநோக்கி
யின்புறவாசவூரரிருமெனவிருந்தபின்னர்க்
கொன்புனைமறையின்மிக்கோய்நீர்கூறுமென்ன [ர்.
மன்பெருவளஞ்சேர்பாண்டிமண்டலத்திருப்பேனென்று

(இ-ள்.) எதிரேவந்துநின்ற வேதப்பிராமணரைப்பார்த்து இன்பம்பொருந்த மாணிக்கவாசகர் இருமென்றுசொல்ல, அவரிருந்த

பின்பு பெருமையையுடைய வேதத்தில் மிகுந்தவரோ, நீரெங்கே யிருக்கிறது சொல்லுமென்றுகேட்க, விலைபெற்றபெரியவளத்தை யுடைய பாண்டியதேயத்திலே நாமிருக்கிறதென்றார் அந்தப்பிராமணர்-எ-று. (௫)

பாண்டிநாடென்றபின்னைப்பரிவுடன்செறியகூறி
மின்பிறையநுதல்வேண்டுங்காரியமியாதுமென்ன
மாண்டநாயகன்றனாணையாகிய கருமமுமைக்
காண்டலேயென்றுபின்னுங்கருத்துறவிதனைச்சொன்னார்

(இ-ள்.) பாண்டியதேயமென்று சொன்னபின்பு அன்புடனே உபசரித்து இங்கேநீர்வருவதற்குக் காரணஞ்சொல்லுமெனக் கடவுளது ஆக்கினையாகிய காரியம் உம்மைக்காணுவதே யென்று பின்னும் மநத்திலேபொருந்த இதைச்சொன்னார்-எ-று. (௬)

மண்ணிடைப்புகுந்துமேலே வானிடைப்பறந்துமுன்னர்க்
கண்ணனுமயனுந்தேடிக்காண்பதற்கரியார்தம்மைப்
புண்ணியமன்றிலாடும்புனிதனைப்பரியிலேறப்
பண்ணுநும்பெருமையாலேவாழ்ந்ததுபாண்டிநாடு.

(இ-ள்.) பூமியைப்பிளந்தும், ஆகாயத்திற்பறந்தும், முன்னே மகாவிஷ்ணுவும், பிரமதேவனுந்தேடிக் காணுதற்கரியகடவுளாகியும், சிற்சபையிலே நிருத்தஞ்செய்பவருமாகிய பரமசிவனைக் குதிரையேறச்செய்த உம்முடைய பெருமையினாலே பாண்டிநாடெல்லாம் வாழ்ந்தது-எ-று. (௭)

தென்பெருந்துறையிலையன்றிருவடிசேவைசெய்து
துன்பமொன்றின்றிவாவிசூழ்கழுக்குன்றிற்சென்று
பொன்பொலிமன்றிலெய்திப்புத்தனைவாதில்வென்றி
ரென்பதுகேட்டுபின்னரியாவருமகிழ்ச்சிகொண்டார்.

(இ-ள்.) அழகியதிருப்பெருந்துறையி லெழுந்தருளி யிருக்கின்ற கடவுளுடைய திருவடியைவணங்கித் துன்பமொன்றுமில்லாமல் தடாகஞ்சூழ்ந்த திருக்கழுக்குன்றத்திற்குப்போய்ப்பின்பு சிதம்பரத்திற்குவந்து புத்தரைவாதுசெய்து வென்றீரென்பது கேள்விப்பட்டு யாவருமகிழ்ச்சி யடைந்தார்-எ-று. (அ)

ஆதியையமன்றுளாடுமையனையன்பினாலே
யோதியதமிழின்பாடலுள்ளவையோதவெண்ணி
மாதுயரகலவிங்குவந்தனனெழுதல்வேண்டும்
வேதியர்பெருமானின்றுவிளம்பிடுவிளங்கவென்றார்.

(இ-ள்.) ஆதியாகியும் சிற்சபையிலே ஆடுகின்ற ஐயனாகியுமிருக்கின்ற கடவுளைப்பத்தியினாலே நீர்சொல்லிய தமிழ்ப்பாடல்முழுவதும் ஓதுதற்குநினைத்து துன்பம்நீங்க இங்கேவந்தேன் அதை எழுதல்வேண்டும் பிராமணரில் உத்தமரேவிளக்கமாக இன்றுசொல்லவேண்டுமென்றார் அந்தப்பிராமணர்-எ-று. (கூ)

விண்ணகம்பரவுநாதனிவ்வகைவிளம்பச்சிந்தை
நண்ணுமன்புடையராகிநற்சடைமுடியார்தம்மை
யெண்ணருந்தமிழின்பாட்டாலியம்பியவையரப்போ
துண்ணெகிழ்ந்துளமெய்ஞ்ஞானவாசகமுவந்துசொன்னார்.

(இ-ள்.) தெய்வலோகத்திலுள்ள தேவர்கள் வணங்குகின்ற சபாநாயகர் இவ்வாறுசொல்ல மநத்திலேயிருந்த அன்பையுடையவராய் சடாமுடியையுடைய பரமசிவனை யெண்ணுதற்கரிய தமிழ்ப்பாடலாற் சொல்லிய மாணிக்கவாசகர் அப்போது அகமலர்ந்து உண்மைஞானத்தைத் தருகின்ற திருவாசகத்தை மகிழ்ச்சியுடனே சொன்னார்-எ-று. (ம)

அங்கவருரைத்தவெல்லாமம்பலத்தாடுமையர்
செங்கையிலேடுவாங்கித்தெளிவுறவரைந்தபின்னர்ப்

பொங்கியவாநளினரும்புகன்றிடாகலத்தை நயல்
பங்கினர்தமணைக்கோவைபாடுதல்வேண்டுமென்றார்.

(இ-ள்.) அவர்சொல்லிய பாடலெல்லாஞ் சிற்சபையி னாடுஞ் சபாபதியானவர் தம்முடைய திருக்கரத்தில் ஏட்டைப்பிடித்துக் கொண்டு தெளிவாகஎழுதியபின்பு மிகுந்த அருளையுடைய மாணிக்கவாசகருஞ்சொல்லித் தன்பாகங்க உமாதேவிபாகராகிய சபாநாயகரைப் பட்டுடைத்தலைவனுடைய ஒருகோவைபாடல் வேண்டுமென்றார் அந்தப்பிராமணர்-எ-று. (௯௧)

மன்னியதவத்தின்மிககார தற்குளமகிழ்ந்துகூற, முன்னு றவிருந்துகோவையெழுதினார்முடிந்தபின்னர்ப், பொன்னவிர்வேணியார்தாம்புத்தகஞ்சேமித்தங்கண், மின்னெனமறைந்தார்சொன்னவித்தகரயர்ச்சிகொண்டார்.

(இ-ள்.) நிலைபெற்ற தவத்திலேமிகுந்த மாணிக்கவாசகர் அதற்கு மனமகிழ்ந்துசொல்ல எதிரேயிருந்து திருக்கோவையா ரெழுதிமுடிந்தபின்பு பொன்போலும் பிரகாசிக்குஞ்சடையையுடையவர் தம்முடையபுத்தகத்தைக்கட்டி அவ்விடத்திலேகொண்டு மின்னலைப்போன் மறைந்தார் அதுகண்டு மாணிக்கவாசகர் வருத்தங் கொண்டார்-எ-று. (௯௨)

எழுந்தனரெங்குமோடிநாடினரென்கொலென்று
வழிந்தனர்மன்றுளாடுமாதியென்றறிந்தபின்னர்ப்
பொழிந்தனர்கண்ணீரெங்கேபோயினையென்றுமண்மேல்
விழுந்தனர்பரமானந்தவேலைவெள்ளத்துளானார்.

(இ-ள்.) எழுந்தார் எங்குமோடித் தேடிப்பார்த்தார் இதென்னாச்சரியமென்று மனமகிழ்ந்தார் சிதம்பரத்திலே திருத்தஞ்செய்கின்ற சபாபதியென்றறிந்து பின்புகண்ணீரிலே அநந்தபாஷ்பம்

பொழிந்தார் எங்கேபோயினுயென்று பூமியிலே விழுந்தார் பரமாநந்தச் சமுத்திரநீரிலழுந்தினுர்-எ-று. (௰௩)

செந்தமிழ்க்கன்புமிககார்சென்றுதம்மன்றிலெய்தி
யந்தரத்தவரைமாலையயனைகண்முகத்துநாடி
நந்தமக்கடிமைபூண்டுநயந்தவனொருவன்சொன்ன
விந்தநற்பாடல்கேண்மினென்றவாக்கருளிச்செய்தார்.

(இ-ள்.) உயர்ந்ததமிழினிடத்திலே அன்புமிகுந்த சபாநாயகர் புத்தகத்தையெடுத்துக்கொண்டு தமதுசபைக்கெழுந்தருளித்தேவர்களையும் மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும் பார்த்து நமக்கடிமைசெய்து நயப்பினைப்பெற்ற மாணிக்கவாசகர் சொன்ன இந்நல்லபாடல்களைக் கேளுங்களென்று அவர்களுக்கனுக்கிரகஞ் செய்தார்.-எ-று. (௰௪)

மெய்த்தவவாதவூரர்விளம்பிடவெழுதுமிந்தப்
புத்தகமன்றுளாடல்புரிந்தவனெழுத்தாமென்று
முத்தியையுதவுங்கோவைமுடிவிடத்தெழுதிப்பின்னர்ச்
சித்திரமலர்க்கையாலேதிருந்தமைக்காப்புஞ்செய்தார்.

(இ-ள்.) மெய்ம்மையுள்ள தவத்தையுடைய மாணிக்கவாசகர் சொல்ல எழுதப்பட்ட இந்தத்திருவாசகம் கநகசபையிலே திருத்தஞ்செய்கின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுத்தாமென்று மோட்சத்தைத் தருகின்ற திருக்கோவையார்முடிந்தவிடத்திலே யெழுதிப்பின்பு அழகியமலரையொத்த கையினுலே திருத்தமாக மைக்காப்புஞ்செய்தார்-எ-று. (௰௫)

வெண்பிறைமுடித்தவேணிவித்தகருலகுக்கெல்லா
நண்புடைவாதவூரர்நற்றவமுணர்த்தவெண்ணி
யெண்பெறுமுனிவர்விண்ணேரிறைஞ்சுமம்பலத்துவாயில்
வண்படிமீதேயுண்மைவாசகமுறைமையைவைத்தார்.

(இ-ள்.) வெள்ளிய மூன்றாம்பிறையைத்தரித்த சடாபாரத்தையுடைய சபாநாயகர் உலகத்துக்கெல்லாம் சினேகமுடைய மாணிக்கவாசகரது நல்லதவத்தை யெல்லாருக்கும் அறிவிக்க நினைத்துஎண்ணப்பெற்ற முனிவர்கள்தேவர்கள் வணங்கும் சபைவாசற்படியிலே திருவாசகமாகிய திருமுறையைவைத்தார்-எ-று. (௬௬)

வைத்தபின் பூசைசெய்யுமந்தணன்வந்துகண்டிப்
புத்தகமிங்குநண்ணும்புதுமைதெய்விகமாமென்று
இத்தமங்குநின்றுதில்லையுள்ளவர்கட்கெல்லா
மித்திறங்கூறல்வேண்டுமென்றுமன்றகன்றுபோந்து.

(இ-ள்.) படியிலேவைத்தபின்பு பூசைசெய்யும் ஒருபிராமணன்பார்த்து இப்புத்தகம் இங்கேயிருக்கும் புதுமைதெய்வீகமாமென்று மனமுருகிநின்றுதில்லைமாநகரத்தார்க்கு இதனைச் சொல்லவேண்டுமென்று சபையைவிட்டுப்போய்-எ-று. (௬௭)

செந்திருமருவுநதொல்லைத்தில்லைநன்னகரினுள்ளார்
தந்திருமுன்புசென்றுசாற்றினரிந்தநீர்மை
யந்தணர்மொழிந்தபின்னரதிசயமிதுவென்றோடி
வந்தனர்படிமேலண்ணல்வைத்தபுத்தகங்கண்டார்கள்.

(இ-ள்.) இலக்குமியானவள் வசிக்கின்ற பழைமையாகியசிதம்பரத்திலுள்ளவர்களிடத்துக்குப்போய் ஒருபுத்தகஞ் சபையின் படியிலே யிருக்கின்றதென்றுசொல்லப்பின்புஇது அதிசயமாமென்றுஓடிவந்து படியின்மேல் சபாநாயகர்வைத்த புத்தகத்தை எல்லாருங்கண்டார்கள்-எ-று. (௬௮)

யாவருந்தம்முண்முடியெம்பிறையுறையுமன்றுட்
டேவரும்புகுதவொண்ணாத்தெய்விகமிதுவென்றெண்ணி
மேவுமன்பதனாலண்ணலவிளம்பியசைவநூலோ
தாவுசெந்தமிழோவென்றுபார்ப்பதுதக்கதென்றார்.



மாணிக்கவாசகர்-ஸ்வாமியைக்காணுதல்.



1896 ஸ்வாமிதிருவாசகம்எழுதியது.

போற்றுமஞ்செழுத்துநீறும்புவியிசைவிளங்கத்துன்ப
மாற்றிடுஞ்சைவஞானவாசகம்புகலவந்தார்
சீற்றமில்புலியும்பாம்புஞ்சீர்பெறவிளங்குமன்றி
லேற்றினன்புலியூர்மேலைச்சிவபதமென்றுகண்டார்.

(இ-ள்.) யாவரும்போற்றுகின்ற பஞ்சாக்கரமும், விபூதியும், பூமியிலே விளங்கததுன்பத்தை நீக்குகின்ற சிவஞானத்தைவிதிக்கும் திருவாசகஞ்சொல்லவந்த மாணிக்கவாசகர் கோபமில்லாத வியாக்கிரபாதரும், பதஞ்சலியாரும், சிறப்புப்பெற விளங்குகின்ற பொற்சபையிலாடும், இடபவாகனந்தை யுடைய சபாபதியினது சிதம்பரம்மேலான சிவபதமென்று கண்டார்-எ-று. (௩)

ஐயரங்குறையுநாளிலாடகமன்றிலாடு
மெய்யர்தங்கருணையாலேவேதியவடிவங்கொண்டு
துய்யமுப்புரிநூன்மார்புந்துலங்குபுத்தகமுந்தோன்றச்
செய்யமென்பாதநோவச்சென்றுமுறுகின்றார்.

(இ-ள்.) மாணிக்கவாசகர் அந்தச்சிதம்பரத்தில் வசிக்கின்றநாளிலே பொற்சபையிலாடுகின்ற சபாபதியானவர் தமதுகிருபையினாலே பிராமணவடிவங்கொண்டு பரிசுத்தமாகிய முப்புரிநூலணிந்த மார்பும், விளங்குகின்ற புத்தகமுந்தெரியச் சிவந்ததிருவடிகளுந்நோக எழுந்தருளி எதிராகின்றார்-எ-று. (௪)

முன்புறநின்றவேதமுதல்வனைமுகத்திறைஞ்சி
யின்புறவாதவூராரிருமெனவிருந்தபின்னர்க்
கோன்புனைமறையின்மிக்கீரெங்குளீர்கூறுமென்ன [ர்.
மன்பெருவளஞ்சேர்பாண்டிமண்டலத்திருப்பேனென்று

(இ-ள்.) எதிரேவந்துநின்ற வேதபிராமணரைப்பார்த்து இன்பம்பொருந்த மாணிக்கவாசக ரிருமென்றுசொல்ல, அவரிருக்க

பின்பு பெருமையையுடைய வேதத்தில் மிகுந்தவரோ, நீரெங்கே யிருக்கிறது சொல்லுமென்றுகேட்க, விலைபெற்றபெரியவளத்தை யுடைய பாண்டியதேயத்திலே நாமிருக்கிறதென்றார் அந்தப்பிராமணா-எ-று. (௫)

பாண்டிநாடென்றபின்னர்ப்பரிவுடன்செறிவுகூறி
யிண்டுநீர்வருதல்வேண்டுங்காரியமியம்புமென்ன
வாண்டநாயகன்றனாணையாகியகருமநும்மைக்
காண்டலேயென்றுபின்னுங்கருத்துறவிதனைச்சொன்னார்

(இ-ள்.) பாண்டியதேயமென்று சொன்னபின்பு அன்புடனே உபசரித்து இங்கேநீர்வருவதற்குக் காரணஞ் சொல்லுமெனக் கடவுளது ஆக்கினையாகிய காரியம் உம்மைக்காணுவதே யென்று பின்னும் மநத்திலேபொருந்த இதைச்சொன்னார்-எ-று. (௬)

மண்ணிடைப்புகுந்துமேலை வானிடைப்பறந்துமுன்னர்க்
கண்ணனுமயனுந்தேடிக்காண்பதற்கரியார்தம்மைப்
புண்ணியமன்றிலாடும்புனிதனைப்பரியிலேறப்
பண்ணுநும்பெருமையாலேவாழ்ந்ததுபாண்டிநாடு.

(இ-ள்.) பூமியைப்பிளந்தும், ஆகாயத்திற்பறந்தும், முன்னே மகாவிஷ்ணுவும், பிரமதேவனுந்தேடிக் காணுதற்கரியகடவுளாகியும், சிற்சபையிலே நிருத்தஞ்செய்பவருமாகிய பரமசிவனைக் குதிரையேறச்செய்த உம்முடைய பெருமையினாலே பாண்டிநாடெல்லாம் வாழ்ந்தது-எ-று. (௭)

தென்பெருந்துறையிலையன்றிருவடிசேவைசெய்து
துன்பமொன்றின்றிவாவிசூழ்கழுக்குன்றிற்சென்று
பொன்பொலிமன்றிலெய்திப்புத்தனைவாதில்வென்றி
கொன்பதுகேட்டுபின்னரியாவருமகிழ்ச்சிகொண்டார்.

(இ-ள்.) அழகியதிருப்பெருந்துறையி லெழுந்தருளி யிருக்கின்ற கடவுளுடைய திருவடியையவணங்கித் துன்பமொன்றுமில்லாமல் தடாகஞ்சூழ்ந்த திருக்கழுக்குன்றந்திற்குப்போய்ப்பின்பு சிதம்பரந்திற்குவந்து புத்தரைவாதுசெய்து வென்றீரென்பது கேள்விப்பட்டு யாவருமகிழ்ச்சி யடைந்தார்-எ-று. (௮)

ஆதியைமன்றுளாடுமையனையன்பினாலே
யோதியதமிழின்பாடலுள்ளவையோதவெண்ணி
மாதுயரகலவிங்குவந்தனனெழுதல்வேண்டும்
வேதியர்பெருமானின்றுவிளமபிடுவிளங்கவென்றார்.

(இ-ள்.) ஆதியாகியும் சிற்சபையிலே ஆடுகின்ற ஐயனாகியுமிருக்கின்ற கடவுளைப்பத்தியினாலே நீர்சொல்லிய தமிழ்ப்பாடல்முழுவதும் ஓதுதற்குநினைந்து துன்பம்நீங்க இங்கேவந்தேன் அதுவெழுதல்வேண்டும் பிராமணரில் உத்தமரேவிளக்கமாக இன்றுசொல்லவேண்டுமென்றார் அந்தப்பிராமணர்-எ-று. (௯)

விண்ணகமபரவுநாதனிவ்வகைவிளம்பச்சிந்தை
நண்ணுமன்புடையராகிநற்சடைமுடியார்தம்மை
யெண்ணருந்தமிழின்பாட்டாலியம்பியவையரப்போ
துண்ணெகிழ்ந்துளமெய்ஞ்ஞானவாசகமுவந்துசொன்னார்.

(இ-ள்.) தெய்வலோகத்திலுள்ள தேவர்கள் வணங்குகின்ற சபாநாயகர் இவ்வாறுசொல்ல மநத்திலேயிருந்த அன்பையுடையவராய் சடாமுடியையுடைய பரமசிவனை யெண்ணுதற்கரிய தமிழ்ப்பாடலாற் சொல்லிய மாணிக்கவாசகர் அப்போது அகமலர்ந்து உண்மைஞானத்தைத் தருகின்ற திருவாசகத்தை மகிழ்ச்சியுடனே சொன்னார்-எ-று. (௰)

அங்கவருணாத்தவெல்லாமம்பலத்தாடுமையர்
செங்கையிலேடுவாங்கித்தெளிவுறவனாந்தபின்னர்ப்

பொங்கியவருளிறரும்புகன்றிடரகலத்தை நயல்
பங்கினர்தம்மைக்கோவைபாடுதல்வேண்டுமென்றார்.

(இ-ள்.) அவர்சொல்லிய பாடலெல்லாம் சிற்சபையி லாடுஞ் சபாபதியானவர் தம்முடைய திருக்கரத்தில் எட்டைப்பிடித்துக் கொண்டு தெளிவாகவெழுதியபின்பு பிருந்த அருளையுடைய மாணிக்கவாசகருஞ்சொல்லித் தன்பங்க உமாதேவிபாகராகிய சபாநாயகனைப் பட்டுடைத்தலைவனுடைய ஒருகோவைபாடல் வேண்டுமென்றார் அந்தப்பிராமணா-எ-று. (௰௧)

மன்னியதவத்தின் மிக்கார கற்குளமகிழ்ந்துகூற, முன்று நவிருந்துகோவையெழுதினர்முடிந்தபின்னர்ப், பொன்னவிர்வேணியார்தாம்புத்தகஞ்சேமித்தங்கண், பின்னெனமறைந்தார்சொக்னவித்தகரயர்ச்சிகொண்டார்.

(இ-ள்.) நிலைபெற்ற தவத்திலேமிருந்த மாணிக்கவாசகர் அதற்கு மநமகிழ்ந்துசொல்ல எதிரேயிருந்து திருக்கோவையா மெழுதிமுடிந்தபின்பு பொன்போலும் பிரகாசிக்குஞ்சடையையுடையவர் தம்முடையபுத்தகத்தைக்கட்டி அவ்விடத்திலேகொண்டு பின்னைப்போன் மறைந்தார் அதுகண்டு மாணிக்கவாசகர் வருத்தங்கொண்டார்-எ-று. (௰௨)

எழுந்தனரெங்குமோடிநாடினரென்கொலென்று
வழிந்தனர்மன்றுளாடுமாதியென்றறிந்தபின்னர்ப்
பொழிந்தனர்கண்ணீரெங்கேபோயினையென்றுமண்மேல்
விழுந்தனர்பரமாநந்தவேலைவெள்ளத்துளானார்.

(இ-ள்.) எழுந்தார் எங்குமோடித் தேடிப்பார்த்தார் இதென்ன ஆச்சரியமென்று மநமகிழ்ந்தார் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்கின்ற சபாபதியென்றறிந்து பின்புகண்ணிறலே ஆநந்தபாஷ்பப்

பொழிந்தார் எங்கேபோயினுயென்று பூமியிலே விழுந்தார் பர மாநந்தச் சமுத்திரநீரிலழுந்தினுர்-எ-று. (௫௩)

செந்தமிழ்க்கன்புமிக்கார்சென்றுதம்மன்றிலெய்தி
யந்தரத்தவரைமாலையயனைநன்முகத்துநாடி
நந்தமக்கடிமைபூண்டுநயந்தவனொருவன்சொன்ன
விந்தநற்பாடல்கேண்மினென்றவர்க்கருளிச்செய்தார்.

(இ-ள்.) உயர்ந்ததமிழினிடத்திலே அன்புமிகுந்த சபாநாயக ர் புத்தகத்தையெடுத்துக்கொண்டு தமதுசபைக்கெழுந்தருளித்தே வர்களையும் மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும் பார்த்து நமக்க டிமைசெய்து நயப்பினைப்பெற்ற மாணிக்கவாசகர் சொன்ன இந் தநல்லபாடல்களைக் கேளுங்களென்று அவர்களுக்கனுக்கிரகஞ் செ ய்தார்.-எ-று. (௫௪)

மெய்த்தவவாதவூரர்விளம்பிட வெழுதுமிந்தப்
புத்தகமன்றுளாடல்புரிந்தவனெழுத்தாமென்று
முத்தியையுதவுங்கோவைமுடிவிடத்தெழுதிப்பின்னர்ச்
சித்திரமலர்க்கையாலேதிருந்தமைக்காப்புஞ்செய்தார்.

(இ-ள்.) மெய்ம்மையுள்ள தவத்தையுடைய மாணிக்கவாசகர் சொல்ல எழுதப்பட்ட இந்தத்திருவாசகம் கநகசபையிலே திருத்த ஞ்செய்கின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுத்தா மென்று மோட்சத்தைத் தருகின்ற திருக்கோவையார்முடிந்தவிட த்திலே யெழுதிப்பின்பு அழகியமலரையொத்த கையினுலே திரு த்தமாக மைக்காப்புஞ்செய்தார்-எ-று. (௫௫)

வெண்பிறைமுடித்தவேணிவித்தகருலகுக்கெல்லா
நண்புடைவாதவூரர்நற்றவமுணர்த்தவெண்ணி
யெண்பெறுமுனிவர்விண்ணோரிறைஞ்சுமம்பலத்துவாயில்
வண்படிமீதேயுண்மைவாசகமுறையைவைத்தார்.

(இ-ள்.) வெள்ளிய மூன்றாம்பிறையைத்தரித்த சடாபாரத்தையுடைய சபாநாயகர் உலகத்துக்கெல்லாம் சினேகமுடைய மாணிக்கவாசகரது நல்லதவத்தை யெல்லாருக்கும் அறிவிக்க நினைத்துஎண்ணப்பெற்ற முனிவர்கள்தேவர்கள் வணங்கும் சபைவாசற்படியிலே திருவாசகமாகிய திருமுறையைவைத்தார்-எ-று. (௰௬)

வைத்தப்பின் பூசைசெய்யுமந்தணன் வந்துகண்டிப்
புத்தகமிங்குநண்ணும்புதுமைதெய்விகமாமென்று
சித்தமங்குருகிநின் றதிலலையுள்ளவர்கட்கெல்லா
மித்திறங்கூறல்வேண்டுமென்றுமன் றகன்றுபோந்து.

(இ-ள்.) படியிலேவைத்தபின்பு பூசைசெய்யும் ஒருபிராமணன்பார்த்து இப்புத்தகம் இங்கேயிருக்கும் புதுமைதெய்வீகமாமென்று மனமுருகிநின்றுதில்லைமாநகரத்தார்க்கு இதனைச் சொல்லவேண்டுமென்று சபையைவிட்டுப்போய்-எ-று. (௰௭)

செந்திருமருவுநதொல்லைத்தில்லைநன்னகரிலுள்ளார்
தந்திருமுன்புசென் றுசாற்றினாரிந்தசீர்மை
யந்தணாமொழிந்தபின்னரதிசயமிதுவென்றோடி
வந்தனர்படிமேலண்ணல்வைத்தபுத்தகங்கண்டார்கள்.

(இ-ள்.) இலக்குமியானவள் வசிக்கின்ற பழைமையாகியசிதம்பரத்திலுள்ளவர்களிடத்துக்குப்போய் ஒருபுத்தகஞ் சபையின் படியிலே யிருக்கின்றதென்றுசொல்லப்பின்புஇது அதிசயமாமென்றுஒடிவந்து படியின்மேல் சபாநாயகர்வைத்த புத்தகத்தை எல்லாருங்கண்டார்கள்-எ-று. (௰௮)

யாவருந்தம்முண்டியெம்பிறையுறையுமன்றுட்
டேவரும்புகுதவொண்ணாத்தெய்விகமிதுவென்றெண்ணி
மேவுமன்பதனாலண்ணலவிளம்பியசைவநூலோ
தாவுசெந்தமிழோவென்றுபார்ப்பதுதக்கதென்றார்.

(இ-ள்.) எல்லாருந்தங்களுக்குள்ளே பார்த்து எமதுகடவுளி ருக்கின்ற சபையிலே தேவர்களும் புருதரருக்கூடாத தெய்விகமி துவென்றுநினைத்துப் பொருந்துகின்ற அனபினுலே கடவுள்சொ ல்லிய சிவாகமமோ தமிழ்நூலோவென்று பார்ப்பது தகுதியாமெ ன்ருர்கள்-எ-று. (௰௧)

தேக்கியவருளுமன்புந்சிறந்தவரொல்லாருஞ்சொல்லும்
வாக்கினிலொருவன்சென்றுமலாகொடுவணங்கிச்செய்து
பூக்கமழ்சடையோன்வைத்தபுத்தகந்தன்னைசேம
நீக்கினரோதினுர்முனீதிகொளதவனுன்கும.

(இ-ள்.) அருளும் அன்பும்நிறைந்த தில்லைமூவாயிரவர்களெல் லாருஞ்சொல்லுகினற வாக்கிலவல்லவராகியஒருவர்போய் மலரை க்கொண்டு அருச்சித்து நமஸ்கரித்துப பரமசிவன்வைத்த புத்தகத் தை அவிழ்த்து எட்டைநீக்கிப் படித்தார் நீதியைக்கொண்ட அக வல்நான்கும்-எ-று. (உ௰)

நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

திருச்சதகமுதலாகச்சிறந்ததமிழறுநூறும்
விரித்தவகப்பொருட்கோவைவிளங்கவொருநானூறு
முரைத்தனர்பின்முடிந்தவிடத்துயர்வாதவூரன்மொழி
தரித்தெழுதுமம்பலவனெழுத்தென்றுசாற்றினுர்.

(இ-ள்.) திருச்சதகமுதலாகச் சிறக்கப்பெற்ற தமிழ்ப்பாடல் அறநூறும் விரித்துசசொல்லப்பட்ட அகப்பொருட்கோவை நா னூறுபாடலும் விளங்கப்படித்தார்கள் பின்பு அதுமுடிந்தவிடத்தி லேஇது மாணிக்கவாசகர்சொல்ல அழகிய திருச்சிற்றம்பலமுடை யார் கையெழுத்தென்று படித்தார்கள்-எ-று. (உ௧)

கேட்டவர்களெல்லாருங்கிளர்புளகங்குறுவேர்வு
காட்டிடலுங்கண்ணீருங்கசிந்துருகுஞ்சிந்தையுமா
யீட்டியமெய்த்தவமுடையோனியம்பியவித்தமிழன்றி
வீட்டுநெறிக்கினிச்சிவநூலவேறுளதோவென்றார்கள்.

(இ-ள்.) இந்தத் திருமுறையைப்படிக்கக் கேட்டவர்களெல்லா மெய்ப்புளகமும் குறுவேர்வுகொள்ளுதலும் ஆநந்தபாஷ்பமும் கசிந்துருகுமநமுங் கொண்டவராய் மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர்சொல்லிய இந்தத்தமிழல்லாமல் மோட்சவழிக்குச் சிவநூல் வேறுண்டோவென்று சொன்னார்கள்-எ-று. (உஉ)

பூணரவன்றிருநாமம்புகழுமருங்கவர்சொல்ல
யாணரிதன்பொருட்டேனையின்றுணர்வோமென்றெண்
மாணுடைமன்றகன்றேகிமறைவல்லார்போதிநிழல் [ணி
வீணருடன்பெருவாதுவென்றவர்முன்சென்றார்கள்.

(இ-ள்.) சருப்பாபரணந்தரித்த சபாநாயகரைப்பாடிய மாணிக்கவாசகர்சொல்ல அழகிய இதன்பொருளாகிய தேனை இன்றறிவோமென்று நினைத்துப பெருமைபொருந்திய சபையைவிட்டுப் போய் அரசமரநிழலிலேயிருக்கும் வீணராகியபுத்தருடன் பெருவாதுசெய்துவென்ற மாணிககவாசகர்முன்னே போனார்கள் தில்லைமூவாயிரவர்-எ-று. (உ௩)

சென்றவர்தந்திருமுன்புதிருமுறைவைத்தண்டர்பிரா
னின்றுசெயுஞ்செயலிதுவென்றியம்பினர்நின்றெல்லா
மென்றுறுமென்புன்பாடலுவந்தருளப்புவிமீதி [ரு
லன்றுசெயுந்தவமறியேனென்றழுதாரன்பாளர்.

(இ-ள்.) இப்படிப்போனவர்கள் அவரோதிரே திருமுறையை வைத்துத் தேவர்பிரானாகிய கடவுள் இன்றுசெய்தகாரியம் இதுவென்று சொன்னார்கள் அதுகண்டு எல்லாரும் அறபமாகியஎன்பாடலை மநமகிழ்ந்துகொண்டருளப் பூமியிலே அன்றுசெய்ததவத்தை யறியமாட்டேனென்றார் மாணிக்கவாசகர்-எ-று. (உச)

புண்ணியரிங்கிவ்வாறுபுலம்பியபின்புலியூரி
லெண்ணருமன்புடையார்களிதமுடனஞ்சலிசெய்து
பண்ணுலவுஞ்சிவஞானபபாடலைகொளும்படிநும்பா [ள்
னண்ணுமரனசெய்ததெனினீர் நவிலுமெனச்சொன்னார்க

(இ-ள்.) மாணிக்கவாசகர் இங்கே இப்படிப்புலம்பி அழுதபின்பு சிதம்பரத்திலிருக்கின்ற அளவற்ற அன்புடையவாகள் இதந்துடனே அஞ்சலியஸ்தராய்ப் பண்ணையுடைய ஞானபபாடலைக் கொள்ளும்படி உம்மிடத்தில், கடவுள்வந்து செய்தகாரியமென்ன சொல்லுமென்று கேட்டார்கள்-எ-று. (உரு

அல்லலெனும்பிறவியிலாரண்ணல்செயுஞ்செயல்யாவுஞ்
சொல்லியபின்புலியூரர்தொழுதுமநங்களிகூர்ந்து
தில்லையிலெமபெருமானைச்செப்பியவித்தமிழ்மாலை
நல்லவரும்பொருள்கூறவேண்டுமெனநவின்றார்கள்.

(இ-ள்.) துன்பமென்னும் பிறப்பில்லாத மாணிக்கவாசகர் சபாநாயகர்செய்த செய்கையெல்லாஞ் சொன்னபின்புதில்லைமூவாயிரவர் வணங்கி மநமகிழ்ச்சிகொண்டு சிதம்பரத்திலிருக்கின்ற எமதுகடவுளைச் சொல்லிய இத்தமிழ்ப்பிரபந்தத்திற்கு அருமையாகிய நல்லபொருள் சொல்லவேண்டுமென்று கேட்டார்கள்-எ-று. ()

ஓங்குபுகழ்திருவாதவூருறையும்பெருமானு
தேங்கியமெய்ச்சிவஞானச்சிந்தையுடன்களிகூர்ந்து

No. 8.



மாணிக்கவாசகர் கநகசபையையடைந்தது.

ஞானநடனபயில்சபாநாயகனாருமயிருந்தாளநெஞ்சினர்
மோனசுகந்தருடன்சிவபூசைமுயன்றாரயர்வ
றூனமிலன்புளசெதன்புலியூரிலுறைந்துசிறந்தவர்
வானவருழம்பரவுந்திருவாசகவின்னடநாகரந்தனர்.

(இ-ள்.) ஞானநாடகஞ்செய்கின்ற சபாநாயகருடைய திருநாமத்தை இயம்புகின்ற நெஞ்சையுடையவர்களும், மௌனமாய்ச்சுகத்தருடனே சிவபூசையிலேசெய்து முயன்றவர்களும், கெடுதலில்லாத அன்பையுடைய அழகியசிதம்பரத்தில வசித்துச சிறப்புப்பெற்றவர்களும், தேவர்களும, பரவுகின்ற திருவாசகத்தமிழின்பத்தைப் புசித்திருந்தார்கள்-எ-று. (கூஉ)

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

ஈனமிருந்தாளதோலுமெலும்புநரம்புஞ்சீயு
மானவுடற்சிவரூபமாமிதனைத்தெளியாம
லூனுடலுக்கினைதேடியுழன்றுலகிற்றடுமாறி
மாநரகிற்புகுநூமனிதர்மாயையவலைப்படுவார்கள்.

(இ-ள்.) இழிவுமிகுந்துள்ள தோலும்-எலும்பும்-நரம்பும் சீயுமானவுடல் சிவரூபமாகும இதனைத்தெளியாமல், மாமிசபிண்டத்துக்கிரைதேடிச் சஞ்சரித்து உலகத்திலேதடுமாறி கொடியநரகத்திலேபுகுவது என்ன.ஆச்சரியம மாயையினுடைய வலையிலகப்படுமனிதர்கள்-எ-று. (கூகூ)

சந்தவிருத்தம.

வாதவூரர்தணர்ந்திருவாய்மைமிளங்குதிருந்ததை, யோகினாரடியடுஞ்செவி யூடுமுகந்துகேட்டவா, போதமெய்ஞ்ஞானமுறுஞ்சுகபோகமுடன்புகழ்பெறுவார், படியில் பவங்கடொலைந்துபின்சேர்குவர்வண்சிவலோகமே.

(இ-ள்.) திருவாதவூரில் திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடைய உண்மைவிளங்கிய இந்தத்திருக்கதையைப் படித்தவர்கள் அன்புடனே காதிறலேகேட்டவர்கள் மிருந்த உண்மைஞானம பொருந்திய சுகபோகத்துடனே கீர்த்தியும்பெற்றுப் பிறவிச்சாகரமொழிந்து பின்புமௌத்தையுடைய சிவலோகம்பெறுவார்கள்-எ

அறுசீரகழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூதலமாதும்வாழ்கபொன்மழைபொழிந்துவாழ்க
வேதவாகமமும்வாழ்கவேந்தர்செங்கோலும்வாழ்க
தீதிலைந்தெழுத்துந்நீறுஞ்சிவனடியாருமவாழ்க
வாதவூரிறைபுராணம்படித்திடக்கேட்டோர்வாழ்க

(இ-ள்.) பூமிதேவியும்வாழ்க, பொன்மாரிபெய்துவாழ்க, வேதாகமங்களும் வாழ்க, அரசர் செங்கோலும்வாழ்க, குற்றமற்றபஞ்சாக்கரமும் விபூதியும் சிவனடியார்களும்வாழ்க, மாணிக்கவாசகருடைய புராணத்தைப்படித்தவர்களுங் கேட்டவர்களும் வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

திருவடிபெற்றசருக்கம்

முற்றிற்று

ஆ சருக்கம்-எ-க்கு-திருவிருத்தம்-ருசரு.

# திருவாதவூரர்புராணம்

## முற்றுப்பெற்றது.

அருண்மொழித்தேவரடியிணைசரணம்.

மாணிக்கவாசகர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

# அட்டவணை.





முற்றிற்று.